

# “தலைவா...!”

**- ரஜினி பிறந்தநாள் நேரடி ரிப்போர்ட்**

‘ஏதாவது நினைத்துக் கொண்டு, மனிதர் திருவண்ணாமலைக்கோ, பெங்களூருக்கோ கிளம்பிப் போய்விடப் போகிறார்!’

— ரஜினி வீட்டு வாசலில்

• குவிந்திருந்த ரசிகர் வெள்ளம்



• ஸ்டாலின்,
உதயநிதியுடன் ரஜினி



பன்னிரெண்டாம் தேதி அதிகாலையே கூடி விட்ட ரசிகர்களுக்கு இதுதான் பெரிய சந்தேகம். அன்று ரஜினியின் பிறந்த நாள்! ஆனால் ரசிகர்களை இந்த முறை ரஜினி ஏமாற்றவில்லை.

ரஜினி வீட்டுக்கு சுமார் 100 அடி முன்பே ரசிகர்கள் நிறுத்தப்பட்டார்கள். வெளியே ரஜினியின் உதவியாளர்கள் ரமேஷ், ஆறுமுகம் ஆகியோருக்கு ரசிகர்களை கட்டுப்படுத்தி நிறுத்தி வைப்பதற்குள் 'பெண்டு' கழன்று விட்டது.

உள்ளே வரவேற்பறையில் தொடர்ந்து டெலிபோன் சிணுங்கிக் கொண்டிருக்க, 'ஸார் முதல்வர் லைன்ல இருக்கார், மூப்பனார் பேசறாருங்க... வை.கோங்க...' என்று உள்ளே லைனை கனெக்ட் செய்து கொண்டிருந்தார் இன்னொரு உதவியாளரான ஜெயராமன்.

முதன் முதலாக நேரில் வாழ்த்த வந்த வி.ஐ.பி. குமரி அனந்தன். சிறிது நேரம் காத்திருந்து அவர் உள்ளே நுழைந்த அதே வேகத்தில், புகைப்படக் காரர்களும் ஸாடிலைட் டீவிக்காரர்களும் நிருபர்களும் உள்ளே நுழைந்தார்கள்.



• ரஜினியின் பூஜை அறை

மாடிப்படியை ஒட்டி கீழ்ப்பகுதி ஹாலில் ராதை-கிருஷ்ணர் சிலைகள் அலங் கரிக்கப்பட்டு வைக்கப்பட்டிருந்தன. பக்கத்தில் இரண்டு நாற்காலிகளில் ரஜினியின் தாய், தந்தை, காலமான அக்கா ஆகியோரது படங்கள், மாலையுடன். எதிரில் வாழைப்பழங் கள், ஆப்பிள் இன்னபிற. 'ராமர்' நிறத்தில் நீலப் பட்டுப் புடைவை சரசரக்க டென்ஷனுடன் ஓடியாடிக் கொண்டிருந்தார் லதா. கூடவே ஒன்றிரண்டு 'ஆஷ்ரம்' டீச்சர்கள், 'மேடத்தின்' கட்டளைக்கு ஏற்ப செயல்படத் தயாராக நின்று கொண்டிருந்தார்கள். பரபரப்பாக இருந்த அவரை 'ஸார், காலையில் எழுந்து கோயிலுக்கு எங்காவது போனாரா?" என்று கேட்க, "இன்னமும் பூஜையே முடியலை" என்று பரபரப்பைத் தொடர்ந்தார்!

முத்து படத்துக்குப் பிறகு பல மாதங்கள் தன்னுடைய 'பர்ஸனாலிட்டி' பற்றிக் கவலைப் படாமல் தாடியுடனும், மொட்டைத் தலையுடனும் காட்சியளித்து வந்த ரஜினி, அருணாசலத்திற்காக தாடியை மழித்து விட்டிருந்தார். நெற்றியில் விபூதி. முடி பழைய ஸ்டைலில் வளர்ந்திருக்க, பட்டு வேட்டி, பட்டுச் சட்டையுடன் மாப்பிள்ளையாக மாறியிருந்தார்.

குமரி அனந்தன் வந்து சென்றவுடன் அடுத்து ஸ்டாலின். மகன் உதய நிதியுடன் வந்திருந்தார். ஸ்டாலினின் கார், நேராக வீட்டு வளாகத்திற்குள்ளாகவே அனுமதிக்கப்பட்டது. ஸ்டாலின் பொன்னாடை போர்த்திய போது புகைப்படக்காரர்களைப் பார்த்து 'தாடி எடுத்திட்டது நல்லாயிருக்கில்ல?' என்று தம் பிரத்

யேக ஸ்டைலில் கையை ஆட்டியபடி ரஜினி கேட்க, அனைவரும் ஆமோதித்தார்கள்.

பின்னர் ஸ்டாலினை மாடியிலுள்ள தன்னுடைய தனியறைக்குக் கூட்டிச் சென்று பத்து நிமிடத்துக்கு மேல் பேசி, வாசல் வரை வந்து வழி அனுப்பினார்.

ஸ்டாலின் மகன் உதய நிதியிடம், "நீங்கள் ரஜினி ரசிகரா?" என்று கேட்டபோது, 'ஆமாம் ஸார்' என்று சிரித்துக் கொண்டே சொன்னார் அவர்.

இதற்கிடையில் மதுரையிலிருந்து மு.க. அழகிரியும் முதல்வரின் துணைவியார் தயாளு அம்மாவும் போனிலேயே வாழ்த்துச் சொன்னார்கள்.

அதன் பின் ரசிகர்களைச் சந்திக்கத் தயாரானார் ரஜினி. சத்திய நாராயணாவும், உதவியாளர்களும் மிகுந்த டென்ஷன் பார்ட்டிகளாக மாறிவிட்டார்கள். கேட் அருகில் ரஜினி நின்று கொண்டிருக்க, ஒவ்வொரு ரசிகராக வந்து பொன்னாடை, மாலை, புத்தகங்கள் என்று கொடுத்து விட்டுப் போனார்கள். பலர் 'தலைவா' என்று காலில் விழுந்து எழுந்தனர். ஆனால் இப்படி ஒவ்வொருவராகப் பார்த்துக் கொண்டிருந்தால் படப்பிடிப்புக்குப் போக முடியாது என்று ரஜினி படபடக்க, (ஏவி.எம்மில் 'அருணாசலம்' நடந்து கொண்டிருக்கிறது!) ஒரு மேஜை மீது ஏறி நின்று மொத்தமாக ரசிகர் களைப் பார்த்து ஒரு 'கும்பிடு' போட்டுச் செல்வதாக முடிவாயிற்று.

இந்த ஏற்பாடுகளை சந்தி செய்து முடிப்பதற்குள், சைதை துரைசாமி, சைதை கிட்டு ஆகியோர் வந்து வாழ்த்தி விட்டுச் சென்றனர்.

அப்போது ரஜினியிடம் சற்று நெருங்கி, "கடந்த சில வருடங்களாக உங்கள் பிறந்த நாளின் போது சென்னையிலேயே இருக்க மாட்டீர்கள். காரணம், ஜெயலலிதாவுக்கு இருந்த பாதுகாப்பு ஏற்பாடுகளால், உங்கள் ரசிகர்கள் தொல்லைகளுக்கு ஆளாகக் கூடாது என்பது தானா?" என்று நாம் கேட்டபோது, "அப்படியில்லீங்க. அந்தந்த சமயத்தில் ஷூட்டிங். அது... இதுன்னு வெளியூர்ல மாட்டிக் கொண்டேன். அவ்வளவுதான்" என்றார்.

அந்த சமயம் பார்த்து படம் எடுத்துக் கொண்டிருந்த புகைப்படக்காரர்களுக்கு ரஜினியுடன் சேர்ந்து படம் எடுத்துக் கொள்ளும் ஆசை வந்து விட்டது. நேரத்தைப் பற்றிக் கவலைப்படாமல் எல்லோருடனும் படம் எடுத்துக் கொண்டார் ரஜினி.

உதவியாளர் ஒருவர் வந்து 'டைரக்டர் ஸ்ரீதர் வந்திருக்கிறார்' என்று கூற, "உள்ளே வரச் சொல்லய்யா" என்றார்.

"இல்லீங்க. அவரால் நடக்க முடியலை" என்றவுடன் வாசலுக்கு விரைந்தார்.

பக்கவாதத்தால் பாதிக்கப்பட்டு நடக்கவே சிரமப்பட்ட ஸ்ரீதர், ரஜினியைப் பார்த்தவுடன் "நீங்க பல சிகரங்களைத் தொடணும்!" என்று மனமார வாழ்த்தினார்.

"இப்படிக் கஷ்டப்பட்டு எதுக்காக வரணும்?" என்று செல்லமாக அவரைக் கடிந்து கொண்டார் ரஜினி.

இதற்கிடையில் தெருவில் மேடை போடப்பட்டதும், நூறடி தொலைவில் நின்று கொண்டிருந்த ரசிகர்கள், பக்கத்தில் வருமாறு அழைக்கப்பட்டனர். ஸிக்னல் கொடுக்கப் பட்டதும் கணுக்கால் அளவு இருந்த தண்ணீரைக் கூடப் பொருட்படுத்தாமல், 'தலைவா' என்று ஏகக் கூச்சலுடன் ஓடி வந்தார்கள் ரசிகர்கள். அவர்களைக் கட்டுப்படுத்தி நிற்க வைப்பதற்குள் போலீஸுக்கும் உதவியாளர்



• சௌந்தர்யாவுக்கு கேக் ஊட்டுகிறார்

களுக்கும் வேர்த்து விறுவிறுத்து விட்டது! உள்ளேயிருந்து விறுவிறுவென்று வந்த ரஜினி, தாவி மேடையில் ஏறி எல்லோருக்கும் வணக்கம் சொல்ல, உற்சாகத்தில் அந்த ஏரியாவே அதிர்ந்தது! பின்னர் மேடையில் இருந்து இறங்கி வீட்டிற்குள் வருவதற்குள் கீழே தண்ணீர் இருப்பதையும் பொருட்படுத்தாமல், தட, தடவென காலில் விழுந்தார்கள் பலர்.

இந்த அமர்க்களமெல்லாம் முடிந்த பிறகு வந்தார் சரத்குமார். இதற்குள் மணி ஒன்பதே கால் ஆகிவிடவே, ஷூட்டிங் போக வேண்டுமென்று பரபரத்தார் ரஜினி. ரசிகர்கள் தொல்லை இருந்தாலும், சமாளித்துக் கொள்ளலாம் என்று அம்பாஸிடரில் கிளம்பி விட்டார். வழியெல்லாம் கூப்பிய கையுடன் செல்ல, கார்



• கோயில் பிரசாதங்களை வழங்குகிறார்கள்

ஏ.விஎம்முக்கு விரைந்தது.

"கிட்டக்க போய் பார்க்க முடியலீங்க. ஆனால் கும்பிட்டுக்கிட்டே போனதைப் பார்த்தேங்க... அதுவே ஆயிரம் முறை பார்த்ததற்குச் சமம்" என்று சொன்னார் திருச்சி மணச்சநல்லூரைச் சேர்ந்த த.மா.கா மகளிர் அணித் தலைவி லூர்து மேரி.

## லொகேஷன் 2/ஏவிஎம். ஸ்டுடியோ.

எட்டாவது தளத்தில்தான் அருணாசலம் ஷூட்டிங். உள்ளே போக பலத்த கெடுபிடி. 'அடையாளக் கார்டு' இருக்கா என்று கேட்டபடி அனுப்பிக் கொண்டிருந்தார்கள். தயாரிப்பாளர்களில் ஒருவரான நாகராஜ ராஜா மிகவும் கலவரத்துடன் ரஜினியை மேக்கப் அறையிலிருந்து எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். தளத்துக்கு வெளியே கொஞ்சம் ஒதுக்குப்புறத்தில் பாட்டு சீனுக்கான ரிகர்சல் நடந்து கொண்டிருந்தது. மஞ்சளும் சிவப்பும் கலந்த குடைகளை கையில் வைத்துக் கொண்டு, இரண்டு வரிக்கு இருபது முறை ரிகர்சல் பார்த்துக் கொண்டிருந்தார்கள். சிறிது நேரம் கழித்து, பத்திரிகையாளர்களையும் புகைப்படக்காரர்களையும் உள்ளே அழைத்துக் கொண்டு போனார் நாகராஜ ராஜா.

செட்டிற்குள்ளே ரவிச்சந்திரன், வெண்ணிற ஆடை நிர்மலா, அரக்கு கலர் உடையில் அசத்திய சவுந்தர்யா.

அது ஒரு பெரிய பங்களா செட். இருபுறமும், படிகள் மேலிருந்து இறங்கி வர, நடுநாயகமாக உள்ள ஹாலில் திண்டு, மெத்தைகள். சுற்றி குழந்தைகள் முதல், பாட்டிமார்கள் வரை இருந்தார்கள். ஏதோ விசேஷம் நடக்கும் சூழ்நிலை. யூனிட்டிலிருக்கும் தோழரின் வாயைக் கிளறினோம்.

"சவுந்தர்யாவைப் பொண்ணு பார்க்க வர்றார் ரஜினி. அப்போது 'மாப்பிள்ளைக்கு பாடத் தெரியுமா' என்று கேட்கிறார்கள். அவர் பாட, பெண் எதிர்ப்பாட்டு பாட, ஒரே சுளேபரம்தான். இதுதான் ஸீன்" என்றார் அவர்.

இதற்கிடையில் காதுகளில் சிறு வளையத்தோடு, டைட் பேண்ட், சட்டை, கூப்பிய கரங்களோடு செட்டுக்குள்ளே வந்தார் ரஜினி.

"என்ன ஆரம்பிக்கலாமா?" என்று டைரக்டர் சுந்தரை ரஜினி கேட்க, 'நாங்க ரெடி ஸார்' என்றார் அவர்.

இதற்குள் புகைப்படக்காரர்களைப் பார்த்த ரஜினி, "ஒரு ஷாட் எடுத்துட்டு பிறகு வைச்சுக்கலாம்" என்றார். ஆனால் நமது யோகா, 'நீங்க கேக் வெட்டிட்டீங்கன்னா, படம் எடுத்துட்டு நாங்க கிளம்பி விடுவோம்' என்றதும் 'சரி அப்படியே செய்யலாம்' என்று ஒப்புக் கொண்டார் ரஜினி.

பெரிய மேஜை ஒன்று கொண்டு வரப்பட்டது. இரண்டுக்கு ஒன்றரை அடி அளவில் தாஜ் கோரமண்டலில் செய்த கேக். ஒரே ஒரு மெழுகுவர்த்தியை அதில் ஏற்றி ரஜினி அணைக்க, சவுந்தர்யா மற்றும் யூனிட் 'ஹாப்பி பர்த் டே' பாடிற்று! பின்னர், "ஸார், கேக் வெட்டுங்க...." என்றவுடன், ஒவ்வொரு துண்டாக வெட்டி, தயாரிப்பாளர், டைரக்டர், வெ.ஆ. நிர்மலா, ரவிச்சந்திரன் ஆகியோருக்கு ஊட்டினார் ரஜினி.

"சவுந்தர்யாவுக்கு கொடுக்கலேன்னா அழுதுடுவாங்க" என்றபடி அவருக்கும் ஒரு துண்டு ஊட்டி விட்டார் ரஜினி. "செந்தில் அண்ணன் எங்கே" என்று கேட்டவுடன், மறைந்திருந்த செந்தில் முன்னுக்கு வந்தார். ரஜினி செந்திலுக்கு ஊட்டிவிட, அவர் ரஜினிக்கு ஊட்டிவிட, ஒரே கல, கலாதான்!

ரஜினியின் பிறந்த நாள் கேக்கில் 'An institution by himself. To our dearest hero' என்று கிரீமில் பொறிக்கப்பட்டிருந்தது!

— ஸ்ரீநிவாசன்

படங்கள் : யோகா

கல்கி 12.1.97

பொங்கல் சிறப்பிதழில்

# ஆசை நெகிழ

முற்றிலும் மாறுபட்ட விருந்து!

இந்திரா சௌந்தர்ராஜன் எழுதும்

புதிய தொடர்கதை ஆரம்பம்!

"குடும்பத்தோட அருமையை முழுமையா இப்ப உணர்ந்துட்டிருக்கிற என்னை சரியாத்தான் இந்தப் பகுதிக்கு தேர்ந்தெடுத்திருக்கீங்க" என்றார் வி.கே ராமசாமி.

இயல்பான நகைச்சுவைக்குப் பேர்போன இவர் நம்மிடம் பேசியபோது நகைச்சுவை தெரிக்கக் காணோம். என்றாலும் மனத்தில் பட்டதை மறைக்காமல் அவர் வெளிப்படுத்தியதை உணர முடிந்தது.



* இரண்டாவது மகனுடன் வி.கே.ஆர்.

இளம் வயதிலேயே குடும்பத்தைவிட்டுப் பிரிந்தவர் இவர். "அப்பா பேரு தங்கம் செட்டியார். அம்மா பேரு அங்கம்மாள். விருதுநகரிலே வசித்தோம். எனக்கு மூணு சகோதரர்கள். இரண்டு சகோதரிகள். சின்ன வயசிலே இருந்தே நாடகத்திலே நடிக்கணுங்கிற ஆசை நிறைய உண்டு.

# ஏவி.எம். ஏற்றிவைத்த

மூணாவது ஃபாரத்தில் (எட்டாம் வகுப்பு) காலாண்டுப் பரீட்சையை முடிச்ச கையோடு வீட்டிலேயிருந்து கம்பி நீட்டினேன். யதார்த்தம் பொன்னுசாமி பிள்ளையின் மதுரை ஸ்ரீ பாலகான சபாவில் நடிகனாகச் சேர்ந்தேன். அதற்குப் பிறகு நாடகம், சினிமான்னு பிரபலமடைந்து, பல வருடங்கள் ஆன பிறகும் எங்க வீட்டிலேயிருந்து என்னைத் தொடர்பு கொள்ளலே. நானும் அவங்களைத் தேடிப் போகல்லே" என்கிறார் வி.கே.ஆர்.



* ரமணி

இருபது வயதிலேயே சினிமாவில் நுழைந்தாலும், திருமணம் ரொம்பத் தாமதமாக-நாற்பத்தி இரண்டாவது வயதில்தான்!

"எனக்குச் சரியான பின்னணி இல்லேங்க. ஏதோ காட்டில் மதயானை திரிவது போல வாழ்ந்துகிட்டிருந்தேன். யாரு எனக்குப் பெண் கொடுப்பாங்க? நண்பர்கள்னு நான் நினைச்சவங்கல்லாம் பணத்துக்காக மட்டுமே என்னோடு இருந்தவங்கன்றதை ரொம்ப லேட்டாத்தான் புரிஞ்சிக்கிட்டேன். அப்போ இரண்டு பிரபல கவிஞர்கள் இருந்தாங்க. அவங்ககிட்டே பாட்டு கத்துக்கப் போனேன். அவங்க பாட்டைவிட 'பாட்டில்களைத்'தான் எனக்கு அதிகம் கற்றுத்தந்தாங்க. போதாத வேளை, என் மூளையும் மங்கிடுச்சு!

"ஒரு கெட்ட பழக்கத்துக்கு அடிமையானால் தொற்று நோய் மாதிரி விதவிதமான தப்புப் பழக்கங்களும் தொடருமே. சூதாட்டம், பெண்கள்னு பல சகதிகளிலே மாட்டிக்கிட்டேன். இந்த நிலையிலேதான் ரமணி என்னைக் காப்பாத்தினாங்க (ரமணி இவரது மனைவி).

"அதற்கு முன்னே சில கெட்ட பழக்கங்களுக்கு முற்றுப்புள்ளி வைத்த

நல்லவங்களைப் பற்றியும் குறிப்பிட்டே ஆகணும்.

"பந்தயக் குதிரைகளெல்லாம் வாங்கி வச்சிருந்தேன். ஒரு முறை குதிரைப் பந்தயத்திலே ஜெயிச்சவங்களுக்குப் பரிசுகள் கொடுக்க எஸ்.எஸ். வாசனை ஏற்பாடு செய்திருந்தாங்க. அந்த முறை "ப்ளூ பெல்"ங்கிற என்னுடைய குதிரை முதலிலே வந்திருந்தது. என்னுடைய பெயரை அறிவித்தபோதுகூட அது நானாக இருக்கும்னு வாசன் எதிர்பாக்கல்லே. கோப்பையைப் பெற நான் வந்து நின்னதும் அவருக்கு ஒரே அதிர்ச்சி! நாடகங்களிலெல்லாம் என் நடிப்பை அவர் ரசித்திருக்கிறார். விழா முடிந்ததும் என்னைத் தனியாக அழைத்துச் சென்று 'இந்தக் குதிரைப் பந்தயமெல்லாம் நிலையான தொழில் அல்ல. விவரம் புரியாமல் சேர்ந்திருக்கே.

# விளக்கு!

அற்புதமான டைமிங்கோடு வசனம் பேசும் நல்ல நடிகனான நீ, தப்பான வழியிலே மாட்டிக்கக் கூடாது' என்றார். அவ்வளவு பெரிய மனுஷர் இப்படிச் சொன்னதும் உருகிட்டேன்!

"அன்று மாலையே பயிற்சியாளர்களைக் கூப்பிட்டு என் மூன்று பந்தயக் குதிரைகளையும் விற்க ஏற்பாடு செய்துட்டேன். பிறகு விஷயத்தை அறிஞ்சதும் வாசன் அதிசயப்பட்டார். 'நீ இருக்கிற வரை சினிமா உன்னை விடாது'ன்னு வாழ்த்தினார்!

"அதே மாதிரி இன்னொரு புண்ணியத்தைக் கட்டிக்கிட்டவர் எம்.ஜி.ஆர். சினிமாவில் பிரபலமாவதற்கு முன்பே அவர் எனக்குப் பழக்கம். பின்னாளில் அவருடைய பல படங்களில் எனக்கு வாய்ப்புக் கிடைத்தது. 'சங்கே முழங்கு' பட ஷூட்டிங்கின் நடுவில் 'அண்ணே நாமெல்லாம் யாரு?' என்றார். 'நடிகர்கள்' என்றேன். 'அடிப்படையில் நாம நாடகக்காரர்கள்தானே?' அப்படின்னார். பிறகு, 'நமக்கு முன்னே கலைவாணர், துரைராஜன், சாமிநாதன்னு பல திறமையான நாடக நடிகர்கள்–சினிமாவிலும் பிரபலமானவர்கள்–இருந்திருக்காங்க. அவங்களெல்லாம் இவ்வளவு சீக்கிரம் இறந்ததுக்குக் காரணமே அவங்க உடம்பைப் பார்த்துக்காததுதான். ஒரு நடிகன்றவன் எப்பவும் உடல் ஆரோக்கியத்தோடு தன்னைத் தயார் நிலையிலே வச்சிக்கணும். இல்லேன்னா வாய்ப்புகள் வேறு யாருக்காவது போயிடும். தயவு செய்து உங்க உடம்பைப் பார்த்துக்குங்க' என்றார். அவர் சொன்னதிலே இருந்த உண்மையும், 'குடிக்காதீங்க'ன்னு நேரடியாச் சொல்லாமல் அதை உணர்த்திய விதமும் சுருக்குன்னு தைச்சது. அன்னியிலிருந்து குடியை விட்டுட்டேன்."

• ரகு



ரமணியும் நாடகங்களிலும், சினிமாக்களிலும் நடித்துக் கொண்டிருந்தவர்தான்.

"நிறைய வருமானம், நிறைய நண்பர்கள். வீட்டில் சமைக்க ஆளில்லாமல் ஹோட்டல் சாப்பாடு. ஒரு நலை சிறந்த நடிகர் இப்படியொரு தவறான வழியில் வாழ்கிறாரேன்னு எனக்கு ரொம்ப வருத்தமாயிருந்தது. அவரிடம் நான் கேட்டது 'நான் உங்களை வாழ்நாள் முழுவதும் பாதுகாக்கணும்னு விரும்பறேன்' என்பதுதான். தாரமாக மட்டுமில்லாமல் ஒரு தாயாகவே இருக்க முடிவு செய்தேன். அந்த முடிவை நினைச்சு இப்பவும் சந்தோஷப்படுகிறேன். என் பூர்வஜென்மப் புண்ணியம்தான் இவரை என்னிடம் சேர்த்ததுன்னு உறுதியாக நம்பறேன்" என்றார் திருமதி ரமணி.

திருமண வாழ்வில் இரண்டு பிள்ளைகள். மூத்த மகன் ரகு 'விக்னேஷ்வர்', 'கட்டப்பஞ்சாயத்து' ஆகிய படங்களை இயக்கியவர்.

"சொந்தத் தயாரிப்பான 'ஜோடிப் புறா'விலே வில்லனாக நடிச்சிருக்கான். தொடர்ந்து நடிடான்னேன். டெக்னிகல் சைடிலே போக விருப்பம்னுட்டான். நானே எங்கப்பா பேச்சை மீறி வந்தவன்தானே?" என்கிறார் வி.கே.ஆர். ரகுவின் மனைவி தனலட்சுமி, நடிகர் ஓ.ஏ.கே.தேவரின் மகள். இவர்களுக்கு மகாலட்சுமி என்ற ஒ

பெண் குழந்தை.

இரண்டாவது மகன் ரவிகுமார். ரியல் எஸ்டேட்டிலும் ஓரளவு திரைப்பட விநியோகத்திலும் கவனம் செலுத்துபவர். "காலேஜிலே படிச்சதிலிருந்தே ஷீபான்ற கிறித்துவப் பெண்ணைத் தொடர்ந்து ஏழு வருடங்களாகக் காதலிச்சான். இவர் காதில் விஷயம் எட்டாமல் பார்த்துக்கிட்டேன். விவரம் தெரிஞ்சதும் 'இதிலே என்ன தப்புன்னு' அவங்களுக்கு கல்யாணம் செய்துவச்சார். அவங்களுக்கு இப்போ டான்யான்ற ஒரு பெண் குழந்தை இருக்குது" என்றார் திருமதி ரமணி.

**வீ**ட்டிலே வி.கே.ஆர். எப்படி? ரொம்ப நகைச்சுவையாகப் பழகுவாரோ?

"ஐயோ, தூர்வாசரின் மறு அவதாரம்! அவர் சொன்னபடிதான் நடக்கணும். ஆனால் குணம் தங்கம்" என்றார் அவரது திருமதி.

குடும்பத்தைப் பற்றித்தான் கட்டுரை என்றாலும் சிவாஜி கணேசனோடு தமக்கேற்பட்ட இனிய அனுபவங்களை அடுக்கினார் ராமசாமி. 'வேலைக்காரன்' படப்பிடிப்பின்போது ஆக்ராவில் தாம் கேட்டுக் கொண்டதை நினைவில் கொண்டு தம்மை அருணாசலம் படத் தயாரிப்பாளர்களில் ஒருவராக ரஜினி ஆக்கியதைக் குறிப்பிட்டார்.

"கொஞ்சம் படிச்சிருந்தா ஒரு குமாஸ்தாவாகவாவது போயிருப்பேன்' என்று சொன்னேன். 'நல்ல வேளை நீங்கள் படிக்கல்லே. அதனாலேதான் தமிழகத்தில் கோடிக்கணக்கான பேருக்குத் தெரிஞ்சவரா ஆயிட்டீங்க' என்றார் சோ. திரையுலகத் தொழில் நண்பர்கள், பத்திரிகையாளர்கள், ரசிகர்கள் அத்தனை பேரின் வாழ்த்துக்களுக்கும் பாத்திரமாகியிருக்கேன். 1947 தொடக்கத்திலே ஏவி.எம்.மின் 'நாம் இருவரில்' முதலில் நடித்தேன். அவங்க ஏத்தி வச்ச இந்த விளக்கு அணையாம, அவங்க பொன்விழாப் படமான 'மின்சார கனவுகளி'லேயும் நடிக்குது..."

சினிமாவே குடும்பமாக நாற்பத்திரண்டு வயதுவரை வாழ்ந்தவர் இன்னமும் அந்தப் பற்றை விடாமல் இருக்கிறார்.

-அருண் சரண்யா

படங்கள்: யோகா

**சி.சு. செல்லப்பா, பழம்பெரும் எழுத்தாளர். குறிப்பிடத்தகுந்த இலக்கிய விமர்சகர். தமது 'எழுத்து' என்கிற இலக்கியப் பத்திரிகை மூலம் ஏராள கவிஞர்களை உருவாக்கியவர். தம் இலக்கிய முயற்சிகள் பாதிக்கப்படக் கூடாது என்பதாலேயே எங்கும் கைகட்டி வேலை பார்க்காதவர். எழுத்தே வாழ்க்கையாக வாழ்பவர்கள் வாழ்வில் எதிர்நீச்சலுக்கா பஞ்சம்?**



# நகைகளை விற்று புத்தகம் போட்டவர்!

இன்றைக்குத் தம் எண்பத்தைந்து வயதிலும் மனம் தளராமல் எதையாவது எழுதிக் கொண்டே இருக்கிறார் சி.சு. செல்லப்பா! அண்மையில் எழுதி நிறைவு செய்துள்ள சுயவர லாற்று நாவல் 'சுதந்திர தாகம்' மூன்று தொகுதிகளில் இரண் டாயிரம் பக்கங்கள்! எப்படி யும் அச்சில் பார்த்து விட வேண்டும் என்கிற படைப் பாளியின் துடிப்பில் கம்ப்யூட்டர் அச்சு முறையில் ஒரே ஒரு பிரதியை மட்டும் அச்சிட்டு வைத்திருக்கிறார். 'கையெழுத்துப் பிரதியை விடத் திருத்தமாக இருக்கட் டுமே' என்று சொல்கிற செல்லப்பா இதற்குச் செலவிட்டிருப்பது பதினெட்டாயிரம் ரூபாய்!

அமெரிக்காவில் வாழும் தமிழிலக்கிய அன்பர்களின் அமைப்பான 'விளக்கு', புதுமைப்பித்தன் இலக்கியப் பரிசு என ஒன்றை நிறுவி இருபத்தையாயிரம் ரூபாய் பரிசு தர சி.சு.செ. அவர் களைத் தேர்ந்தெடுத்தது. செல் லப்பா பணம் பெறத் தயங்கினார். 'வெளிவர வாய்ப்பின்றி இருக்கும் படைப்பு நூலை வெளியிடுவதே, தக்க கௌரவிப்பாக இருக்கும்' என்று சொன் னார். 'விளக்கு' ஏற்றது. செல்லப்பாவின் 'என் சிறுகதைப்பாணி' என்ற நூலைக் கடந்த ஆண்டில் வெளியிட்டது.

'ஏதோ வயிறு காயாமல் சாப்பிட வேண்டும்; அது போதும்' என்கிற எண்ணம்தான் எப் போதும் செல்லப்பாவுக்கு. ஆனால் அவர் மனைவியிடம் ஐம்பது பவுன் நகைகள் இருந்தன.

"பெண் பெற்றிருந்தால் கல்யாணம் செய்து, அதற்குப் போட்டிருக்க மாட்டாயா? அப்படித் தான் புஸ்தகமும்..." என்று செல்லப்பா கேட்க, அத்தனை நகையும் பதிப்பு, புத்தக வெளியீடு என்றே கரைந்தது! புத்தகங்கள் மேல் அவரது காதல் அத்தகையது!

தேச விடுதலைப் போரில் ஈடுபட்டு ஆறு மாதம் சிறை சென்றவர் செல்லப்பா. மூன்று மாதம் வேலூரில், மூன்று மாதம் ஆந்திர மாநிலம் அலிப்பூர் சிறையில்!

விடுதலையாகி வரும் போது ஜெயில் அதிகாரி களின் கண்களில் மண் ணைத் தூவிக் கிளப்பி வந்தது '623' என்கிற பித் தளையிலான கைதி எண் வில்லை! இன்றைக்கும் அது செல்லப்பாவின் மிகப் பெரிய பொக்கிஷம்! (சிறையிலிருந்த காலத்தை 'மூடி இருந்தது' என்கிற அற்புதமான சிறுகதையாக எழுதியிருக்கிறார்!)

முழுமையான காந்தியவாதியான செல் லப்பா, தியாகிகளுக்கு என்று வழங்கியிருக் கக்கூடிய ஐந்து ஏக்கர் நிலத்தைப் பெற மறுத் தவர். இருபத்தாறு ஆண்டுகளாக மறுக்காமல் பெறுவது தியாகி பென்ஷன் மட்டுமே. உத்தி யோகம் என்று ஓர் இடத்தில் 'கட்டுப்பட்டு' வேலை பார்த்தது தினமணியில் ஆறு ஆண்டு கள் இருந்தபோதுதான். அப்போது வார



அனுபந்தத்துக்குப் பொறுப்பு ஏற்று, 'தினமணி கதிர்' என்று நாமகரணம் செய்தவரும் செல்லப்பாதான்! அந்த நாட்களில் பி.எஸ். ராமையாவின் கதைகளை வாரம் தவறாமல் வெளியிட்டவர் செல்லப்பா. பள்ளி வயது முதலே ராமையா, பிச்சமூர்த்தி போன்றவர்களால் ஈர்க்கப்பட்டவர்.

ராமையாவைப் பற்றி சி.சு.செ. சொன்ன ஓர் உண்மை நிகழ்ச்சி : "அவருக்கு ஒரு குழந்தை பிறந்தபோது, மனைவியை மருத்துவ மனையிலிருந்து வீட்டுக்கு அழைத்து வர நூறு ரூபாய் தேவைப்பட்டது. அவரிடமிருந்தது ஐம்பது ரூபாய் மட்டுமே. அன்றைய இரவிலேயே ஒரு கதையை எழுதி விகடனில் கொண்டு போய்க் கொடுத்து ஐம்பது ரூபாய் வாங்கி வந்து, மனைவியையும் குழந்தையையும் அழைத்து வந்தார்! இப்படித்தான் ஆங்கில எழுத்தாளர் டாக்டர் ஜான்சன் தம்முடைய தாயாரின் இறுதிச் சடங்குக்காக ஒரே இரவில் ஒரு நாவல் எழுதிப் பணம் வாங்கினார்!"

– செல்லப்பாவின் பேச்சில் சம்பவங்களுக்கும் மேற்கோள்களுக்கும் பஞ்சமே கிடையாது!

தேசியவாதியான செல்லப்பாவின் அப்பா சுப்பராய அய்யர் பொதுப் பணித் துறையில் ஓவர்ஸீர் ஆக வேலை பார்த்தவர். திலகர் மீது ஈடுபாடு கொண்ட சுத்தமான காங்கிரஸ்காரர். அரசாங்க வேலையிலும் கடைசி வரை அவர் நீடித்தது ஓர் ஆச்சர்யம்! செல்லப்பாவுக்கு எட்டு வயசு ஆகும்போதே அதற்கு முந்தைய இருபதாண்டுக்கால காங்கிரஸ் வரலாற்றைக் மனசில் பதிய வைத்தவர் அப்பாதான்!

அப்படிச் சொல்லப்பட்ட நிகழ்ச்சிகளுள் ஒன்று வாஞ்சியால் சுடப்பட்ட ஆஷ்துரையைப் பற்றியது : "தூத்துக்குடியில் அப்பா வேலை பார்த்தபோது, சிவன் கோவில் தெருவில் ஓர் இடத்தைச் சுட்டிக்காட்டினார். 'இங்கேதான் குதிரை மீது வந்த ஆஷ்துரை தெருவில் விளையாடிக் கொண்டிருந்த ஒரு சிறுவனைச் சுட்டுக் கொன்றது. அவன் கோலிக் குண்டை எடுக்கப் போனபோது, தன்னை அடிக்கக் கல்லை எடுக்கிறான் என்று பயந்து போய்ச் சுட்டான் என்றார் அப்பா!"

விளைவு, பிள்ளைக்கு ஆங்கிலேயர்களை விட ஆங்கில மொழியின் மீதே வெறுப்பு வந்ததுதான். (பட்ட வகுப்பில் எல்லாப் பாடங்களையும் ஆங்கிலத்திலேயே படித்த காலம். ஆனால் மொழிப் பாடமான ஆங்கிலம் செல்லப்பாவைப் பழிவாங்கியது. ஒருமுறை இல்லை; ஐந்து முறை இங்கிலீஷில் காலை வாரி விட்டது!)

எழுத்துத் துறைதான் வாழ்க்கை என்று முடிவு செய்து வந்து விட்டாரே தவிர, முதலில் ஜயபாரதி என்ற அரையணாப் (மூன்று காசுகள்) பத்திரிகையில் சம்பளமில்லாத வேலைதான் கிடைத்ததாம் செல்லப்பாவுக்கு. தம்புச் செட்டித் தெருவில் ரூம் எடுத்து வாசம். சிட்டி, சிதம்பர சுப்ரமணியன், கு.ப. ராஜகோபாலன், பிச்சமூர்த்தி, வ.ரா. என்று விரிந்த தொடர்பு. வ.ரா. தொடங்கிய தினசரியில் ஒன்றரை மாதம், கு.ப.ரா. அழைத்து பாரததேவியில் ஆறு மாதம் என்று வேலை. எதுவும் நிற்கவில்லை.

கொஞ்ச காலம் சேர்ந்து வசித்து, சமைத்துச் சாப்பிட்டதும் உண்டு. சிட்டி காய்கறி வாங்கி வருவார். கு.ப.ரா. சுற்றுக் காரியங்கள் செய்வார். செல்லப்பா சமையல். இரவில் அரை வயிறு தான். அப்புறம் சிட்டி படிக்கப் போய் விட்டார்.

இரண்டாவது யுத்தம் தொடங்குமுன் திருவல்லிக்கேணி ஆலங்காத்தா பிள்ளை தெருவில் மனைவியுடன் குடித்தனம் வந்தார். ந. சிதம்பர சுப்ரமணியத்தோடு ஒரே வீட்டில். அப்புறம் யுத்தம் தொடங்கியதும் ஊருக்குத் திரும்பினார்கள்.

காந்தி ஆசிரம வெளியீடு ஒன்று கிடைத்தது – குடிசைத் தொழிலாகக் காகிதம் செய்யும் முறை பற்றி. அதைப் பின்பற்றி, வைக்கோல் கரும்புச் சக்கை என்று போட்டு, காஸ்டிக் சோடாவில் நனைத்து அரைத்துச் செய்த காகிதத்தில்தான் தம்பியின் கல்யாணப் பத்திரிகையையே அச்சிட்டாராம்!

காகிதங்களை எடுத்துப் போய்ப் பள்ளிக்

## ஜாலி போட்டி - 17 முடிவு

**அந்த 6 பத்திரிகையாளர்கள்:**

1. சோ
2. சாவி
3. மதன்
4. அண்ணாமலை
5. வள்ளியப்பா
6. ராம்.

சரியான விடை எழுதியவர்களுள் குலுக்கலில் தேர்வாகி, ரூ.5000 பரிசு பெறும் வாசகர்:

வி. கணபதி,
2C, நேரு வீதி,
ஸ்ரீரங்கம்,
திருச்சி - 620 006.

வாழ்த்துகள்!

கூடப் பிள்ளைகளுக்கு விற்றார். அதுவும் அதிகம் செய்ய முடியாமல் காஸ்டிக் சோடாவால் 'அனீமியா' வந்து விட்டது.

அப்புறம்தான் சுதந்தரப் போராட்டம். தனிநபர் சத்தியாக்கிரகம். காந்தியத்தில் ஈடுபாடு இருந்தபோதிலும், செல்லப்பா பகத் சிங்கின் பக்தர்! கழுத்தில் பகத்சிங்கின் படம் போட்ட டாலர் மாட்டியிருந்தது உண்டு! கல்லூரி நாட்களில் பகத்சிங், வாஞ்சி மாதிரி எதையாவது 'சாதிக்க' வேண்டும் என்கிற வேகமும் செல்லப்பாவுக்கு இருந்தது. இயல்பாகவே அசாத்தியமான கோபம் வரும் செல்லப்பாவுக்கு. ஆனால் எழுத்தில் பரம சாத்விகம்' எல்லாமே அனுபவங்களின் அடிப்படையில் அமைந்தவைதாம். கற்பனை கொஞ்சம்தான். நடைதான் முக்கியம் செல்லப்பாவுக்கு.

ஒவ்வொரு கதைக்குப் பின்னாலும் ஓர் உண்மை நிகழ்ச்சி இருக்கும்.

'சரஸாவின் பொம்மை' ஒன்று போதும். செல்லப்பாவின் மாமா பெண் ராஜம் என்கிற சின்னஞ்சிறு பெண் குழந்தைதான் சரஸா. தயிர் சாதத்தை வாரியிறைத்துக் கும்பாவை உருட்டிவிட்டு சாப்பிட அடம்பிடிக்கும் ரகம். அதைச் சமாதானப்படுத்த எண்ணி மாமி சொன்னது : "சமர்த்தாச் சாப்பிட்டாத்தான் செல்லப்பா அத்தான் உன்னைக் கல்யாணம் பண்ணிப்பான்." அதை நம்பி ஒழுங்காகச் சாப்பிட்டது மட்டுமில்லை; நிஜமாகவே செல்லப்பா அத்தானுக்குக் கல்யாணமான போது பக்கத்தில் நின்று விசும்பி விசும்பி அழுதாள் ராஜம்! "நாலு நாளும் மணவறையில் ஒருபக்கம் என் மனைவி, ஒரு பக்கம் இவள் என்று கல்யாணம் நடந்தது" என்று அந்த நான்கு வயதுக் குழந்தையை இப்போதும் நினைத்துக் கொள்கிறார் செல்லப்பா.

'மணிக்கொடி'யில் கதை வெளியானபோது, பி.எஸ். ராமையா கதை முடிவைக் கொஞ்சம் மாற்றி வெளியிட்டார். அப்படி மாற்றியது சரியா என்பதில் செல்லப்பாவுக்குத் தனிப்பட்ட கருத்து இருந்தபோதும் யாரிடமும் விவாதிக்கவில்லை. "எத்தனையோ பொம்மைகள் இல்லையா? யானை, குதிரை, வண்டி முதலியவை. அவற்றோடு நானும் ஒரு பொம்மை. ஆம். ஆம்படையான் பொம்மை! குழந்தை சரஸாவின் பொம்மையாக இருப்பதில் எனக்குப் பரம திருப்திதான். ஆனால் அதைப்பற்றி நினைக்கும்போது என் அந்தரங்கத்தில் கொஞ்சம் ஏமாற்றம் கலந்த உணர்ச்சி எழாமல் இருப்பதில்லை" என்று கதை நிறைவடையும்!

**109** சிறுகதைகள் மட்டுமே எழுதிவிட்டு, விமரிசனத்தில் பக்கம் முழுமையாக ஈடுபட வந்து விட்டவர் செல்லப்பா. இருபத்தைந்து ஆண்டுகளாய் இலக்கிய விமர்சனம்தான் தொழில்.

அதையும் மீறிய உந்துதலால் எழுதப்பட்ட 'சுதந்திர தாகம்' நாவலை யார் வெளியிடப் போகிறார்கள் என்பது ஒரு பெரிய கேள்விக் குறி. யார் வெளியிட்டாலும் அவர்கள் தேசியத்துக்கும் காந்தியத்துக்கும் பெரிய தொண்டாற்றியவர்களாகவே இருப்பார்கள். சுதந்தரப் போராட்ட காலத்தின் சுவையான வரலாறு அப்படியப்படியே ஆதாரபூர்வமாகப் பதிவாகியுள்ள இதில், 'சிவராமன்' என்கிற பெயரில் வளையவருவது செல்லப்பா தான்!

- சுப்ர.பாலன்

படம் : யோகா



"வக்கீலெல்லாம் கைவிட்ட நிலையில் விடுதலைக்கு நான் போலீஸைத்தான் நம்பியிருக்கேன்."

"எப்படி தலைவரே?"

"எப்படியும் குறிப்பிட்ட நாட்களுக்குள்ளே குற்றப் பத்திரிகை தாக்கல் செய்ய மாட்டாங்கங்கிற நம்பிக்கைதான்!"

– சீர்காழி வி. ரேவதி



"அதோ போகிறாரே அவர்தான் அ.இ.மு.அ.பி.ச. தலைவர்."

"அதென்ன அ.இ.மு.அ.பி.ச? புது கட்சியா?"

"இல்லை. அனைத்திந்திய முன்னாள் அமைச்சர் பினாமிகள் சங்கம்."

– எஸ். மீனாட்சிசுந்தரம்

# தேன்நிலவு : ஒரு திகட்டாத பயணம்!

செ ன்றமாத இறுதியில் ஒருநாள். தென்னாப் பிரிக்காவைச் சேர்ந்த கவுஸ் - மரின்டா என்கிற புதிதாகத் திருமணமான இளம் ஜோடி, தங்கள் தேனிலவைக் கொண்டாடுவதற்காக காமரோஸ் தீவுக்குச் சென்றனர். கடற்கரை மணல்வெளி யில் உல்லாசமாகப் படுத்தபடி சூரியக் குளியல் குளித்துக் கொண்டிருந்தனர்.

அந்தச் சமயத்தில், கடத்தல்காரர்களால் கடத்திச் செல்லப்பட்ட ஒரு எத்தியோப்பிய விமானம் காமரோஸ் கடல் வெளியில் நொறுங்கி விழ, அந்தக் காட்சியைத் தற்செய லாகக் கண்ட கவுஸ் - மரின்டா, தம்மிடமிருந்த வீடியோ கேமரா வினால் அதைப் படம்பிடித்து, World wide Television News நிறு வனத்துக்கு 65,000 டாலர் களுக்கு விற்று, பெரும் பணக் காரர்களாகி விட்டனர்! நடந்த நிகழ்ச்சி மனம் கனக்கச் செய்தது என்று ஒப்புக் கொண்ட தம்பதி, சமயோசிதமாக சம்பாதிக்கத் தவறவில்லை!

எல்லோருக்கும் தேன்நில வின் மூலம் 65,000 டாலர் கிடைத்து விடுவதில்லை. (செலவுதான்!) ஆனால் சந்தோஷ மான மணவாழ்க்கையின் டேக் ஆஃப் தேன்நிலவிலிருந்துதான் தொடங்குகிறது.



• ஷர்மிளா



• கிருஷ்ணகுமார்

வெள்ளைக்காரன் நம் நாட்டில் மிச்சம் வைத்துப்போன பழக்கவழக்கங்களுள் ஒன்று தேன்நிலவு. மணவாழ்க்கை என்கிற புத்தம் புது அனுபவ உலகில் உதிர்க்கப்படுகிற ஓர் ஆணும் பெண்ணும் ஒருவரை ஒருவர் முற்றிலும் புரிந்து கொள்வதற்காக மேற்கொள்ளப்படுகிற இந்த இனிய பயணம், எந்த அளவுக்கு அதற்கு உதவு கிறது? உடல்ரீதியிலான நெருக்கம் சாத்தியமா கிற விஷயம் தவிர இப் பயணங்களால் வேறு லாபம் - நிஜமாகவே இருக்கிறதா? மிகவும் சென்ஸிடிவான இவ்விஷயத்தைப் புதிதாகத் திருமணமாகி, தேன்நிலவுக்குச் சென்று வந்த சில ஜோடிகளிடம் கேட்டுப் பார்க்க முடிவு செய்தோம்.

பலர் ஆரம்பித்ததுமே அலறியடித்துக் கொண்டு ஓடி விட்டனர். சிலர், 'பேசத் தயார். ஆனால் புகைப்படம் வரக்கூடாது' என்றனர். மிகச் சிலரே துணிச்சலாக முன்வந்து தம் கருத்துக்களைச் சொன்னார்கள். (அவசியமான இடங்களில் பெயர்களை மாற்றியிருக் கிறோம்)

"இதில் வெட்கப்பட ஏதுமில்லை. நீங்கள் என்ன கேட்டா லும் நான் பதில் சொல்லத் தயார்!" என்று மிகவும் 'போல்டாக' ஆரம்பித்தவர் கிருஷ்ண குமார். சமீபத்தில் திருமணமாகி, தம் மனைவி ஷர்மிளாவுடன் ஒரு வாரம் கொடைக்கானல் போய் விட்டு வந்தவர்.

"தேன்நிலவு போவது என்பது ஒருவரை ஒருவர் புரிந்து கொள்வதற்காக என்று பொது வாகச் சொல்வார்கள். நான் இந்தப் 'புரிந்து கொள்வது' என்பதை மூன்று விதமாகப் பிரிக் கிறேன்" என்றார் கிருஷ்ணகுமார்.

அது என்ன மூன்றுவிதப் புரிந்து

கொள்ளல்?

"ஒன்று – மனரீதியில் புரிந்து கொள்ளுதல். அவரவர் எண்ணம், சிந்தனை, விருப்பம், ஆசைகள், எதிர்பார்ப்புகள் இவற்றைப் பேசிப் புரிந்து கொண்டு ஒத்துப் போகிறதா என்று பார்ப்பது. இரண்டாவது, குணம். சுபாவம் எப்படி என்பதைப் புரிந்து கொள்வது மிக முக்கியம். அடிக்கடி கோபம் வருமா? பிரச்னை என்று வந்தால் அதை எதிர்கொள்ளும்போது என்ன மாதிரி ரியாக்ஷன் காட்டுவார்கள்? மனைவியாகிற பெண் எதற்கும் அழுது விடக் கூடியவளா? அல்லது ஜாலி டைப்பா? சந்தேகங்கள் உடையவளா? 'பொஸஸிவ்' டைப்பா? புருஷன் பிற பெண்களுடன் அலுவலக ரீதியில் கூடப் பேசுவதை விரும்பாதவளா – இந்த மாதிரி விஷயங்களைக் கூர்ந்து கவனிப்பது. மூன்றாவது – மிக முக்கியமான விஷயம். உடல் உறவு. பல ஆண்கள் சறுக்கி விடுவது இங்கேதான்!" என்றார் கிருஷ்ணகுமார்.

எப்படி..?

"என் கணிப்பில் இந்தக் காலத்துப் பெண்கள் ஆண்களை விட புத்திசாலிகள். எதையும் திட்டமிட்டுச் செய்வதில் வல்லவர்கள். அப்படிச் செய்வதில் இயல்பாக, ஒரு மென்மையான அணுகுமுறை வேண்டும் என்று எதிர்பார்ப்பவர்கள். பளிச்சென்று இழுத்து மனைவியை முத்தமிடுவதைக் காட்டிலும், 'நான் உன்னை முத்தமிடவா?' என்று கேட்டு, செயல்படுவது மிக நல்ல பலன் தரும்" என்றார்.

"உங்கள் தேன்நிலவு அனுபவம் எப்படி இருந்தது?"

"மிக அற்புதமாக. நான் யார், எப்படிப்பட்டவன், என் வேலை என்ன, அதன் இயல்பு என்ன, (மாதம் இருபது நாள் ஊர் சுற்றிக் கொண்டிருப்பேன்!) சம்பளம் என்ன? என் குடும்பத்தினர் எப்படிப்பட்டவர்கள் என்பதையெல்லாம் சொல்லி, குடும்பத்தில் புதிய உறுப்பினராக வந்துள்ள அவளிடம் மற்றவர்கள் என்ன எதிர்பார்க்கிறார்கள் என்பதைத் தெளிவு படுத்தினேன்.




"பெரும்பாலான வீடுகளில் எதிர்பார்ப்புகள் ஒரே மாதிரிதான் இருக்கும். உறவினர்களோடு இயல்பாகப் பழகுவது, சமையலில் உதவி, அக்கறையாக நடந்து கொள்வது... இப்படி. என்னைப் பொறுத்தவரை புதிதாகத் திருமணமாகி வரும் பெண், தன் கணவனிடம் காட்டுகிற அன்புக்கு இணையாக மாமியாரிடமும் அன்பு

செலுத்தினால், அல்லது அப்படி இருப்பதாகக் காட்டிக் கொள்ளவாவது செய்தால் வாழ்க்கையில் பிரச்னையே வராது. இதையெல்லாம் நாங்கள் பேசித் தெளிவு பெற அந்த ஒரு வார காலம் மிக உதவியாக இருந்தது."

கிருஷ்ணகுமார் சொன்னதைத் தம் மென்மையான, வெட்கம் கலந்த புன்னகையுடன் ஆமோதித்தார் ஷர்மிளா. "இவர் எங்கள் தேன்நிலவில் தன்னைப் பற்றிச் சொன்னதைவிட இவரது அம்மாவைப் பற்றித்தான் நிறைய சொன்னார். பள்ளி ஆசிரியையான அவர், மாணவர்களிடம் எதிர்பார்க்கும் ஒழுக்கமும் கட்டுப்பாடும் மரியாதையும் வீட்டிலும் இருக்க வேண்டும் என்று நினைப்பவர். முதலில் அவரை எதிர்கொள்வதில் ஒருவித 'பயம்' மட்டுமே இருந்தது. பிறகு சரியாகிவிட்டது. எதையும் என் நல்லதுக்குத்தானே சொல்கிறார் என்று சமாதானமாகி விடுவேன்."

நினைத்து நினைத்துக் கவலைப்படுவதற்காகவே நாங்கள் தேன்நிலவுக்குச் சென்றோம்!" என்று புதிராக ஆரம்பித்தார் பார்கவி.

"நான் பிரகாஷைக் காதலித்துத் திருமணம் செய்து கொண்டேன். இருதரப்பு வீட்டிலும் கடுமையான எதிர்ப்பு. சில நண்பர்கள் உதவியுடன் வடபழனி முருகன் கோவிலில் திருமணம் முடித்து, அன்று மாலையே கிளம்பி ஊட்டிக்குப் போய் விட்டோம். ஊட்டிக்குப் போனது, தேனிலவைக் கொண்டாட மட்டுமல்ல; சில நாட்களாவது பெற்றோரின் கோபத்திலிருந்து தாற்காலிகமாகத் தப்பிக்கத்தான்!" என்றார் புன்னகையுடன்.

"ஊட்டிக்குப் போனால் எல்லாரும் உல்லாசமாக ஊர் சுற்றுவார்கள். ஏரியில் படகுச் சவாரி போவார்கள். நாங்கள் அறையை விட்டு வெளியே வரவேயில்லை. திருமணத்துக்கு முன் மூன்று வருடங்கள் பேசித் தீர்த்தவர்கள்தான். ஆனாலும் அந்த மூன்று நாட்களும் தூங்கக்கூடப் பிடிக்காமல் பேசிக் கொண்டே இருந்தோம்!" என்றார்

• நித்யஸ்ரீ

பிரகாஷ்.

"அப்படி என்ன பேசினீர்கள்?"

"பொதுவாகக் காதல் திருமணங்களும், பெற்றோர் எதிர்ப்பும், திருமணத்துக்குப் பின் அவர்கள் சமாதானமாகி விடுவதும் சகஜம் தான். எங்கள் விஷயத்திலும் அப்படித்தான் நடந்தது. ஆனால் என்னை நம்பி, சுற்றம்-நட்பைப் பிரிந்து தனியாக வந்திருப்பவளை, அவளுக்கு இருக்கக்கூடிய நியாயமான பயங்களை நீக்கவேண்டிய பொறுப்பு எனக்கு இருப்பதை உணர்ந்தேன். 'யார் என்ன சொன்னாலும், சேர்த்துக் கொண்டாலும் விலக்கி வைத்தாலும் நம் வாழ்க்கை இனி



• ராகவன்

நாமாகவே செலுத்த இருக்கிற உறவினர்கள் கைவிட்டாலும் நண்பர்கள் கைவிட மாட்டார்கள். நமக்கொரு உறவு வட்டம் நாமே ஏற்படுத்திக் கொள்வோம்' என்றேன். என் உத்தியோகமும் கண்ணியமான சம்பளமும் எனக்கு அப்படிப் பேசத் தெம்பு தந்தது

உண்மை" என்ற பிரகாஷ், ஓர் அரசுத் துறை ஊழியர்.

"உலகில் வேறெங்காவது இப்படி நடந்திருக்குமா? திருமணமாகி, அந்த மூன்று நாள் ஹனிமூனும் முடிந்து, சென்னை வந்து ஒரு சிறிய கலாட்டாவுக்குப் பின் தனிக்குடித் தனம் வைத்து, அதன் பிறகு இரண்டு நாட்கள் கழித்து இருதரப்பு பெற்றோரும் வேறு வழியின்றி வந்து எங்களை வாழ்த்திச் சென்ற பின்தான் எங்கள் முதலிரவு நடந்தது!" என்று பிரகாஷ் சொன்னபோது பார்கவி வெட்கத்தில் சிவந்து போனார்.

"அதை ஒரு வைராக்கியமாகவே கொண்டிருந்தோம். பெற்றோர் சம்மதமில்லாமல் திருமணம் நடக்கிறது. அவர்கள் சம்மதித்த பின்னால் முதலிரவு வைத்துக் கொள்வோம் என்று நான்தான் கூறினேன். அதை அவர் ஒப்புக்கொண்டது மட்டுமல்ல; நாங்கள் காதலர்களாக இருந்தபோது இருந்த அளவுக்குக் கூட அந்த ஒரு வார காலத்தில் அவர் என்னை நெருங்கவில்லை. அந்த கம்பீரமான ஆண்மை தான் அவரிடம் எனக்குப் பிடித்த விஷயம்" என்றார் பார்கவி.

"எங்கள் தேன்நிலவு, என்னைக் கிட்டத்தட்ட லைலாவைத் தேடிய சிந்துபாத் மாதிரி ஆக்கிவிட்டது" என்றார் முரளி.

மிகவும் பக்திமானான இவர், சென்ற ஜூலையில் திருமணம் ஆகி, அலுவலக விடுமுறை கிடைக்காததால் செப்டம்பரில் தம் மனைவியுடன் சீர்காழி, சிதம்பரம், திருச்சி, கங்கைகொண்ட சோழபுரம் என்று பக்தியாத்திரையாகத் தேனிலவு போய் வந்தவர்.

"சிதம்பரம் கோவிலில் அவள் காணாமல் போய் விட்டாள். அல்லது நான் காணாமல் போய் விட்டேன். கிட்டத்தட்ட ஒன்றரை மணி நேரம் அவள் ஒருபுறமும் நான் ஒரு புறமுமாகத் தேடிக் கொண்டிருந்தோம். அழுகையே வந்து விட்டது! ஒருவரை ஒருவர் சந்தித்தபோது நியாயமாக கட்டித் தழுவி, கண்ணீர் விட்டிருக்க வேண்டும், சினிமா போல! மாறாக, என்னைத் திட்டித் தீர்த்து விட்டாள்" என்றார் முரளி.

"அந்தத் தேன்நிலவு எனக்குப் பல பாடங்களைச் சொல்லிக் கொடுத்தது மறக்க முடியாத விஷயம். நான் எப்போதும் என்னைப் பற்றியே நினைத்துக் கொண்டிருப்பவன் என்பதை உணரச் செய்ததே அந்தப் பயணம்தான். எனக்குக் கோவில், குளம் என்றால் பிடிக்கும். என் மனைவிக்கு? நியாயமாக டூர் புரோகிராம் போடும்போதே அவளை நான் கேட்டிருக்க வேண்டும். ஆனால் கேட்கவில்லை. விளைவு? பெரும்பாலான சமயங்களில் முகத்தைத் தூக்கி வைத்துக்

## தேன்நிலவு போகிறவர்களுக்கு....
## (போய் வந்தவர்கள் தரும் டிப்ஸ்)

* எப்போதும் உங்களைப் பற்றியே பேசிக் கொண்டிருக்காதீர்கள். அடுத்தவரின் கருத்துக்கு மதிப்புக் கொடுங்கள். தன் மனைவியின் பெற்றோர், தம்பி, தங்கைகள், அவர்கள் வீட்டுச் சூழ்நிலை பற்றியெல்லாம் அக்கறையாகக் கேட்டுக் கொள்கிற கணவன், மனைவியின் முழு அன்பைப் பெறவிருக்கிறான்.

* உங்கள் பொருளாதார நிலையை முதலில் வெளிப்படையாகச் சொல்லி விடுவது நல்லது. ஆனாலும் தேநிலவின் போது ரொம்ப சிக்கனமெல்லாம் பார்க்கக் கூடாது.

* பயமுறுத்தும் விதமாகப் பேசவோ, செயல்படவோ கூடாது. பெரும்பாலான பெண்களுக்கு (குறிப்பாக – பெற்றோர் நிச்சயிக்கும் திருமணங்களில்.) ஒருவித மிரட்சி இருக்கக்கூடும். சந்தர்ப்பம் கிடைக்கிறபோதெல்லாம் மனைவியின் கரங்களை ஆதரவாகப் பற்றி, மென்மையாக ஒரு அழுத்தம் தருவது, அவளுக்குப் பாதுகாப்பு உணர்வு தரும்.

* சிகரெட், மது அருந்தும் பழக்கம் உள்ளவர்கள் அதை மறைக்காமல் மனைவியிடம் சொல்லிவிட வேண்டியது அவசியம். நிச்சயமாக வெறுத்து ஒதுக்க மாட்டாள். ஆனால் தனக்கு அது பிடிக்கவில்லை என்றால் சொல்லி விடுவார்கள். அதன்பின் விட்டு விடுவதோ, குறைந்தபட்சம் மனைவியின் கண்முன் அவற்றைச் செய்யாமல் தவிர்ப்பதோ உங்கள் பாடு.

* 'குழந்தை' பற்றி முன்கூட்டியே பேசிவிடுவது நல்லது. (திருமணத்துக்கு முன்பே கூட!) முதல் குழந்தையைத் தள்ளிப் போட வேண்டாம் என்பது தான் 90% பெண்களின் விருப்பம். அதற்கு மனரீதியிலும் பொருளாதாரரீதியிலும் தயாரானபின் திருமணம் செய்து கொள்வது நலம்.

### பின்வரும் மூன்று குறிப்புகள் கண்டிப்பாக ஆண்களுக்கு மட்டும் :

* ஹனிமூனில் விளையாட்டாகக் கூட வேறு பெண்ணை சைட் அடிக்க வேண்டாம்.

* மனைவிக்கு திடீரென்று அப்பா – அம்மா ஞாபகம் வந்து மூட்-அவுட் ஆகிவிட்டால் நீங்கள் அப்செட் ஆகிவிடக்கூடாது. 'வேண்டுமானால் திரும்பிப் போய் விடலாமா?' என்று ஆதரவாகக் கேளுங்கள். 'ஒரு வாரம் கழித்து மறுபடி வந்தால் போயிற்று' என்று இயல்பாகச் சொல்லுங்கள். (அப்படி ஆகாது. உங்கள் பேச்சே மனைவிக்கு தைரியம் தந்து, மறுபடி தேனிலவு மூடுக்குத் திரும்பி விடுவார்!)

* மனைவியின் இறைநம்பிக்கை, சென்டிமென்ட்ஸ் இவற்றைத் தவறியும் கிண்டல் பண்ண வேண்டாம்!



**'கிண்டல்காரன்', 'கிறுக்கன்', 'கே.எஸ்.ஆர்.' 'கண்டெழுதுவேன்' இவர்களெல்லாம் யார்? அமரர் பாரதிதாசன் அவர்கள் சூட்டிக் கொண்ட புனை பெயர்கள்தாம்!**

**('படவுலகில் பாரதிதாசன்' என்ற நூலிலிருந்து)**

**– எல். கோபாலகிருஷ்ணன்**

---

கொண்டே இருந்தான். 'இப்படி உம்மென்று வருவதற்கா தேன்நிலவு வந்தோம்? திரும்பி விடலாம்' என்று கோபமாகச் சொன்னேன். 'ரொம்ப சந்தோஷம்' என்று நிஜமான சந் தோஷத்துடன் அவன் சொன்ன போதுதான் இந்தப் பயணம் அவனுக்குச் சற்றும் பிடிக் காததை உணர்ந்தேன். உடனே, அடுத்து கிளம்பவிருந்த திருச்சி ப்ரோகிராமை கேன்சல் செய்துவிட்டு சிதம்பரத்துக்கு அருகிலுள்ள பிச்சாவரத்துக்கு அவனைக் கூட்டிப் போனேன். இயற்கையான சூழலும் பறவை களின் குதூகலமும் படகு சவாரி தந்த கிளு கிளுப்பும் அதுவரை எங்களுக்குள் இருந்த கோபத்திரையை நீக்கிவிட, நிஜமான தேன் நிலவு சுகத்தை அப்போது உணர்ந்தோம்!" என் றார் முரளி.

தம்பதிகள் இருவருமே 'தேனிலவு போர்' என்று தீர்மானித்து, பாதியில் ஊர் திரும்பிய கதையும் இருக்கிறது! வாசு – லக்ஷ்மி தேனி லவின் போது, லக்ஷ்மிக்குக் கடுமையாக வயிற்று உபாதை வந்துவிட, உடலில் நீர் வற்றிப் போய், மயக்கமாகி, ஆஸ்பத்திரி தேடி ஓடி... நம்மால் சமாளிக்க முடியாது என மனைவியுடன் ஊர் திரும்பி விட்டார் வாசு!

"இன்றைக்குத் திருமணத்துக்கு முன்பே – நிச்சயமானவுடனேயே ஆணும் பெண்ணும் சந்தித்துப் பேசிக் கொள்கிற பழக்கம் அதி கரித்து விட்டது. கிட்டத்தட்ட அதுவே தேன் நிலவு மாதிரிதான். திருமணத்துக்குப்பின் தேன் நிலவு என்று எங்கும் கிளம்பிப் போகவே வேண்டாம்!" என்றார் நித்யஸ்ரீ.

"ஆனால் என்னைப் பொறுத்தவரை, கண வனோ, மனைவியோ – இருவரில் யாராவது ஒருவர் பப்ளிக் ஃபிகராக இருக்கிறபட்சத்தில் தேன்நிலவு மிகவும் அவசியம் என்பேன்!" என்றார் புதிராக.

எப்படி?

"நான் ஒரு பாடகி. கர்நாடக இசையைத் தொழிலாக, வாழ்க்கையாக ஏற்றுக் கொண் டவள். மேடைக்கச்சேரி, ரசிகர்கள், பேட்டி, போட்டோ என்று மனைவி பிரபலமான ஒருத்தியாக இருப்பதைப் பெரும்பாலான ஆண்கள் ஜீரணிப்பது இல்லை. அதிர்ஷ்ட வசமாக என் கணவர் என்னைப் புரிந்து கொண்டவராக அமைந்தார். அந்தப் 'புரிந்து கொள்ளலை' சாத்தியமாக்க எங்கள் ஹனிமூன் தான் உதவியது" என்றார் நித்யஸ்ரீ.

"எங்கள் திருமணம் நிச்சயமாகி ஐந்து மாதங்கள் கடந்தபின்தான் கல்யாணம் நடந் தது! காரணம், நான் கச்சேரிகளுக்காக அமெரிக்கா சென்றிருந்ததுதான்! அங்கிருந்த படியே டெலிபோனில் இவருடன் அவ்வப்போது பேசினேன் என்றாலும், அந்தப் பேச்சில் விசேஷம் ஏதுமில்லை. பொதுவாக 'குளிர் எப்படி? சாப்பாடு கிடைக்கிறதா? அமெரிக்க வாழ்க்கை முறை எப்படி இருக் கிறது?' என்றுதான் பேசிக் கொண்டிருந்தோம். கடந்த ஜூலையில் திருமணமானபின் ஒரு வாரம் ஊட்டிக்குப் போன போதுதான் நிஜ மாகவே பேச நினைத்த பல விஷயங்களைப் பேச முடிந்தது" என்றார் நித்யஸ்ரீ.

"என் தொழில் இது. பாடுகிறவர்களுக்கு ரசிகர்கள் இருப்பார்கள். புகழ் வரலாம். பெரிய கௌரவங்கள் கிடைக்கலாம்; வீட்டிலிருக்கிற நேரத்தை விட கச்சேரிகளுக்காக அதிக நேரம் செலவிட வேண்டிவரும். இதையெல்லாம் நீங்கள் பொறுத்துக் கொள்ள வேண்டும் என் றேன் வெளிப்படையாக.

"அவருக்கு இசையின் இலக்கணங்கள் ஏதும் தெரியாது. ஆனால் நல்ல ரசிகர். 'என் மனைவி பெரிய பாடகியாக வருவதில் எனக்கு சந்தோஷம்தான்' என்று சொல்லி விட்டார்.

"அதன் பிறகும் இந்தத் துறையில் இருக்கிற கஷ்டநஷ்டங்கள், நான் மேற்கொள்ளவிருக்கிற முயற்சிகள் பற்றியெல்லாம் என் தேனிலவில் அவரிடம் சொன்னேன். பொறியியல் வல்லுந ரான அவர், புரிந்து கொள்ளுவதிலும் வல்லுந ராக இருந்தது என் அதிர்ஷ்டம்!" என்றார் நித்யஸ்ரீ. (நித்யஸ்ரீயின் கணவர் மகாதேவன் அலுவலக வேலையாக பம்பாய் சென்றிருந்த தால் நம்மால் அவரைச் சந்திக்க இயலவில்லை.)

அட்டையில் சிரிக்கும் ராகவன் – சுமதி, நேரடியாக தேனிலவிலிருந்து வந்திறங்கி, போட்டோவுக்கு போஸ் கொடுத்தவர்கள்.

"உங்கள் அனுபவம் எப்படி?" என்றபோது, 'சொன்னால் அதன் அழகு சிதைந்து விடும். ப்ளீஸ், என்னைக் கட்டாயப்படுத்தாதீர்கள்!" என்றாலும் "என் மணவாழ்க்கை எத்தனை ஒளிமிக்கதாக அமையப்போகிறது என்பதை இந்த ஒருவார ஊட்டி பயணம் எனக்குச் சுட் டிக்காட்டி விட்டது!" என்றார், உணர்ச்சிவசப் பட்டு.

**– ஔரங்கசீப்**

படங்கள் : **யோகா**

சென்னையில் வெள்ளம்




1996 டிசம்பர் 22
தாது மார்கழி 7
மலர் : 55
இதழ் : 21

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## ஜெயில்லலிதா!

'எங்கள் தலைவி கைதானால் ரத்த ஆறு ஓடும்!' என்ற அ.தி.மு.க.வினரின் மிரட்டல் பொய்யானது! முன்னாள் முதல்வர் ஜெயலலிதா கைதான தினத்தில் சென்னையிலும் தமிழகத்தின் இதர பகுதிகளிலும் சகஜ வாழ்க்கை பாதிப்புக்குள்ளாகவில்லை.

அ.இ.அ.தி.மு.கவும் அதன் தலைவியும் மக்களிடையே செல்வாக்கை அடியோடு இழந்து நிற்பதையே இது உணர்த்துகிறது.

கருணாநிதி அரசாங்கம், ஜெயலலிதா விஷயத்தில் காய்களை கவனமாக, எச்சரிக்கையுடன் நகர்த்தியது இந்த நிலைக்கு ஒரு காரணம்.

ஊழல் குற்றச்சாட்டு சுமத்தப்பெற்ற ஜெயலலிதாவை அவசர அவசரமாக வளைத்துச் சிறையில் வைக்காமல் நிதானமாகச் செயல்பட்டிருக்கிறது தமிழக அரசு.

ஊழல் புரிந்த அதிகாரிகள், அமைச்சர்கள் ஆகியோர் மீது குற்றச்சாட்டுகளை, முதலில் லஞ்ச ஒழிப்புத் துறை மூலம் சேகரித்து, நீதிமன்றத்தின் முன் சமர்ப்பித்திருக்கிறது.

செல்வகணபதியின் சுடுகாட்டுச் சுரண்டல் தொடங்கி கு.ப. கிருஷ்ணனிடம் சிக்கிய சொத்துக்கள் வரை ஒவ்வொரு ஊழலாக அம்பலமாக ஆக, ஜெயலலிதா தலைமையில் நடந்த ஊழல்களின் முழுப் பரிமாணமும் பொது மக்களின் முன் மெள்ள விரிந்திருக்கிறது.




ஜெயலலிதாவிடம் அவர்களுக்கு ஏற்கெனவே இருந்த எதிர்ப்புணர்வும் படிப்படியாக மேலும் வளர்ந்திருக்கிறது.

காஃபிபோசாவில் சசிகலா கைதானதும் ஜெயலலிதா துணையுடன் அவர் அரங்கேற்றிய அந்நியச் செலாவணி மோசடிகள் அம்பலமானதும் மக்களின் வெறுப்பை அதிகப்படுத்தி விட்டன. கடற்கரையோர ஆடம்பர மாளிகைகள் பற்றிய அதிர்ச்சி தரும் செய்திகள், சிங்கப்பூர் நிறுவனம், ஜே. ஜே. டீ.வி. பேரில் தொடுத்த வழக்கு, என்று தொடர்ந்து நிகழ்ந்தவை ஜெய லலிதா பேரில் மக்களுக்கு இருந்திருக்கக்கூடிய கொஞ்ச நஞ்சம் அனுதாபத்தையும் அடியோடு ஒழித்துக் கட்டிவிட்டன!

'ஜெயலலிதாவை ஏன் இன்னும் கைது செய்யவில்லை?' என பத்திரிகையாளர்களும் பொதுமக்களும் மட்டுமின்றி... நீதிபதியே கேட்கிற அளவுக்கு நிலைமை உருவாகியது. ஜெயலலிதாவின் முன்ஜாமீன் மனு தள்ளுபடி செய்யப்பட்டு, அவரைக் கைது செய்து விசாரிக்கலாம் என்று தீர்ப்பு வழங்கப்பட்டது.

ஜெயலலிதாவுக்குச் சொந்தமான வீடுகளில் நடந்த சோதனை விவரங்களும் அவற்றில் சிக்கிய பொருள்களின் பட்டியலும் இப்போது மக்களை அதிர்ச்சியில் ஆழ்த்தியுள்ளன. முந்நூறு தங்க, வைர வளையல்கள், நூறு கைக்கடிகாரங்கள் (தங்கச் சங்கிலியுடன்), ஐந்நூறு கிலோ எடைக்கு வெள்ளிப் பாத்திரங்கள், பத்தாயிரம் புடைவைகள், வைரங்கள் பதித்த தங்க ஒட்டியாணம், நூற்றுக்கணக்கான செருப்பு ஜதைகள், துப்பாக்கி... என ஏதோ ராஜா - ராணி கதைகளில் வருவது போல் பட்டியல் நீள்கிறது!

ஆனால், இதைப் போன்ற நீண்ட பட்டியல் வெளியிடுவதால் மட்டும் பயனில்லை. இந்தச் செல்வமெல்லாம் சட்ட விரோதமாகவும் சுரண்டல் மூலமாகவும் அடையப்பட்டவை என்பதை




நீதிமன்றத்தின் முன் நிரூபித்தாக வேண்டும். இது சுலபமான காரியம் அல்ல.

தமிழக அரசு, ஜெயலலிதாவை விசாரிக்க சிறப்பு நீதிமன்றம் அமைக்கவிருப்பதையும் அதற்கு அரசு தரப்பு வழக்குரைஞராக என். நடராஜன் நியமிக்கப்பட்டிருப்பதையும் வரவேற்கத்தான் வேண்டும். இந்த ஏற்பாடு, விசாரணையைத் துரிதப்படுத்த உதவும். ஆனால் இப்போது டி.வி. பெட்டிகள் வாங்கியது தொடர்பான ஒரு வழக்கு மட்டுமே ஜெயலலிதா பேரில் பதிவாகியுள்ளது. எஞ்சியுள்ள குற்றச்சாட்டுகள் தொடர்பான இதர வழக்குகளும் விரைவில் பதிவுசெய்யப்பட்டாக வேண்டும்.

ஜெயலலிதா இந்த வழக்கில் ஜாமீனில் விடுதலையானாலும் சரி, தொடர்ந்து சிறைவைக்கப் பட்டாலும் சரி, சிறப்பு நீதிமன்றத்தில் அரசு வழக்குரைஞர்கள் மற்றும் ஊழல் தடுப்பு அதிகாரிகள் மிக மிக சுறுசுறுப்பாகச் செயல்பட்டாக வேண்டும். கைது செய்வதற்கு முன் காத்த நிதானத்தை இனியும் கடைப்பிடிப்பது, நேர்மாறான விளைவுகளையே உண்டாக்கும்.

ரிமாண்டில் வைக்கப்பட்ட பல முன்னாள் அமைச்சர்கள் பேரில் இன்னமும் வழக்கு பதிவாகாத நிலையில் அவர்கள் ஜாமீனில் வெளியேறியிருக்கிறார்கள். இதே கதை ஜெயலலிதா விஷயத்தில் நடக்க அனுமதிக்கப்படக்கூடாது. எல்லா வழக்குகளிலும் துல்லியமாகவும் துரிதமாகவும் ஆதாரங்கள் சேகரிக்கப்பட்டு, விரைவாக நீதி வழங்கப்பட வேண்டும். இதில் தாமதம் ஏற்படும் ஒவ்வொரு நாளும் அ.தி.மு.க.வினருக்கு ஆதாயமாகவே முடியும். ஜெயலலிதா அனுதாபத்துக்குரியவர் என்கிற பிரசாரத்தை அவர்கள் நடத்துவார்கள். மக்களும் வெகு சுலபத்தில் அந்தப் பிரசார மழையில் நனைந்து மனம் மாறிவிடுவார்கள். அவர்களுடைய அதிர்ச்சியும் கோபமும் அப்படியே அனுதாபமாக மாறிவிடும் ஆபத்து இருக்கிறது.

# ஜெ தண்டிக்க முடியுமா?

...அஷாரும் ...பபாற்றினார்கள். கும்ப்ளேயும் ஸ்ரீநாத்தும் தொடர் வெற்றிக்கு வழிவகுத்தார்கள். வாழ்த்துவோம்.

● சி. மீனாட்சி சுந்தரம், தென்காசி.

? மாஜிகள் ஒவ்வொருவராக வெளியே வருகிறார்களே... சட்டத்தின் ஓட்டைகள் அவ்வளவு பெரிதாகவா உள்ளன?

! ஓட்டைகள் என்பதை விட சந்துபொந்துகள் எனலாம். அவற்றில் புகுந்து புறப்பட்டு, தப்பி வர, அரசு தரப்பில் வழக்கு நடத்துகிறவர்களின் கவனக்குறைவு, மெத்தனம் முதலியனவும் காரணமாக அமைகின்றன.

● வி. அர்ஜுன்குமார், கோவை.

? ஜான் டேவிட் சார்பில் வாதாடும் வக்கீல்கள் பின்னை குட்டி பெற்றவர்கள்தானே...?

! ஜான் டேவிட்டுக்காக யாருமே வாதாட முன்வராவிட்டால் நீதிமன்றமே அவர் சார்பில் வாதாட ஒரு வழக்கறிஞரை நியமிக்க வேண்டும் என்பது சட்டமாக இருக்க, அவர் சார்பில் ஒருவர் வாதாட முன்வருவதில் தவறில்லை. அது பிரபலமடையும் முயற்சியாக மாறிவிடக் கூடாது என்பதுதான் முக்கியம்.



• பழைய பல்லவி!

● ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன்கோட்டை.

? 'இலங்கை அரசுடன் பேச்சு வார்த்தை நடத்த வேண்டுமென்றால், தமிழர் பகுதியிலுள்ள ராணுவம் முதலில் வெளியேற வேண்டும்' என்று விடுதலைப் புலிகள் தலைவர் பிரபாகரன் கூறியுள்ளாரே?

! வழக்கமான பல்லவி! ராணுவம் வெளியேறிய மறுகணமே புலிகள் தங்களை நிலைப்படுத்திக் கொள்ளும், பலப்படுத்திக் கொள்ளும் முயற்சிகளில் இறங்குவார்கள் என்பதும் வழக்கமான நடைமுறைதான். இலங்கை அரசு, வழக்கம் போல் ஏமாறாது.

● கி. தியாகராஜன், குடந்தை – 1.

? 'சிதம்பரமும் கருணாநிதியும் என்னைப் பழிவாங்க நினைக்கிறார்கள்' என்கிறாரே ஜெ...?'

! வேறு வழி...? 'சட்டமும் நீதியும் என்னைப் பழிவாங்க நினைக்கின்றன...' என்றா அவர் சொல்ல முடியும்?

● இரா. திலீப், திருச்சி – 14.

? கல்கத்தா டெஸ்டில் இந்தியா படுதோல்வி அடைந்துள்ளதே...?

! கான்பூரில் காம்பன்ஸேட் ஆகிவிட்டதே! முதல் இன்னிங்ஸில் ராமனும் இரண்டாவதில்

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? ஜெயைக் கைது செய்திருப்பதன் மூலம் கருணாநிதி தமது அரசியல் இலக்கை எட்டிவிட்டாரா...?

! கருணாநிதியின் இலக்கு இதுவல்ல! மக்கள் எதற்காக வாக்களித்தார்களோ அந்த இலக்கை எட்ட வேண்டும்.

● மு. இரவிச்சந்திரன், சேலம்.

? கட்சி ஒற்றுமைக்காக தலைவர் பதவியைக் கைவிடவும் தயார் என்கிறாரே குமரி அனந்தன்?



• மகனின் வாக்குமூலம்!



• நல்லெண்ணம் மட்டும் போதாது...

! என்றைக்கும் அவர் கட்சியில் ஒற்றுமை ஏற்படப் போவதில்லை...! அதனால் அவர் பதவியை விடவேண்டிய அவசியமேயில்லை. கேசரியால் இறக்கப்பட்டால், கதை வேறு!

● இ. ராதாகிருஷ்ணன், பட்டுக்கோட்டை.

? "எனது தந்தையிடம் பெட்டி பெட்டியாகப் பணத்தைக் கொண்டு வந்து கொடுத்து காரியத்தைச் சாதித்துக் கொள்ள பலர் முயன்று வருகிறார்கள். ஆனால் அவர் அப்படிப்பட்டவர்களைப் புறக்கணித்து விடுகிறார்..." என பிரதமர் தேவேகௌடாவின் மகன் கூறியிருப்பது பற்றி...?

! தேவேகௌடா பணம் வாங்கிக் கொள்கிறாரா இல்லையா என்பது ஒரு பக்கம் இருக்கட்டும். அவரை சந்திக்கப் பெட்டியுடன் பலர் வருகிறார்கள் என்ற மகனின் ஒப்புதல் வாக்குமூலமே பிரதமருக்குப் பெரிய இழுக்கு அல்லவா!

● கோபி. நாகராஜன், கலிங்கியம்.

? புதிய மேயர் சென்னையை எப்படி கவனித்துக் கொள்கிறார்...?

! ஏராளமான புகார் மனுக்களை நல்லெண்ணத்துடன் வாங்கிப் போட்டுக் கொள்கிறார். எந்த காலக்கெடுவுக்குள், எந்த அளவுக்கு குறை

• ஐயோ, பாவம்!



கள் நிவர்த்திக்கப்படுகின்றன என்பதைக் கவனிக்க வேண்டும். இதற்கு அவர் என்ன நடைமுறையைக் கையாள்கிறார் என்பதுதான் தெரியவில்லை...

● இர. ரூபன், கோபாலசமுத்திரம்.

*? ஜெ. இனி தலைதூக்க முடியுமா?*

! அது அவருடைய வழக்கறிஞர்களின் சாமர்த்தியத்தைப் பொறுத்த விஷயம்!

● ஜி. மாஜினி, ரெட்ஹில்ஸ்.

*? இந்தியாவின் கடனைப் பற்றி எந்தத் தலைவராவது கவலைப்படுகிறாரா... சொல்லுங்க?*

! ப. சிதம்பரத்தை விட அதிகமாகக் கவலைப்படுகிறார் மன்மோகன் சிங். அண்மையில் FICCI வருடாந்திர கூட்டத்தில் அவர் பேசிய போது இந்தக் கவலை பிரதிபலித்தது. பட்ஜெட் பற்றாக்குறையைத் தவிர்ப்பது, ஏற்றுமதியைப் பெருக்குவது, மானியங்களைக் குறைப்பது என்ற மும்முனைத் தாக்குதலை அவர் உபாயமாய்த் தெரிவித்திருக்கிறார். அதே நேரத்தில் ரூபாயின் மதிப்பு ஆறு பைசா வாகி விட்டதே என சிதம்பரம் வருந்தும் நிலைமை.... ஹூம்!

● எம். அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி.

*? ஆண்டுதோறும் ஏழாயிரம் கோடி ரூபாய் அன்னிய முதலீடு திரட்டப்படும் என்று ப. சிதம்பரம் கூறியிருக்கிறாரே...? இதனால் இந்தியாவின் தனித்தன்மை பாதிக்கப்படுமா?*

! முதலீடுகளை வரவேற்பதால் நமது தனித்தன்மை போய்விடாது. எந்த எந்தத் துறைகளில் முதலீடுகள் வருகின்றன, (தேவையற்ற துறைகளில் அனுமதிக்க வேண்டாம்) என்னென்ன நிபந்தனைகளுடன் வருகின்றன என்பதே முக்கியம். முதலீட்டாளர்களின் தொழில் நுணுக்கங்கள் படிப்படியாக நமக்குத் தெரிவிக்கப்பட வேண்டும். அண்மையில் ஆரம்பிக்கப்பட்டுள்ள (கொரிய) ஹ்யூண்டாய் கார் உற்பத்தித் தொழிற்சாலை ஒப்பந்தத்தில் இது உள்ளடங்கியிருக்கிறது. உள்ளூரில் வேலை வாய்ப்புப் பெருகவும் ஏற்றுமதிக்கும் உதவ வேண்டும். இந்த ஆரோக்கிய நிபந்தனைகளுடன் அன்னிய முதலீட்டை வரவேற்கலாம்.

● வி. சந்திரமோகன், ராயப்பேட்டை.

*? அரசியல் சாசனத்தை உருவாக்கியவர்களுள் சிலரை அரசு தில்லிக்கு அழைத்து கௌரவித்துள்ளதே?*

! அடுத்தடுத்து வந்த அரசுகள் அவரவர் இஷ்டப்படி அரசியல் சாசனத்தை மதிக்காமல் இதுவரை எழுபத்தெட்டு முறை திருத்தங்கள் செய்து விட்டன! இன்னும் இரண்டு திருத்தங்கள் காத்திருக்கின்றன. மகளிருக்கான இட ஒதுக்கீடு பற்றிய திருத்தமும் வந்தால் மேலும் ஒன்று கூடும். இந்த நிலையில் இப்போது அரசியல் சாசனத்தை உருவாக்கியவர்களில் உயிரோடு இருப்பவர்களை டெல்லிக்கு அழைத்துப் போய் கௌரவிப்பதில் என்ன பயன்?



• தியாகம் தேவையில்லை



• தற்காப்பு டயலாக்!



• தொடரும் கவலை

● பி. ஜெயபிரகாஷ், சேத்துமடை. ❑

*? 'சுவிஸ் வங்கியில் இந்தியர்கள் போட்டுள்ள பணம் எண்ணி மாளாது' என சுவிஸ் வங்கி அதிகாரிகளே கிண்டல் செய்கிறார்களாமே...?*

! இந்தியர்கள் மட்டுமா, உலக நாடுகள் பலவற்றிலும் எத்தனையோ பேர் சுவிஸ் வங்கியில் கணக்கு வைத்திருக்கிறார்கள். ரகசிய கணக்கு வைத்துக் கொள்ள வாய்ப்பு - வசதி எல்லாம் பண்ணிக் கொடுத்துவிட்டு இப்படி கிண்டல் செய்வது அசிங்கமில்லையா...?

● எம். பிரபு, குமராட்சி.

*? யாரைக் கண்டு பரிதாபப்படுகிறீர்?*

! கர்நாடக முதல்வராக இருந்து கொண்டு 'மது-மங்கை விஷயத்தில் நான் பலவீன மானவன்' என்று ஒப்புக் கொண்டுள்ள ஜே.எச். பட்டேலை எண்ணித்தான்.

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
பி. ஜெயப்பிரகாஷ்,
டி.என்.ஈ.பி. குடியிருப்புசர்க்கார்பதி,
சேத்துமடை அஞ்சல்,
கோவை மாவட்டம் - 642 133

# நட்புக்கு முகமேது

இன்று வரை
அவன் முகத்தைப் பார்த்ததில்லை.
பல வருடங்களாக நாங்களிருவரும்
நெருங்கிய நண்பர்கள்.

நண்பனாயிருப்பதற்கு
முகம் தேவையில்லையென
முதலில் நம்ப முடியாமலிருந்தது.

உண்மையாக இது காலத்தால்
நிர்ப்பந்தமாகும் வரை.

இன்று
கண்டம் கண்டமாய்ப் பிரிந்து
வாழும் நாங்கள் ஏதோ
நேரில் கண்டது போல்
எப்படியோ பழகி விட்டோம்
ஒரு விதமாய்.

நட்புக்கு முகம் முக்கியமல்லவென்று
நடப்பில் இன்று புரிந்து விட்டது.

எனக்குள் அவன் முகமும்
அவனுக்குள் என் முகமும்
நிஜமான நிழற்படம் போல்
நெஞ்சில் தெளிவாகி விட்டது

நாட்டுக்கு நாடு
நாங்கள் கூப்பிட்டுக் கொள்ளும்
குரல்களால்,
எங்கள் கற்பனை முகத்துக்கு
பேச்சு வந்து விடுகிறது.
பரஸ்பர
பாசமும் பிரிவும்
சிரிப்பும் சோகமும்
அன்பும் அடக்க முடியாத கண்ணீரும்
அவரவர் மனத்திலுள்ள முகங்களில்
அடிக்கடி தழுதழுக்கிறது

வாழ்வின் அவசர அவசியங்களும்
அரசியலின் சூறாவளிப் பேய்க்காற்றும்
பிறந்த மக்களை
ஊர்விட்டு ஊர் பெயர்ந்து
உலக மூலைகளில்
உதறி இறைக்கும்
இக்கால சோகப் பிரளயத்தில்
இப்படித்தான் நண்பர்கள்
முகம் பார்க்காமலிருக்க வேண்டுமென
முடிந்த விதியாகி விட்டது

நட்புக்கு எதற்கு முகம் என்று
நாங்கள் நினைக்கப் பழகி விட்டோம்!

முகம் ஒரு பொருட்டில்லாமல்
உலகம் முழுவதும் இன்றெனக்கு
நண்பர்கள் நிறைந்து விட்டார்கள்.
மனம் நிறைய புதுப்புது முகங்களுடன்
அறிமுகமான ஓர் உலகம்,
உள்ளே அன்பால் சுழலுகிறது.

அமானுஷ்யமாய்
எனக்குள் அருளும் ஆனந்தமும்
பெய்து பெருக்கும்
இறைவனின் முகத்தை
எனக்கென்ன
அடையாளமா தெரிகிறது?

— எஸ்.வைதீஸ்வரன்



# ஜாலி போட்டி - 21

## பரிசு ரூ.5000/-

ஜெயலலிதா வீட்டில் சோதனை போட்ட அதிகாரிகள் அங்கே முன்னூறு ஜோடி செருப்புக்களைக் கண்டுபிடித்ததாக செய்தித்தாள்களில் சொல்கிறார்கள். இது என்ன அநியாயம்! அக்கிரமம்! ஒரு வீட்டில் முன்னூறு ஜோடி செருப்புக்களா? அதை அவர்கள் வேலை மெனக்கெட்டு எண்ணினார்களா? மலைமாதிரி குவிந்துகிடக்கிற செருப்புக் களை எண்ணுவது என்ன அத்தனை சுலபமா? எங்கே, கீழே குவிந்திருக்கிற செருப்புக் களை எண்ணி, எத்தனை ஜோடி என்று சரியாகச் சொல்லுங்கள் பார்க்கலாம்! ஜெ.வீட்டில் செருப்பு எண்ணியவர்களுக்குப் பதவி உயர்வு கிடைக்கிறதோ இல்லையோ, இங்கே சரியாக எத்தனை ஜோடி என்று எண்ணி எழுதினால் ரூ.5000 பரிசு கிடைக்கும்! பலர் சரியாக எண்ணி விட்டால் குலுக்கலில் ஒருவர். ஆசிரியர் தீர்ப்பே இறுதி. கடைசி தேதி 30.12.96



ஜாலி போட்டி -21

மொத்தம் ............ஜோடிசெருப்புகள்.

பெயர்: ..........................................................

முகவரி: ..........................................................

..........................................................



## மார்கழியில் குளிரைத் தடுக்க முடியாது.

## ஆனால் எய்ட்ஸைத் தடுக்க முடியும்.

எய்ட்ஸைத் தடுக்க ஆணுறை உபயோகியுங்கள்.


மேலும் விவரங்களுக்கு:
டாக்டர் கே. காந்தராஜ்,
துணை இயக்குநர்





தமிழ்நாடு எய்ட்ஸ்
கட்டுப்பாட்டு அமைப்பு
417, பாந்தியன் சாலை, எழும்பூர்,
சென்னை 600 008.
போன் : 8255261 / 8255467 / 8254917
24 மணிநேரமும் இயங்கும் ஹாட் லைன் :
8256882 / 8256864

**எம்.**ஜி.ஆர். ஆட்சிக்கு வந்த நேரம். ஒருநாள் காலை, ராமாவரம் தோட்டத்தில் போன் மணி ஒலிக்க, உரையாடல் இப்படித் தொடர்ந்தது :

(மறுமுனையிலிருந்து) ''மிஸ்டர் மகாலிங்கம் (எம்.ஜி.ஆரின் உதவியாளர்) இருக்கிறாரா?''

''நீங்கள் யார் பேசுவது?''

''மிஸ்டர் பொள்ளாச்சி மகாலிங்கம் அவர்களின் பி.ஏ. பேசுகிறேன்.''

''உங்கள் வயது என்ன?''

''26.''

''அவர் வயது?''

''55.''

''உங்களுக்கு அவர் யார்?''

''எங்கள் க்ரூப் சேர்மேன்.''

''அப்போ சேர்மேன், பி.ஏ. என்றுதான் சொல்லணும். வயதான அவரை மரியாதை இல்லாமல் பெயர் சொல்லிக் குறிப்பிடலாமா?''

''ஐயா, எங்கள் கம்பெனி வட்டாரத்தில் பேசும்போது 'சேர்மன் உதவியாளர்' என்று குறிப்பிட்டால் எல்லோருக்கும் தெரியும். ஆனால் வெளியில் உள்ளவர்களுக்கு சேர்மன் என்றால் உடனே புரியுமா? ஐயா மகாலிங்கம் அவர்கள்தான் எங்கள் குடும்பத்துக்கு முதல் தெய்வம். அப்புறம் தான் மற்ற தெய்வங்கள். அது சரி... நீங்கள் யார் பேசறது?''

''நான் எம்.ஜி. ராமச்சந்திரன் பேசுகிறேன்.''



• மகாலிங்கம்



• ரவி

''**இ**ட்டத்தட்ட இருபது வருடங்கள் கழிந்த நிலையில், ஏதோ நேற்றுதான் எம்.ஜி.ஆருடன் பேசியது போல் நினைவுகள் இளீனாக இருக்கின்றன. எதையுமே நான் ஐயாவிடம் (நா. மகாலிங்கம்) மறைப்பது கிடையாது. எம்.ஜி.ஆருடன் நடந்த உரையாடலையும், உடனே சொல்லி விட்டேன்'' என்று நம்மிடம் சொன்னார், சக்தி க்ரூப் நிறுவனங்களின் தலைவர் பொள்ளாச்சி நா. மகாலிங்கம் அவர்களின் தனிச் செயலாளர் சி. ரவீந்திரன் என்கிற ரவி.

# ''இவர் பயணச் சொன்னால் இன்றும் நடக்கும்!''

ரவிக்கு சொந்த ஊர் மைலாப்பூர் தான்! அங்குள்ள அப்பர்சாமி கோயிலின் பரம்பரை தர்ம கர்த்தாக்கள் ரவியின் குடும்பத்தினர். அப்பா வழக்கறிஞர் தொழிலுக்குப் படித்திருந்தாலும், ஆன்மீகப் பணிகளிலே காலத்தைக் கழித்தவர். பள்ளி, கல்லூரிப் படிப்பையெல்லாம் மைலாப்பூர் வட்டாரத்திலேயே முடித்துக் கொண்டு விட்ட ரவி, எல்லா இளைஞர்களைப் போல், வேலை தேடும் முயற்சியில் இறங்கினார். பி.ஏ. பொருளாதாரப் படிப்பு வேலை வாங்கிக் கொடுக்கவில்லை.

"எங்கள் வீட்டுக்குக் கீழே ஒரு தட்டெழுத்து இன்ஸ்டிடியூட் இருந்தது. வேலையில்லாமல் இருந்த என்னை, அதன் உரிமையாளர், இன்ஸ்டிடியூட்டைப் பார்த்துக் கொள்ளச் சொன்னார். அப்போது சி.எஸ். மகாதேவன் என்ற ஒருவர் டைப் அடிக்க நிறைய மேட்டர்களுடன் வருவார். நான் டைப் அடித்துத் தருவேன். சிறிது நாள் கழித்து, திட்டக்கமிஷன் உறுப்பினராக இருந்த நா. மகாலிங்கம் அவர்களின் செயலாளர்தான் மகாதேவன் என்று தெரிந்து கொண்டேன். ஏகப்பட்ட கட்டுரைகள், அறிக்கைகள், கொண்டு வருவார் மகாதேவன். நான் தப்பில்லாமல் நீட்டாக டைப் அடிப்பது அவருக்குப் பிடித்து விட்டது.

"நீ ஐயா வீட்டுக்கே வந்து டைப் செய்ய முடியுமா?" என்று கேட்டார். 'சரி' என்று ஒப்புக் கொண்டு, வந்து வேலை செய்தேன். சிறிது நாள் கழித்து ஐயாவின் தனி அலுவலகத்தில் (chairman's office) ஒரு டைப்பிஸ்ட் தேவைப்பட்டது. அவரது துணைவியார், "பையன் ரொம்ப சுறுசுறுப்பாக இருக்கிறானே. இவனையே வைத்துக் கொள்ளுங்கள்" என்று ஐயாவிடம் சொன்னார். அப்படித்தான் இங்கு வந்து சேர்ந்தேன்" என்று சொல்கிறார் ரவி.

டைப்பிஸ்டாகச் சேர்ந்து, தனிப்பட்ட உதவியாளராக மாறி, இந்த இருபத்தைந்து வருட காலத்தில் தனிச் செயலாளர் என்ற அந்தஸ்துக்கு உயர்ந்திருக்கிறார் ரவி. மகாலிங்கம் அவர்களின் வீடான சக்தி நிலையத்தில் ரவியின் குரல் ஒலித்துக் கொண்டே இருக்கிறது. மகாலிங்கம் யாரைச் சந்திக்க இருந்தாலும் சரி, அல்லது அவரைச் சந்திக்க யார் வந்தாலும் சரி; நேரத்தை ஃபிக்ஸ் செய்பவர் ரவிதான். சென்னையில் அவர் இருக்கும்போது எந்தக் காரணம் கொண்டும் லீவு எடுக்காமல் உடன் இருப்பதைக் கட்டாயமான ஒன்றாகக் கருதி, காரியம் ஆற்றிக் கொண்டிருக்கிறார் ரவி..

"ஐயாவுக்குத் தேவை ஃபர்பெக்ஷன். இவ்வளவு வருடப் பழக்கத்தில் அவர் என்ன நினைக்கிறார் என்பதைப் புரிந்து கொள்ளும் ஆற்றலைக் கடவுள் எனக்குக் கொடுத்திருக்கிறார். 99.99% எல்லாம் சரியாகவே அமைந்து விடும். அப்படி ஏதாவது சிறு தவறு நடக்குமானால், அதற்குக் காரணம் வேறு யாராவதாக இருப்பார்கள்!" என்கிறார்.

சக்தி நிலையத்தில் வேலைக்கு வந்த பிறகு, சில வருடங்களில் இந்தியன் ஆயில் கம்பெனியில் ரவிக்கு வேலை கிடைத்தது. நல்ல சம்பளம்; விடுமுறைகள்; எதிர்காலத்தில் பிரமோஷன் பல வரும். மனைவி மற்றும் மாமனார் ஆகியோரிடம் கலந்து ஆலோசித்த போது இருவரும், "இந்தியன் ஆயிலுக்கு நீங்கள் போனால் அங்கே பத்தாயிரத்தில் ஒருவர். ஆனால் சக்தியில், தலைவருக்கு அருகே இருந்து சேவை செய்யும் வாய்ப்பைப் பெற்றிருக்கிறீர்கள். ஆகையால் இங்கேயே தொடருங்கள்" என்று வலியுறுத்திச் சொன்னார்களாம்!

" 'அப்படியென்றால் நல்ல நாள், கெட்ட நாள் என்று வீட்டில் இருக்க வைக்க முயற்சி செய்யக் கூடாது. அப்படி இருக்க முடியா விட்டால் வருந்தக் கூடாது' என்று அப்போதே அவர்களிடம் உறுதிமொழி வாங்கி விட்டேன். ஆதலால் இப்போது நாள், கிழமை என்று பார்க்காமல் ஐயாவிடம் பணிபுரிய முடிகிறது. வீட்டிலும் ஒன்றும் முணுமுணுப்பில்லை" என்று மெலிதான புன்னகையுடன் சொன்னார் ரவி.

தொழிலதிபர், ஆன்மீகவாதி, இலக்கிய ஆர்வலர், கட்டுரையாளர், பத்திரிகை ஆசிரியர், வள்ளலார், பாரதி பக்தர் என்று மகாலிங்கம் அவர்களுக்குப் பல முகங்கள். ஆகையால் அவரைப் பார்க்க வருபவர்களும் பலவிதமானவர்களாக இருப்பார்கள்! அவர்கள் எல்லோரையும் சரியாகக் கணித்து அவரைச் சந்திக்க அனுமதிப்பவர் ரவிதான்.

"உதவி கேட்டு வருபவர்கள் – குறிப்பாகக் கல்வி விஷயமாக இருந்தால் – கல்வியில் சிறப்பாக இருக்கும் மாணவ, மாணவிகளுக்கு கண்டிப்பாக மேல் உதவி செய்வார். சிபாரிசே தேவையில்லை இவரிடம்" என்கிறார்.

ஒருமுறை ரவியின் மிக நெருங்கிய சொந்தக்காரர் ஒருவர் அவர் மகனுக்கு உதவி பெற மகாலிங்கத்திடம் வந்தார். ரவி, கட்டாயம் சிபாரிசு செய்வார் என்பது அவர்களின் எதிர்பார்ப்பு. ஆனால் ரவி மிகத் தெளிவாகவே, "தகுதியானவர்களுக்கு ஐயா கண்டிப்பாக உதவி செய்வார்" என்று சொல்லி, 'சிபாரிசு செய்ய மாட்டேன்' என்று சொல்லி விட்டார். இறுதியில் அந்த மாணவனுக்கு எந்த சிபாரிசும் இன்றி தகுதியின் அடிப்படையில் உதவி கிடைத்தது!

"அவர் பெயரைச் சொன்னால், எங்கும், எதுவும் நடக்கும். ஆனால் முழுக்க முழுக்க, அவரது பணிகளுக்காகவும், கம்பெனியின் நலனுக்காகவும் மட்டுமே அந்தச் செல்வாக்கைப் பயன்படுத்துவது என்பதை வைராக்கியமாகக் கொண்டிருக்கிறேன்" என்கிறார் ரவி.

**- ஸ்ரீநிவாசன்**

படம்: **பேஜர் கே.மூர்த்தி**

# ஒரு காதல் யுத்தம்!

**டீ.வி.யில் செய்தி வாசித்தவர். த.நா.இளைஞர் காங்கிரஸ் தலைவராக இருந்தவர், இனியன் சம்பத். எங்கே இப்போது ஆளைக்காணோம்?**

சுலோசனா சம்பத்துக்கு எதிராக, ஆர். வெங்கட்ராமனை ஆதரித்துப் பிரசாரம் செய்தவர் இனியன் சம்பத்! 1980 பாராளுமன்றத் தேர்தலின்போது அ.தி.மு.க. வேட்பாளராக, தென் சென்னை பாராளுமன்றத் தொகுதியில் போட்டியிட்டபோது தான் இப்படித் தாயை எதிர்த்தார் மகன்.

அரசியல்ரீதியாக அம்மா வும் மகனும் மோதிக் கொண்டாலும் குடும்பத்தில் குழப்பமில்லை. ஆனால் 89ல், குடும்ப ரீதியாகவும் மோதிக் கொள்ள நேர்ந்தது. காரணம் இனியன் சம்பத்தின் காதல்!

அப்போதைய தென் சென்னை எம்.பி. வைஜயந்திமாலாவின் வீட்டில் டெலிபோன் ஆபரேட்டராய்ப் பணிபுரிந்து கொண்டிருந்தார் ஒரு பெண்மணி. பெயர் டெய்ஸி ராணி.

இளைஞர் காங்கிரஸ் தலைவர் என்கிற முறையில் அடிக்கடி வைஜயந்தி மாலாவைச் சந்திக்கச் செல்வார் இனியன் சம்பத். அப்போது இனியனுக்கு அறிமுகமானார் டெய்ஸி ராணி. இருவருக்குமிடையே காதல் பிறந்தது. திருமணம் செய்து கொள்ள இருவரும் முடிவெடுத்தனர்.

மராட்டிய மொழிபேசும் கிறிஸ்தவ குடும்பத்தைச் சேர்ந்தவர் டெய்ஸி. மகனின் காதல் திருமணத்தை அம்மா சுலோசனா சம்பத் ஏற்கவில்லை.

''பெரியாருக்கு மிக நெருக்கமானவர் உங்கள் அப்பா. சுயமரியாதைக்காரர். அவருடைய பிள்ளையான உங்கள் காதல் திருமணத்துக்கு உங்கள் அம்மா எதிர்ப்பு தெரிவிக்க என்ன காரணம்?''

''இந்தக் கேள்வியை, நீங்கள் என் அம்மாவிடம்தான் கேட்க வேண்டும். என் அம்மா, எங்கள் திருமணத்தை ஏற்றுக் கொள்ளாதது கூட ஓ.கே.! ஆனால், பத்திரிகையொன்

றில் என் மனைவியைப் பற்றியும், அவரது குடும்பத்தினரைப் பற்றியும் அவமரியாதையாகப் பேசியதைத்தான் என்னால் ஜீரணித்துக் கொள்ள முடியவில்லை. அதன் பின் முற்றிலுமாக நாங்கள் விலகி வந்து விட்டோம்'' என்று கூறும் இனியன் சம்பத், இப்போது பெசன்ட் நகரில் வசிக்கிறார்.

பேச்சு அரசியல் பக்கம் திரும்பியது.

"தமிழ் நாடு காங்கிரஸில் இருந்த பல்வேறு கோஷ்டிகளுக்குள்ளேயும், ஒரே ஒரு விஷயத்தில் கருத்து ஒற்றுமை இருந்தது என்றால், அது தமிழ்நாடு இளைஞர் காங்கிரஸ் தலைவராக இருந்த என்னைப் பதவியிலிருந்து எப்படியும் இறக்கி விடுவது என்பதில்தான். 89ல் இளைஞர் காங்கிரஸ் தலைவரான நான், ஒன்னரை வருடத்தில் அந்தப் பதவியை இழந்தேன்.

"நான் இளைஞர் காங்கிரஸ் தலைமைப் பொறுப்பை ஏற்றுக்கொண்டது கூட அசாதாரணமான ஒன்றுதான். ஜெயந்தி நடராஜன், தான் அப்பதவிக்கு வரவேண்டும் என்று நினைத்தார். மரகதம் சந்திரசேகர், தன்னுடைய மகள் லதா பிரியகுமார் இளைஞர் காங்கிரஸ் தலைவியாக வேண்டும் என்று எண்ணினார். மூப்பனார், வாழப்பாடி, தங்கபாலு அனைவரும் தமது ஆதரவாளர்களுக்கு அந்தப் பதவி கிடைக்க முயற்சிகள் மேற்கொண்டனர். இத்தனை முனைகளிலிருந்து பிரஷர் வரவே, ராஜீவ்காந்தி, அகில இந்திய இளைஞர் காங்கிரஸ் தலைவராக இருந்த முகுல் வாஸ்னேவிடம், அனைத்து தரப்பினரும் முகம் கோணாமல் இருக்கும்படி ஒருவரைத் தேர்ந்தெடுக்கச் சொன்னார். நான் தமிழ்நாடு இளைஞர் காங்கிரஸ் தலைவராக்கப் பட்டேன்.

"ராஜீவ் காந்தியின் குறிப்பறிந்து, நான் அனைத்து கோஷ்டித் தலைவர்களையும் அனுசரித்து நடந்து கொண்டேன். காமராஜ் பிறந்த நாளையொட்டி 25 ஆயிரம் பேருக்கு தலா ஐந்து கிலோ அரிசி, இலவசமாய் வழங்கினேன். தமிழ்நாடு முழுவதும் சுற்றுப்பயணம் செய்து, இளைஞர் காங்கிரஸ்காரர்களைச் சந்தித்து, கட்சிக்கே புத்துயிர் ஊட்டினேன். அப்படியிருந்தும், என்னைப் பதவியிலிருந்து நீக்கி விட்டார்கள். இதில் இன்னொரு வேடிக்கை என்ன தெரியுமா? பல்வேறு கோஷ்டியினரும் என்னைப் பதவி நீக்கம் செய்வதில் வெற்றி பெற்றார்களேயொழிய, தங்கள் ஆதரவாளர்களுக்கு பதவி பெற்றுத் தருவதில் வெற்றி பெறவில்லை. அடுத்த மூன்றாண்டுகளுக்கு அந்தப் பதவி காலியாகவே இருந்தது!

"அதனால், வெறுத்துப்போன நான், காங்கிரஸிலிருந்து விலகி வி.பி.சிங் தலைமையிலான ஜனதா தளத்தில் சேர்ந்தேன். அங்கேயும் ஒன்றும் சரியில்லை. வை.கோபால்சாமி, ம.தி.மு.க. துவக்கியபோது, எழுச்சிமிகு இளைஞர்; சிறந்த பார்லிமெண்டேரியன் என்று, அதிலே சேர்ந்தேன். ஆனால் நாளடைவில், அவருடைய சர்வாதிகாரமான போக்கு எனக்குப் பிடிக்கவில்லை. ஆக்டிவ் பாலிடிக்ஸிலிருந்து ஒதுங்கிக் கொண்டு விட்டேன்.

"ஈரோட்டில், மூதாதையர் சொத்து கொஞ்சம் இருக்கிறது. ஆவடி பக்கத்தில் கொஞ்சம் நிலம் இருக்கிறது. டீசல் ஆட்டோ டீலர்ஷிப் எடுத்து, நஷ்டம் வந்ததால் மூடிவிட்டேன்.''

"இப்போது என்ன செய்கிறீர்கள்?''

"நாலுவருடங்கள் சென்னை தொலைக்காட்சியில் நியூஸ் படித்தேன். தீவிர அரசியல் ஈடுபாடு காரணமாக என் பெயரை, செய்தி வாசிப்பவர்கள் பட்டியலிலிருந்து நீக்கி விட்டார்கள். ஆனாலும், விட்டகுறை தொட்டகுறையாக, சின்னத்திரை சம்பந்தம் இன்னும் தொடர்கிறது. 'டாப் டக்கர்' என்ற 13 வார டீ.வி. தொடரில், வில்லன் கூட்டத்தின் தலைவனாக நடித்தேன். தவிர மழை வருது, விழுதுகள் போன்ற தொடர்களிலும் நடிக்க வாய்ப்பு கிடைத்தது.''

"மறக்க முடியாத சம்பவம்?''

"78ல் இந்திராகாந்தியை, மத்தியில் பொறுப்பேற்ற ஜனதா அரசு கைது செய்த போது, பிரதமர் மொரார்ஜி தேசாயின் கொடும்பாவியை அண்ணா சாலையில், அண்ணா சிலையருகே கொளுத்தியதற்காகக் கைதாகி, பதினைந்து நாட்கள் ரிமாண்டில் இருந்தேன். அதன் பின் பதினான்கு மாதங்கள் கேஸ் நடந்தது. நீதிபதி ரூபாய் 50 அபராதம் செலுத்தும்படித் தீர்ப்பளித்தார். நான் அபராதம் கட்டினால் செய்த காரியத்துக்கு மன்னிப்பு கேட்பது போல ஆகிவிடும். எனவே 'அபராதம் கட்ட விரும்பவில்லை' என்று கூறி விட்டேன். எனக்கு ஏழு நாட்கள் கடுங்காவல் தண்டனை அளிக்கப்பட்டது. ஜெயிலில், தனியறையில் ஏழு நாட்கள் கடுங்காவல் தண்டனை அனுபவித்தேன். இதில் என்ன விசேஷம் என்றால், நான் தண்டனை அனுபவித்த போது, மீண்டும் தேர்தலில் வென்று இந்திரா காந்தி பிரதமராகி விட்டார்!''

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

• நீரிழிவு நோய் உள்ளவர்கள், நாவல் பழக் கொட்டையைத் தூளாக்கி வைத்துக் கொண்டு, ஒரு காண்டித் தூளை வாயில் போட்டு, தண்ணீர் அல்லது பால் பருகலாம்.

- ஆர். பார்த்திபன்

# வியக்க வைத்த வேகம்!

● "தமிழ்நாடு காங்கிரஸில் ஒற்றுமை உண்டாக வேண்டுமென்றால் அதற்கு ஒரே வழி கட்சியின் மேல்மட்டத்திலிருந்து அடிமட்டம் வரை தேர்தலை நடத்துவது தான்" என்ற வாழப்பாடியின் கூற்று உண்மையானது. உட்கட்சி ஜனநாயகம் வளராதவரை காங்கிரஸில் ஒற்றுமை என்பது கேள்விக்குறி தான்.
தூத்துக்குடி - 1, எஸ். விஜயலதா.

● மேதகு தமிழக ஆளுனர் சென்னாரெட்டி மறைவு திங்கள் அதிகாலை. புதன் இதழ் கல்கியில் சாந்தியடையப் பிராத்தனை! வியக்க வைத்தது உங்கள் வேகம்.
குமராட்சி, எம். பிரபு.

● கல்கி தலையங்கத்திற்கு மிரட்டல் போன் வந்தது என்பதைப் படிக்க, கவலையளித்தது. முந்தைய ஆட்சியில் இத்தகைய மிரட்டல் வந்தால் ஆட்சியாளரின் மறைமுக ஆதரவுடன் தான் இம்மிரட்டல் என்பது தெரியவரும். மிரட்டல் தொலைபேசிப் பேச்சுக்களை கண்காணித்து பத்திரிகை சுதந்தரத்தைப் பாதுகாப்போம் என போலீஸ் கமிஷனர் உறுதியளித்திருப்பது மன நிம்மதியை அளிக்கிறது.
ஸ்ரீரங்கம், அ. சம்பத்.

● டீ.வி. விமர்சனம் பகுதியில் ரேவதியின் விழிப்புணர்வுப் பிரசாரத்தைப் பாராட்டியுள்ளீர்கள். ரேவதி மட்டுமல்ல; ரஞ்சிதாவும் எய்ட்ஸ் விழிப்புணர்வுப் பிரசாரம் செய்கிறார். அவர், 'உல்கத்தில' என உலகத்தை உச்சரிப்பதுதான் பயமுறுத்துகிறது.
குடந்தை - 1, பிரசன்னகுமார்.

● பணத்திற்காக எப்படியும் வாதாடுவார்கள் வழக்கறிஞர்கள் என்ற நிலை- இன்று இருக்கும் போது, கொள்கைப் பிடிப்போடு-தொழிலாளர் நலன் காக்கும் உள்ளத்தோடு செயல்படும் வழக்குரைஞர் சந்துரு அவர்களைப் பற்றி அறிந்தபோது சந்தோஷமாக இருந்தது.
திருவண்ணாமலை, என். சண்முகம்.

● கல்கியில் வெளிவரும் சுற்றுச்சூழல் கவிதைகளைப் படிக்கும் பொழுதே நெஞ்சு பதைக்கிறது. அதுபோதாதென்று உலக அதிசயம் தாஜ்மகாலும் சுற்றுச்சூழலால் மாசு படுகிறது என்ற செய்தியை வெளியிட்டு நெஞ்சை மேலும் பதைபதைக்க வைத்து விட்டீர்கள். போகிற போக்கில் விஞ்ஞான வளர்ச்சி நமக்கே எமனாக முடிந்து விடுமோ என்ற பயம் வந்து விட்டது!
திருப்பூர், ப. சங்கர்.

● சிறு பிள்ளைகளின் மெல்லிய மன உணர்வுகளையும், ஒரு தகப்பனின் பதற்றமான பாச உணர்வினையும் இயல்பாக வெளிப்படுத்தி இருந்தது 'விலகல்' சிறுகதை.
விராலிமலை, ச. நாகராஜன்.

● 'ஞானப்பழ'த்தைப் பிழிந்து தந்த 'ரசம்'.. (விமர்சனம்)... சுவையாய், சூடாய் இருந்தது. நன்றி!
சென்னை - 49, மயிலை.கோபி.

## ரூ. 20 பரிசுக் கடிதங்கள்

● உ.பி.யில் நிலவியது போன்ற பிரச்னைக்குத் தீர்வு தனிப்பெருங் கட்சியை ஆட்சி அமைக்க அழைப்பது மட்டுமல்ல, தானே முன் வந்து மெஜாரிட்டியை நிரூபிக்க நிபந்தனையும் விதிக்கக் கூடாது. தனிப்பெரும்கட்சிக்கோ எந்தக் கூட்டுக்கோ மெஜாரிட்டி இல்லை என்று தெளிவாக உள்ள நிலையில் மெஜாரிட்டியை நிரூபிக்க வற்புறுத்துவது ஒழுங்கீனத்துக்குத் தூண்டுவதே ஆகும். வேண்டுமானால் எதிர்கட்சிகள் நம்பிக்கை இல்லா தீர்மானம் நிறைவேற்றி கவிழ்க்கட்டுமே! மறுதேர்தலுக்கு அஞ்சி அதைச் செய்யமாட்டார்கள். கவிழ்க்காதவரை அதுவும் ஒரு வகை எதிர்மறை நம்பிக்கை வோட்டுதானே!
சிட்லபாக்கம், அ. ஷண்முகசுந்தரம்.

● குதிரை வியாபாரம் மூலம் பெரும்பான்மையை நிரூபித்துவிட முடியும் என்பது தான் பா.ஜ.க.வினர் தங்களையே ஆட்சியமைக்குமாறு கவர்னர் கேட்டுக் கொள்ள வேண்டும் என்று கூறியதின் நோக்கம். ரொமேஷ் பந்தாரி இதற்கு உடன்படாதது சரியே. ஆனால் இவருக்கு அரசியல் பின்னணி உண்டு என்பதால் அவர் முடிவு சந்தேகத்துக்குள்ளாகி, பலத்த எதிர்ப்பு எழுந்தது. ஆளுனர் நியமனங்கள் பாரபட்சமின்றி இருந்தால் 356 ஆவது சட்டப் பிரிவு துஷ்பிரயோகமாகும் என்ற அச்சமிருக்காது. ஆளுநர்களாக அரசியலிலேயே ஈடுபடாத மேன்மக்களை மட்டிலுமே நியமனம் செய்தால் நீதி கிடைக்கும்.
சென்னை - 40, எம்.எஸ். நளினி.

வட்டமேஜை

**நா**யக்குடைக் காளான் தலைமுடியும், பதினேழு இடத்தில் கிழிந்து ஒட்டுப் போட்ட புழுதி படிந்த ஜீன்ஸுமாக மோட்டார் பைக்கில் வந்து இறங்கினான் அச்வின். கண் லேசாகச் சிவந்து ராத்திரி தூங்கவில்லை என்றது.

"நண்பன் ஒருத்தன் அமெரிக்கா போறான்... விசாவுக்காக கான்சலேட் வாசல்லே நேத்து ராத்திரியிலேயிருந்து க்யூ. நாலு எம்.சி.ஏ, ரெண்டு எம்.எஸ், மூணு எம்.சன்னு எல்லாரும் பிளாட்பாரத்திலே குந்தி, வேர்க்கடலை கொறிச்சுக்கிட்டு, கெட்டில் சாயா குடிச்சுக்கிட்டு, விடிய விடியப் பேசிக்கிட்டிருந்தோம். காலையிலே சொர்க்கவாசல் திறந்து உள்ளே அனுப்பிச்சுட்டு வரேன்..."

நான் சுடச்சுடக் காப்பியோடு வருவதற்குள் அவன் கம்ப்யூட்டர் முன் உட்கார்ந்திருந்தான்.

"அமெரிக்க கான்சலேட் உள்ளே நுழையத்தான் இப்படித் தேவுடு காக்க வேண்டியிருக்கு.. அவங்க ஜனாதிபதி வீட்டுக்குள்ளாற ரைட் ராயலாப் போறேன் பாரு..."

http://www.Whitehouse.gov என்று அவன் கொடுத்த இன்டர்நெட் விலாசம் நேராக வாஷிங்டன் வெள்ளை மாளிகையில் கொண்டுபோய்ச் சேர்த்தது.

ராத்திரி விளக்கு வெளிச்சத்தில் கம்பீரமாகக் காட்சிதரும் வெள்ளைமாளிகை திரையில் தென்பட, நட்சத்திரங்களும் நீலப் பட்டைகளும் பளிச்சிட மெல்ல அசையும் அமெரிக்கக் கொடி இரண்டு பக்கத்திலும்.

'ஜனாதிபதி' என்ற பகுதியைத் தேர்ந்தெடுக்க, முதலில் கண்ணில் பட்டது சிரித்தபடி நிற்கிற ஹில்லரியின் படம் - ஜனாதிபதி கிளிண்டனின் மனைவி.

"இங்கேயும் சிதம்பரம் இல்லே போல இருக்கு... மதுரைதான்..."

அச்வின் சொல்லிக்கொண்டு இருக்கும் போதே கம்ப்யூட்டரிலிருந்து பெண்குரல் ஆங்கிலத்தில்.

"ஹலோ! நான்தான் ஹில்லரி ரோதாம் கிளிண்டன்... வாங்க வாங்க...

# காதலைப்பது எப்படி?

இப்பத்தான் வழி தெரிஞ்சுதா... உங்களுக்கு தொண்டு செய்யத்தான் நாங்க இருக்கோம்... உருப்படியா என்ன செய்யலாம்னு நீங்கதான் யோசனை சொல்லணும்... வீட்டை சுத்திப் பாத்துட்டு வெளியே போறபோது உங்க பேரு, விலாசம் எல்லாம் எழுதிவச்சுட்டுப் போங்க மறக்காம... என்ன.... ரொம்ப தாங்க்ஸ்!..."

தொடர்ந்து வந்த தகவல்படி, ஹில்லரிக்குப் பிறந்த வீடு சிகாகோவில்... அப்பாவுக்கு தலைச்சன் பெண்... அப்புறம் இரண்டு தம்பிகள்... அக்கா மேல் உயிரையே வைத்திருக்கிறார்கள்...

"ரெண்டு தபா ஜனாதிபதி எலக்ஷன்லே கெலிச்சு வந்துட்டாரு கிளிண்டன்... அதுக்கும் முந்தி அர்கான்ஸா மாநில கவர்னரா வேறே இருந்திருக்காரு.. இப்படி ஒரு மச்சானை வச்சுக்கிட்டு ஹில்லரியோட தம்பிகள்

## நெட்ஜோக்

**ஒ**ரு சின்னப் பையன் நூறு டாலர் அனுப்பச் சொல்லிக் கடவுளிடம் வேண்டிக் கொண்டான். கிடைக்காமல் போகவே, 'கடவுள், அமெரிக்கா' என்ற விலாசத்துக்குக் கடிதம் எழுதிப் போட்டான்- "உடனே நூறு டாலர் அனுப்பவும்."

தபால் எப்படியோ வெள்ளை மாளிகையில் அமெரிக்க ஜனாதிபதிக்குப் போய்ச் சேர்ந்தது. பிரித்துப் படித்த கிளிண்டன் மனமுருகி ஐந்து டாலரைப் பையன் பெயருக்கு அனுப்பி வைத்தார்.

வாங்கிக் கொண்டு அவன் கடவுளுக்கு நன்றிக் கடிதம் எழுதினான்:-

"நன்றி ஆண்டவனே! என்ன இருந்தாலும் பணத்தை நீங்கள் வெள்ளை மாளிகை மூலமாக அனுப்பியிருக்கக் கூடாது. அவர்கள் கமிஷன் 95 டாலரைக் கழித்துக்கொண்டு பாக்கி 5 டாலரைத்தான் எனக்கு அனுப்பியிருக்கிறார்கள்..."

பேரே வெளியே தெரியல்லியே... பட்டு டல்லான உடன்பிறந்த சகோதரர்கள் போல இருக்கு..."

அச்வின் அடுத்து வெள்ளை மாளிகை நூல் நிலையத்துக்குள் நுழைந்தான். பழைய சரித்திர ஆவணங்களும் அரிய புத்தகங்களும் சேகரித்து வைக்கப்பட்ட இடம் அது.

"இதான்ப்பா அமெரிக்க சுதந்திரப் பிர கடனம்..."

அவன் காட்டிய சரித்திர ஆவணம் இரு நூற்று இருபது வருடம் முந்தியது. பொடி எழுத்தில், 'இங்கிலாந்து காலனியாதிக் கத்திலிருந்து விடுதலை... விடுதலை...' என்று எழுதி அமெரிக்க முதல் ஜனாதிபதி தாமஸ் ஜெபர்சன் 1776ம் ஆண்டு ஜூன் 11ந்தேதி கையெழுத்துப் போட்டிருக்கிறார்! அருமை யான ஸ்கேன் செய்து போட்டு வைத்த படம்.



நான் 'குழந்தைகளுக்கு வெள்ளமாளிகை' என்ற பகுதிக்குள் புகுந்தேன். 'வாங்க குழந் தைகளே... உங்களுக்கு கொள்ளுத்தாத்தா ஆபிர காம் லிங்கன், தாத்தா கென்னடி பற்றி எல் லாம் சொல்றோம்' என்று போட்டு வைத்து விட்டு கிளிண்டன் மாமா பற்றித்தான் நிறை யச் சொல்கிறார்கள்!

'அமெரிக்கார்ப்ஸ்' என்ற பெயரில் கிளின் டன் ஆரம்பித்திருக்கும் சேவைப் படையில் சேர்ந்து, தெருக்களை சுத்தமாக வைத்திருப்பது, புயல், வெள்ள நிவாரணப் பணிகள் போன்ற சமூகத் தொண்டில் ஈடுபடும் இளைஞர் களுக்குப் படிப்பிலும், தொழிற் கல்வியிலும் சில சலுகைகள் வழங்கப்படுமாம்.

'வெள்ளை மாளிகையில் இது புதுசு' என்ற பகுதி. இரண்டு நாள் முன்னால் கிளிண்டன் செய்த சொற்பொழிவு அது. தியாகிகளுக்கு வீர வணக்கம்... உங்கள் சேவையே என் குறிக் கோள்... சாதனைப் பட்டியல் பாரீர்... பாரீர்... இத்யாதி.

"இந்த விஷயத்திலே அமெரிக்காவும் நம்ம நாடும் ஒண்ணுதான்" என்றேன்.

"அரசியலும் காதலும் எங்கேயும் ஒரே மாதிரித்தான்... அரசியலைப் பாத்தாச்சு... அடுத்தது காதல்..."

விசிலடித்துக் கொண்டே அவன் கொடுத்த இன்டர்நெட் விலாசம் http://www.cs.cmu.edu/afs'. கார்னகி மெல்லன் பல்கலைக் கழகத்தின் தகவல் வீடு அது.

'காதலிப்பது எப்படி' என்று படுசீரியஸாக கிளாஸ் எடுத்திருக் கிறார்கள். காதலியை இம்ப்ரெஸ் செய்ய அவர் கள் கொடுத்திருக்கும் யோசனைகள் எல்லாம் அமெரிக்க சுதந்திரப் பிரகடனத்தை விடப் புராதனமானவை.

உதாரணமாக, "புட் பால், பேஸ்பால் மாதிரி ஏதாவது விளையாட்டு பத்தி விலாவாரியாப் படிச்சு கூடம் அடிச்சுட்டு அதிலே சாம்பியன் போல அப்பப்ப பிலா விடுங்க... நீங்க வெளை யாடறதைப் பார்க்கணு மேன்னு பொண்ணு தொந்தரவு கொடுத்தா, நைசா ஜகா வாங்கிடுங்க..."

"கார்னகி மெல்லன் யூனிவர்சிட்டி புள்ளைங்களுக்கு வெவரம் பத்தாது... இங்கே நம்ம கல்லூரி வாசல்லே ஒரு மாசம் டிரெயினிங் எடுத்தாத் தேறிடுவாங்க... அனுப்பச் சொல்லி கிளிண்டனுக்கு ஈ-மெயில் அனுப்பறேன்..."

அச்வின் ஆரம்பிக்க, தொலைபேசி இணைப்பு போயே போச்சு.

— இரா.முருகன்
இன்டர்நெட் கம்ப்யூட்டர் உதவி
SAP Computers (P) Ltd,
Chennai-17



“எக்ஸ்கியூஸ் மீ, மிஸஸ் சுகன்யா... எனக்கு ஒரு விஷயம் தெரிஞ்சாகணும் இப்ப... நீங்க டாக்டரா? இல்லை நான் டாக்டரா...?”

மனநல மருத்துவர் மகேஷ் கேட்டபோது சுகன்யா சிரித்து விட்டாள். அவள் சிரிப்பில் அவரும் சேர்ந்து கொண்டார்.

“ஸாரி டாக்டர்! நானே ரொம்ப பேசிக்கிட்டிருந்துட்டேன்.”

“இருக்கட்டும்... நீங்க பேசறதோட நிறுத்தலை... பிரச்னைக்கான காரணம் என்னன்னு ஆராய்ஞ்சு டயக்னோஸ் பண்ணி... ட்ரீட்மெண்ட்தான் இன்னும் சொல்லலை...”

“அதை நீங்கதானே டாக்டர் சொல்லணும்...?”

“முதல்ல அந்த தம்பதியைப் பார்க்கணும்மா... அப்புறம் அவங்ககிட்ட பேசணும். உங்கிட்டே பேசினதை வைச்சு நான் எந்த முடிவுக்கும் வர முடியாது.”

“எப்ப அழைச்சுட்டு வரட்டும் டாக்டர்...?”

“அதை நீங்கதான் அவங்க சௌகரியம் கேட்டு முடிவு பண்ணிச் சொல்லணும். சைகியாட்ரிஸ்ட்கிட்டே போகணும்

ளாலே கோபப்படுவாங்க... 'எங்களுக்கென்ன பைத்தியமா?'ன்னுவாங்க. குடும்பத்துல உன்னைத் தவிர வேற யாருக்கும் விஷயம் தெரியாதுன்றே. ரகசியமா அழைச்சிட்டு வரப் போறியா...? எப்படி சமாளிப்பே...?"

கடந்த பதினைந்து நிமிடங்களாகப் பொறிந்து தள்ளியவள் மௌனமானாள்.

"ஸாரி டாக்டர்! உங்க நேரத்தை இனி மேலும் வீணடிக்கலை... அவங்களை முதல்ல இங்க வர்றதுக்குத் தயார்ப் பண்ணிட்டு அப்புறம் அபாயின்ட்மென்ட் கேட்கறேன்."

"உங்களுக்காவது இப்படி வந்து ஆலோசனை கேட்கணும்னு தோணிச்சேம்மா... அதுவே பெரிய விஷயம்தான். ஆல் தி பெஸ்ட்..."

சுகி எழுந்து விடைபெற, டாக்டர் இன்டர்காமில் "யெஸ்" என்றார்.

ரிசப்ஷனைக் கடந்தபோது அங்கு உட்கார்ந்திருந்த நபர்களின் முகங்களைக் கூர்ந்து பார்க்கத் தோன்றியது. தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு வெளியேறினாள். 'சேகரும் வசந்தியும் இங்கு வந்து காத்திருந்தால் இதே கூர்மையுடன் தானே பிறர் அவர்களைப் பார்ப்பார்கள்...!' சேகரின் தயக்கத்துக்கான காரணம், அவன் உணர்வுகளின் வலைப் பின்னல் எல்லாமே அந்த வினாடியில் புலனாகின. மனபாரம் கூடிப்போய் நடை தளர்ந்தது.

ஆட்டோ பிடித்து ஏறிக்கொண்டபோது எங்கே போவதென்று முடிவு செய்திருக்கவில்லை. 'மீண்டும் சசியைப் போய்ப் பார்த்தால் என்ன...?'

"எக்மோர்ல பி.எம்.ஸி. லேடீஸ் ஹாஸ்பிடல் போகணும்..." என்றாள் சுகன்யா.

டாக்டர் மகேஷிடம் வழிகாட்டி, அனுப்பியவள் சசிதான். லேடீஸ் ஹாஸ்டல் நாட்களில் சுகியிடம் நெருங்கி வரத் துணிந்த வெகு சிலரில் ஒருத்தி.

# வைரமுத்து ?

அவளை அணுகி, இந்தச் சின்ன உதவி பெறுவதற்குள் எத்தனை பொய்கள் சொல்ல வேண்டியிருந்தது! ஸ்ரீராம் கிளம்பிய அந்த மாலைப் பொழுதில் ஆரம்பித்தது நாடகம்.

சேகர் வந்து இறங்கியதுமே எதிர்பார்த்தபடி ராமநாதன், "வசந்தி வரலையா மாப்பிள்ளை...?" என்று தான் ஆரம்பித்தார்.

"அவளுக்குத் தலைவலி, ரொம்ப சோர்வா இருக்கா..."

"அப்படியா...?" – ராமநாதனைக் காட்டிலும் அதிகம் பதறினான் ஸ்ரீராம். "கொஞ்சம் முன்னால கிளம்பி அவளைப் பார்த்துட்டு வேணா போலாமா... இஃப் யூ டோன்ட் மைன்ட்...?"

"அடடா! மாப்பிள்ளைதான் ஏர்போர்ட்டுக்கு அழைச்கண்டு போறாரே...' நீயும் போறியாம்மா சுகன்யா...?"

"ஆமாம்பா..."

"அப்ப நானும் வந்துடறேன். ஏனா மூணு பேரா போக வேண்டாம். இருந்திருந்து முதல் முறையா ஸ்ரீராமன் வெளிநாடு போறான். வசந்தியையும் பார்த்தாப்பல இருக்கும்."

"ஓ, தாராளமா வாங்க..." சேகர் ஏமாறு றத்தை மறைத்துச் சொல்கிறானா? இல்லை நிஜமான உற்சாகத்துடன் பேசுகிறானா?

"சுகன்யா, நீங்க ரொம்ப நல்லா ரவை உப்புமா செய்வீங்களாமே? வசந்தி சொல்லியிருக்கா... இப்ப எனக்கு செமை பசி... செஞ்சு கொடுத்தீங்கன்னா மூணு பேருமே சாப்பிடுவோம். அப்புறம் கிளம்பலாம்..." துளிக்கூட நடிப்பின்றி சேகர் தொடர்ந்தபோது நிலைக்கு வந்து இயங்க ஆரம்பித்தாள்,

அவளைப் பின்தொடர்ந்து சமையலறைக்கு வந்த மாமனார், அக்கறையுடன் விசாரித்தார். "ஏன்மா திடுதிப்புன்னு இப்படி உப்புமா கேட்கறாரே வீட்டில ரவை, நெய் எல்லாம் இருக்கா... ஏதாவது போய் வாங்கிண்டு வரவா...?"

"அதையெல்லாம் வீணாக்கக் கூடாதுன்னு ஃப்ரிஜ்ல வைச்சிருந்தேன்பா... பச்சை மிளகாயும் கொத்துமல்லியும் தான் இல்லே..."

தயக்கமாய் அவள் சொன்னபோது, "இதோ வாங்கிட்டு வந்துடறேன்."

ராமநாதன் அகன்றிருந்த அந்த ஐந்து நிமிடங்களில் ரவையைச் சலித்துக் கொண்

டிருந்த சுகன்யாவிடம் வந்தான் சேகர்.

"ரவை உப்புமா செய்ய எத்தனை நேரம் ஆகும்...?"

"பதினைந்து - இருபது நிமிடம்...?"

"இன்னிக்கு நீங்க ஒரு மணி நேரம் ரவை உப்புமா செய்யறீங்க..."

"என்ன...?"

"அப்பத்தானே எங்க வீட்ல போய் வசந்தியைப் பார்க்க நேரமில்லைன்னு சொல்லி, நேர ஏர்போர்ட் போக முடியும்...?"

புரியாமல் பார்த்த ஸ்ரீராமின் தோள் மீது கை போட்டு, "இப்ப நாம அங்கே போனோம்னா வசந்தி திரும்பவும் அப்செட் ஆனாலும் ஆயிடுவா... மத்தியானம் நீங்க கிளம்பின பிறகு ஒரு ஹோம் சிக் ஆகி... தூங்கி எழுந்த பிறகு அவ ஃப்ரெண்ட்ஸ் இரண்டு பேர் வந்தாங்க... கொஞ்சம் சரியாயிருக்கா. இந்த நேரத்தில போய்த் திரும்பவும் எல்லாத்தையும் கிளர்ற மாதிரி ஆயிடாது...? மாமா இருக்கும்போது சொன்னா அவர் மனக கஷ்டப்படுவார்னுதான் சொல்லலை..." - மிகச் சுலபமாக சிக்கல் தீர்த்தான்.

சுகன்யாவுக்குக் கைச் சல்லடையுடன் சேர்ந்து தலையும் சுற்றியது!

ரவா உப்புமாவை மாய்ந்து மாய்ந்து முக்கால் மணி நேரத்துக்கு இழுக்கடித்தாள். ஒரு வழியாக ஸ்ரீராமை பாம்பே ஃபிளைட்டில் ஏற்றிவிட்டு மாமனாரை அவர் வீட்டில் இறக்கி விட்டுக் கிளம்பியபோது,

"முதல்ல அவர் வசந்திக்கு போன் பண்ணி தலைவலி எப்படியிருக்குன்னு கேட்கப் போறார்... என்ன நீ இப்படி அனாயாசமா பொய் உதிர்க்கறே...?"

"வசந்திக்கு நிஜமாவே தலைவலிதான்..."

"ஐயோ! ப்ளீஸ் சேகர்... எது நிஜம், எது பொய்னு எனக்கு முதல்ல சொல்லிடு. இல்லைன்னா தலைமுடியெல்லாம் கொட்டி ஸ்ரீராம் திரும்பி வர்றதுக்குள்ளே அடையாளம் தெரியாம மாறிடுவேன்!"

"ஐ எம் ஸாரி சுகன்யா.... உங்களுக்கு ரொம்ப தொந்தரவுதான்! ஒத்துக்கறேன். ஆனா எனக்கு வேற வழியே தெரியலை. என்னவோ உங்களைப் பார்த்தா எதை வேணா தைரியமா பேசலாம்ங்கற நம்பிக்கை வருது - வேற யார் கிட்டேயும் ஏற்படாத ஒரு நம்பிக்கை. இதை வெறும் புகழ்ச்சிக்காகச் சொல்லலை..."

"தாங்க்யூ சேகர், ஆனா இப்ப நீங்க விஷயத்துக்கு வாங்க ப்ளீஸ்..."

"வசந்திக்குத் தலைவலி, சோர்வுங்கறது உண்மை. அவளுக்கு நான் இங்க வர்றதும் ஸ்ரீராமை ஏர்போர்ட்டுக்கு கூட்டிப் போறதும் தெரியும்ங்கறது உண்மை. உங்ககூட பேசத்தான் வந்திருக்கேன்றது அவளுக்குத் தெரியும்ன்றது உண்மை... ஆனா இந்த உண்மையெல்லாம் அவளுக்கு மட்டும்தான் தெரியும். வீட்ல வேற யாருக்கும் தெரியாது. தெரிஞ்சா நானும் கூட வர்றேன்னு யாராவது காரியத்தைக் கெடுக்க வருவாங்க. 'திடீர்னு தோணிச்சு; ஸ்ரீராமுக்கு சென்ட் ஆஃப் கொடுக்கப் போனேன்னு...' ஏதாவது சொல்லி சமாளிச்சுப்பேன். இப்ப ஸ்ரீராம் கிட்டே பொய் சொல்லி சமாளிச்ச மாதிரி..."

"கம்ப்யூட்டர் வேகத்துல பொய் சொல்றியே! 'ஆட்' ஏஜென்ஸிக்கு ஏற்ற மூளைதான்..."

சுகன்யாவின் கிண்டல் சேகருக்கு ரசிக்கவில்லை.

"என்ன பெரிய மூளை, போங்க! எனக்குன்னு ஒரு பிரச்னை வரும்போது சமாளிக்க முடியாம உங்க உதவியைத்தானே கேட்க வேண்டியிருக்கு?"

ஜவஹர்புரம் வீட்டை அடைந்திருந்தார்கள். "இதோ பார் சேகர்! இந்த மாதிரி குற்ற உணர்வோட பேசறதானா நீ எங்கிட்டே பேசவே வேண்டாம். ஒரு நட்புரிமையோட பேச முடியும்னா இறங்கி உள்ளே வா..."

"ஸாரி... நீங்க போங்க சுகன்யா. நான் காரைப் பூட்டிட்டு உள்ளே வர்றேன்...."

சுமார் ஒரு மணி நேரம் பேசினான்.

"வசந்தி மதியம் கிடைத்த தனிமையில் சற்று இளகியிருந்தாலும் இன்னமும் அவ ளிடம் முழுசாக மனம் திறக்கவில்லை. இதை இப்படியே விட்டு விடுவதற்கில்லை. இரவில் பார்த்த பயந்த பெண்ணை விட பகலில் பார்த்த பாந்தமான மனைவி பயமுறுத்தினாள். இது எப்படி சாத்தியம்? ஒரே பெண் என்று நம்பவே முடியவில்லை. மனநல உதவி வேறு தேவை என்று சொல்லி விட்டீர்கள்... ஸ்ப்ரிட் பெர்ஸனாலிடி என்கிறார்களே, அது மாதிரி ஏதாவது கோளாறா...? அப்பா அம்மாவிடம் சொல்லவா...? சொல்வதால் விஷயம் மேலும்

## தங்க நகை பரிசு!

இந்த இருபத்தாறு வாரத் தொடர், ஒவ்வொரு வாரமும் ஒவ்வொரு கதாசிரியர் பெயரில் வெளியாகி வருகிறது. ஆனால் அவர்களுள் ஒரே ஒரு நபர்தான் இதை எழுதி வருகிறார். தொடரை எழுதியவர் யார் என்பதைக் கண்டுபிடிப்பது உங்கள் சாமர்த்தியம். கடைசி வாரம் வரை காத்திருந்து, அந்த இதழில் வெளியாகும் கூப்பனில் விடை எழுதி அனுப்புங்கள். சரியான விடைக்கு, தங்க நகை பரிசு! பலர் சரியாக எழுதினால் குலுக்கலில் ஒருவரே பரிசு பெறுவார். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

சிடுக்காகிவிடாதா...? சொல்லிவிட்டால்... பிரச்னை மேலும் பெரிதானால்? முன்னமே சொல்லியிருந்தால் முளையிலேயே சரி பண்ணியிருக்கலாமே என்று குற்றம்சாட்டுவார்களோ? எதுவும் சொல்லாமல் யாரிடமும் பேசாமல் சும்மா இருந்து விட்டால் ஆயுள் முழுவதும் இப்படியே ஓட்ட வேண்டுமோ...?'

அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த சுகன்யா சொன்னாள்: "நீ ரொம்ப அரண்டுப்போயிட்டே சேகர்... ஐ திங்க் யூ டு நீட் சைக்கியாட்ரிக் ஹெல்ப்!"

"அதைத்தான் கொஞ்சம் உடனடியாக ஏற்பாடு பண்ணுங்களேன் சுகன்யா. ஆனா வேற யாருக்கும் தெரிய வேண்டாம்..."

"வசந்திக்குத் தெரியாம பண்ண முடியாதே..."

"அவகிட்டே சொல்லிட்டே செய்வோம்... யூ நோ சம்திங்...? தன்னோட பயம் பத்தின குற்ற உணர்வு அவளுக்கு இலேசா இருக்கு. மத்தியானம் தூங்கிட்டிருந்தவளை எழுப்பி டீ கொடுத்தேன்... 'ஸாரி'ன்னா... 'அதனாலென்ன...! நான் உனக்கு டீ கொண்டு வந்து தரக்கூடாதா என்ன...?'ன்னு கேட்டேன். 'அதில்லை... நேத்து ராத்திரிக்கு... ஐ'ம் ஸாரி'ன்னா..."

"மூணு நாள் பொறுத்துப் பாரு சேகர்... அப்புறமா முடிவெடுக்கலாம்..." என்றாள் சுகன்யா.

**நா**ன்காம் நாள் போன் வந்தது சேகரிடமிருந்து. 'எதுவும் மாறவில்லை... எப்போது வசந்தியை சைக்யாட்ரிஸ்டிடம் அழைத்துப் போகப் போகிறீர்கள்?'

"அபாயிண்ட்மெண்ட் ஃபிக்ஸ் பண்ணிட்டுச் சொல்றேன் சேகர்..." போனை வைத்துவிட்டு சரோஜா வீட்டு டெலிபோன் டைரக்டரியின் யெல்லோ பேஜஸைப் புரட்டியபோது... "என்ன பார்க்கறீங்க? யாருக்கு டாக்டர்...?" என்றபடி பக்கத்தில் வந்து உட்கார்ந்தாள் சரோஜா.

"ஒண்ணுமில்லை சரோஜா... நான் அப்புறமா வரேன்..." சமாளித்து கிளம்பி, வீடு திரும்பி யோசித்தபோது சசி நினைவு வந்தது.

சோஷல் சர்வீஸ் லீக் உறுப்பினர் என்கிற முறையில் பல உபயோகமான அறிமுகங்கள் அவளுக்கு உண்டு. நல்ல மருத்துவரை அவள் குறிப்பிடக்கூடும். மணி ஆறாகியிருந்தது. அவள் ஹாஸ்டல் திரும்பும் நேரம்தான்.

நீண்ட நாட்கள் கழித்து ஒரு நல்ல தோழியைப் பார்க்கப் போகும் உற்சாகம் இன்பமாயிருந்தது.

'சைக்யாட்ரிஸ்ட்' என்றதும் சசி முதலில் கேலி செய்தாள். "ஏன் சுகி! ஸ்ரீராம் மேல ரொம்ப பைத்தியமாயிட்டியா...? வேப்பிலை அடிச்சுடலாமா...?" என்று முதலில் கேலி செய்தாள் சசி.

விஷயத்தைச் சொன்னதும் யோசனையானாள். "டாக்டர் மகேஷ்கிட்டே அழைச்சுட்டுப் போ... நிச்சயமா அவரால உதவ முடியும்..." அவள் சொன்னதன் பேரில்தான் டாக்டர் மகேஷைப் பார்த்துவிட்டுத் திரும்பிக் கொண்டிருந்தாள்.

வசந்தியையும் சேகரையும் சேர்த்து அழைத்துப் போக வேண்டும். அது அவசியம் என்பதை அவர்களுக்கு உணர்த்த வேண்டும். எப்படி?.... எப்படி....?

சசியுடன் பேசினால் கொஞ்சம் டானிக் சாப்பிட்ட மாதிரியிருக்கும்....

ஷார்ட்ஸும் டீ ஷர்டும் அணிந்து தலைவிரிகோலமாக வரவேற்றாள் சசி. சுகன்யாவுக்கு அவள் சுதந்தரத்தைக் கண்டு இலேசான பொறாமை வந்தது.

(தொடரும்)



''தனிமலர்' பத்திரிகையிலே நீங்க நடிகர் சாரநாதனைக் காதலிக்கறதா சொல்லியிருக்கீங்க. 'விபூதி' பத்திரிகையிலே நாகவேலனைக் காதலிக்கறதா சொல்லியிருக்கீங்களே?''

''அந்தப் பத்திரிகை முதல் வார வெளியீடு. இந்தப் பத்திரிகை அடுத்த வார வெளியீடு. அதைக் கவனிக்கலையா நீங்க!''



**"ஏன்டா உனக்குக் கல்யாணம் ஆயிடுச்சு. மனைவி இருக்கா. வேறொரு பெண்ணோட பழகி அவ வாழ்க்கையையும் ஏன்டா பாழாக்கறே?"**

**''கவலைப்படாதே. அவளுக்கும் கல்யாணம் ஆயிடுச்சு. கணவன் இருக்கான்!"**

**—வெ.ராஜாராமன்**

# புள்ளிகளாய் ஒரு வானவில்

தமயந்தி

ராஜசேகர் இருட்டினுள் வந்து நின்றான். லேசாகத் தூறல் வேறு போட்டது. நூல் கோத்த ஊசியாய் உள்ளங்கையில் சாரல் இறங்கிற்று. சாப்பிட்ட சாப்பாடு இன்னும் செரிக்கவில்லை. வெறும் பருப்பு தாளிதமும் தேங்காய்த்துவையலும் தான். ஆனாலும் அமிர்தம். ஃபைவ் ஸ்டார் ஹோட்டல்களில் கண்டுபிடிக்க முடியாத நயம். மனசு ஒரு சிகரெட்டுக்காக ஏங்கிற்று.

"இப்படி நீங்க சிகரெட் குடிக்கப்போய்தான் புள்ளயில்லை?" சரஸ்வதி சொல்வாள். அதை நினைத்து சிரிப்பு வரும். அப்படியானால் உலகில் பாதி பேருக்கு குழந்தை இருக்காது.

"என்ன சிரிப்பு?"

"சிகரெட் குடிக்கறது நல்லது இல்லனு சொல்லு. ஒத்துக்கறேன். ஆனா பிள்ளை பிறக்காதுனு சொல்லாத. விட்டுடுனு சொல்லு சரஸ்வதி. விட்டுடறேன்."

சரஸ்வதி உடனே அழுதாள். குழந்தையில்லை என்கிற வடு அவளை அடிக்கடி அரிக்கும். காயப்படுத்தும். நடு இரவில் ராஜசேகருக்கு இப்போதெல்லாம் கனவு வருகிறது. மறுபடி மறுபடி அதே கனவுதான். ஒரு குழந்தையின் முகம். அதற்கப்புறம் இரண்டு குதிரைகள் விரைந்து ஓடும். இடையிலே நதி. சுழற்றி சுழற்றிச் சுழி வீசும். சரஸ்வதி சுழிக்குள் தெரிவாள். ராஜசேகர் குதிரை காலில் கட்டப்பட்டிருப்பான்.

"காப்பாத்துங்க. அடிச்சிட்டுப் போகுது" சரஸ்வதி கதறுவாள். அந்தக் குழந்தை முகம் சிரிக்கும். ராஜசேகரனால் எதுவும் செய்ய இயலாது. மனசுக்குள் கவிதை குதிரையாய் ஓடும். நதியாய் அடிக்கும். குழந்தைச் சிரிப்பாய் சிரிக்கும்.

நதிமூலம் ரிஷிமூலம் எல்லாம்<br>
கண்டும் வெட்டிவிழும் விறகென<br>
கேட்கும் உன் குரல்.<br>
நடு இரவு<br>
முத்தங்களாய்<br>
நினைவாய் சில சேலைகள்<br>
நீ வளர்த்த செடி<br>
வீடெங்கும் உன் நினைவு<br>
விரிந்து கிடக்கும் உலகம்.<br>
அதற்குள் நான்<br>
எனக்குள் நீ.

அந்தக் கவிதை கேட்டு முகம் சுருங்கும்– கண் மறையும். நாசி, பிறகு உதடு. கடைசியாகத் தேடுகையில் குழந்தையே இருக்காது.

அதற்குப் பிறகு முழிப்பு வந்து விடும். வந்து விட்டால் பிறகு உறக்கம் வராது. மறுபடியும் சிகரெட்டுக்காய் ஏங்கும். சரஸ்வதி ஒருக்கனித்துப் படுத்திருப்பாள். கைகள் நெற்றியில்

பரவியிருக்கும். இப்போது சிகரெட் குடித்தாலென்ன? எழும்பவா போகிறான்? பாதகி எழும்பினாலும் எழும்புவாள். அவன் கேசத்தை நீவி விட்டாள்.

அவளுக்கு ஒரு குழந்தை இருந்திருந்தால் நன்றாய் இருந்திருக்கும். அவனே ஒரு குழந்தையாய் மாறியிருக்க வேண்டிய அவசியம் வந்திருக்காது. வீடு நிறைய பொம்மைகளும் விளையாட்டு சாமான்களுமாய் வாங்கிப் போட்டிருந்தாள். ஆனால் ஒரு குழந்தைதானில்லை. அம்மா இவளை விடக் கொஞ்ச வயதில் நாலு குழந்தைகளைப் பெற்றிருந்தாள். இந்தக் கல்யாணமே வயதான பிறகு செய்து கொண்டது தான். அவன் முப்பதின் ஆரம்பத்திலிருந்தாள். இவள் முப்பதுகளின் நடுவில். இரண்டு வருடம் கவலைப்படவில்லை என்பது நிஜம். பிறகு சரஸ்வதியை 'பிறன் மனை'கள் நோக்கின.

"என்ன சரஸ்வதி விசேஷம் ஏதும் உண்டா?"

"என்ன மாப்ளே பயங்கர ப்ளானிங்கா?"

பின் மண்டையில் சுரீரென உறைத்தது. சரஸ்வதி தலைகுனிந்து நின்றாள். வீட்டுக்கு வந்து கண்கலங்கிப் படுத்துக் கொண்டாள். அன்று ஆரம்பித்தது. வாழ்க்கையில் எல்லாம் இருக்கிறது. பணம், வசதி, தேவையான அளவு பக்தி... ஆனால் குழந்தை இல்லை.

"சரஸ்வதி..."

"இன்னிக்கு ஹாஸ்பிட்டல் போணும். பீரியட்ஸ் தள்ளிப் போயிருக்கு." கண் மின்ன சொன்னாள். ராஜசேகருக்குக் கூட சந்தோஷம் அலை அடித்தது. எல்லாம் டாக்டரைப் பார்க்கும் வரைதான்.

"நீ சரஸ்வதி. நிறைய குழப்பிக்கற. அதனாலேயே பீரியட்ஸ் லேட்டாகும். திஸ் இஸ் ஜஸ்ட் லேட் பீரியட்ஸ் மிஸ்டர் ராஜசேகர்."

அங்கேயே சரஸ்வதி விம்மினாள். ராத்திரி திடீரென முழித்துப் பார்க்கும் போது பக்கத்தில் இல்லை. சமையலறை நடுவில் கிடந்தாள். பக்கத்தில் தூக்க மாத்திரை புட்டி.. கடவுளே! அவசரமாய் ஆஸ்பத்திரியில் சேர்த்தான். எனிமா, ட்ரிப், டெட்டால், பினாயில், டெட்ராஸைக்ளின், அமாக்ஸலின்... மீண்டும் சரஸ்வதி.

"இனிமே இந்த மாதிரி பண்ணாத சரஸ்வதி. உனக்கு குழந்தை வேணுமா? வா



தத்தெடுப்போம்."

வெறித்தபடி உட்கார்ந்திருந்தாள். "திருப்பதிக்குப் போய் காணிக்கை போடுங்க. என் வயத்துல உங்க பிள்ளை வேணும்னு வேண்டுங்க..."

"சரஸ்வதி..."

நகையைக் கழற்றி கையில் தந்தாள். "வித்துருங்க. வித்துட்டு அவ்வளோவும் உண்டியல்ல போடுங்க."

"சரஸ்வதி..." அள்ளிக் கோதிக் கொண்டான் ராஜசேகர். மனசுக்குள் ஒரு குரல். எனக்குள் நான். உனக்குள் நீ. நமக்குள் அது.

**தி**ருப்பதியில் இறங்கினதும் வெங்கடேசன் நின்றிருந்தான். ஐந்து வருடங்களுக்கு முன்பு பார்த்தது. மெலிந்திருந்தான். பையை ஸ்நேகமாய் வாங்கிக் கொண்டான். தோளைத் தழுவினபடி அணைத்து ஆட்டோவில் ஏற்றினான். ராஜசேகர் பையில் பணத்தை ஒரு முறை தொட்டுப் பார்த்துக் கொண்டான். வெங்கடேசன் இந்தப் பணத்தின் கதையைக் கேட்டு சிரிக்கக்கூடும். நகையை காணிக்கையாக்கினால் எல்லாம் சரியாகி விடுமா? தெரியவில்லை. தற்கொலை வரை சென்ற சரஸ்வதியின் நம்பிக்கையை ஏமாற்ற முடியவில்லை.

"எத்தனை குழந்தைங்க சேகர்?"

"இல்லை."

எல்லோரும் பார்த்ததுமே கேட்கிற கேள்விதான். ஆனால் பதில் வந்ததும் கவலைப்படுவார்கள். வெங்கடேசன் அவனை ஆதரவாய் பற்றினான்.

"எனக்கு ஒண்ணு. ஆறு மாசமாச்சு."

"லதா எப்படிருக்கா?"

"இருக்கா. அப்பா அம்மா கல்யாணத்துக்கு சம்மதிக்கலை சேகர். லதா வேலைக்குப் போறதையும் நா விரும்பல. சின்ன வீடு. இரண்டு ரூம்தான். ஒரு குழந்தை. சந்தோஷம்தானே?"

ஏனோ சந்தோஷமில்லாமல் அவன் சொன்ன மாதிரி இருந்தது. லதாவைக் கிட்டத்தட்ட ஆறேழு வருடங்களாய் வெங்கடேசன் காதலித்தது தெரியும். வெங்கடேசன் பணத்தில் புரண்டவன். இரண்டு ரூம் அவனை நிச்சயம் கஷ்டப்படுத்தும். அந்த முகச்சுளிப்பு பேச்சில் தெரிந்திருக்கும்.

**வீ**டு என்று கூட அதைச் சொல்ல முடியாதென்பதை அதைப் பார்த்த பிறகுதான் ராஜசேகர் தெரிந்து கொண்டான். தட்டி போட்ட தாழ்வாரம் ஒன்றும் சமையலறை ஒன்றும். லதா முன்னை பார்த்ததற்கு ஏகத்துக் கறுத்திருந்தாள். உள்ளறையிலேயே தொட்டில் ஒன்று இருந்தது. உள்ளே வெங்கடேசன் ஜாடையில் குழந்தை. சரஸ்வதி ஞாபகம் சட்டென வந்தது.

"வாங்க," லதா கை கூப்பினாள்.

"நல்லாயிருக்கீங்களா?"

"ம். முதல்ல குளிக்கறீங்களா? காப்பி தரட்டுமா?"

"தாங்க. மெள்ள குளிக்கேன்."

"காமன் பாத்ரூம்தான். ஒன்பது மணிக்குள்ள குளிச்சிரணும்."

ராஜசேகர் காப்பி குடித்துவிட்டு உடனே குளித்தான். சளபுளவென ஒரு பாத்ரூம். வெங்கடேசனுக்கா இந்த நிலைமை? மனசில் ஏதோ ஒரு முள் உறுத்தியது. ஒருநாள் யமஹா ஒருநாள் சியலோ என்று வந்த வெங்கடேசன் எங்கே? ஒண்டுக்குடித்தன அழுக்கு பாத்ரூமில் குளிக்கும் இவன் எங்கே?

"சுடச்சுட இட்லியும் சட்னியும் செஞ்சிடறேன்."

"எதுக்கு சிரமம்? ஹோட்டல்ல பாத்துப்பேனே."

"சாப்பிடுங்க. நம்ம வீட்ல இருந்துட்டு அதென்ன வெளிய சாப்புடறது."

குழந்தை அழுதது. லதா தூக்கி வந்தாள். "மாமா பாரு" அது இவனைப் பார்த்து கை போட்டது.

"சாப்பிட்டுட்டு வர்றேன். இரு. பேரு என்ன?"

"பிரசவமெல்லாம் இங்கதானா?"

"ம். லதாவுக்கு ஜன்னி வந்து பிழைக்க முடியாம போயிடுவாளோன்னு தோணிச்சு சேகர். கொஞ்சம் கஷ்டப்பட்டுட்டா."

அந்தக் குழந்தை இன்னும் இவனையே பார்த்துக் கொண்டிருந்தது. இதையே தத்தெடுத்துக் கொண்டால் என்ன? மனசில் பொறி தட்டியது. இந்த கஷ்டத்தில் வெங்க

**"என்னது டு-இன்-ஒன் காப்பியா?"**

**"ஆமாம் சார். இந்தக் காப்பியை நீங்க வெந்நீராவும் பயன்படுத்திக்கலாம்!"**

**- பா. ஜெயக்குமார்**



டேசன் சம்மதிக்காமல் இருப்பானா? மனசு கணக்குப் போட ஆரம்பித்தது. ஊருக்குப் போய் சரஸ்வதியையும் கூட்டி வரலாம்.

"கோவிலுக்குப் போறணும்னு லெட்டர்ல எழுதிருந்தியே. நேர்த்தியா?"

"சரஸ்வதிக்கு வேண்டுதல்."

"நல்லாருக்காங்களா?"

"ம். குழந்தை இல்லைன்னு குறை தவிர."

"கூட்டிட்டு வந்திருக்கக் கூடாதா?" லதா கேட்டாள்.

"வரணும். கட்டாயம் வரவேண்டியிருக்கும்னு நினைக்கிறேன்."

ராத்திரி வெங்கடேசனிடம் தனியாய் பேசி விட வேண்டுமென நினைத்துக் கொண்டான்.

**ரா**ஜசேகர் இருட்டினுள் வந்து நின்றான். லேசாகத் தூறல் வேறு போட்டது. நூல் கோத்த ஊசியாய் உள்ளங்கையில் சாரல் இறங்கிற்று. சாப்பிட்ட சாப்பாடு செரிக்க வில்லை. சரஸ்வதி இல்லாத சுதந்தரத்தில் சிகரெட்டைப் பற்றவைத்துக் கொண்டான்.

வெங்கடேசன் நாற்காலி கொணர்ந்து போட்டான். க்றீச் என்று அது மடங்கி உட்கார்ந்தது.

"சேகர்..."

திரும்பினவனை வெங்கடேசன் அழுந்தப் பிடித்துக் கொண்டான்.

"எவ்ளோ நாளாச்சு பேசி."

"குழந்தை தூங்கிருச்சா வெங்கி?"

"ம். அது பிறந்திருக்கவே கூடாதானு இருக்கு சேகர்." அநேகமாக தான் நினைத்ததைத்தான் அவன் சொல்வான் போலும். காரியம் இத்தனை லேசாக முடியுமானால் திருப்தி. ஆண்டவனே, நன்றி.

"என்ன சொல்ற?"

"அதுக்கு ஹார்ட்ல-ஹோல்டா. ரொம்ப நேரம் அழுதுச்சுனா ப்ளூவாயிடும். என்னன்னு செக் பண்ணா டாக்டர் இப்படி சொல்றாங்கடா. ஆபரேஷனுக்கு ஒரு லட்சம் செலவாகும்னு சொல்றாங்க, ப்ரைவட் நர்சிங் ஹோம்ல. கவர்மெண்ட் ஹாஸ்பிட்டல்னாலும் சில ஆயிரம் ஆகும். லதா அது மேல உயிரையே வச்சிருக்கா. வெங்கடேசன் குரல் கம்மிற்று. இது போனா தாங்க மாட்டா சேகர். அன்னன்னைக்கு பாட்ட ஓட்டவே பெரிய கஷ்டமாருக்கு சேகர். இன்னைக்கு நீ வந்தியேன்னுதான் மூணு வேளை டிபனும், சாப்பாடும். மத்தபடி கஞ்சி, கோதுமை, ராகி, அரிசி கஞ்சி... வறுமை கூட பரவால்ல சேகர், குழந்தை..."

"நா ஏதாவது செய்ய முடியுமா வெங்கி?"

"முடியாதுடா. மனசு திறந்து கேட்டுக்க. அது போறும். ஆறுதலாருக்கும். லதா போயிருவானு பிரசவத்தோட சொன்னப்ப கொஞ்சம் பணம் வேற தேவைப்பட்டது. யார்ட்ட கேட்டும் இல்ல சேகர். ஜி.ஹெச்ல கூப்பிட்டாங்க. குடும்பக் கட்டுப்பாடு. ரூவா தந்தாங்க. ஹார்லிக்ஸ் தந்தாங்க. லதாவுக்குத் தெரியாது... தெரியாது..." மொட்டை மாடி சுவரில் மடிந்து உட்கார்ந்து சரிந்தான்.

இவனிடம்.. இவனிடம் போயா குழந்தையைத் தத்தெடுக்கக் கேட்க நினைத்தேன்? மனசு கசிந்தது. ராஜசேகர் கீழிறங்கிப் போய் பணத்தை எடுத்து வந்தான். சுவரோரமாய் மடிந்து கிடந்த வெங்கடேசன் கையில் திணித்தான்.

"வச்சிக்கோடா. குழந்தைக்கு ஆபரேஷன் பண்ணு. ஒன்றரை லட்சம் இருக்கு."

"வேணாம் சேகர். நா பணம் கேக்கல்ல. என் துக்கத்தை..."

"வச்சுக்கோ. வட்டி இல்லை. கடன் இல்லை. நேர்த்தி. உன் குழந்தை நல்லாகணும் வெங்கி. நல்லாயிரும்."

அன்று கனவிலும் குழந்தை வந்தது. குதிரை வந்தது. விரைந்து ஓடிற்று. இடையிலே நதி. சுழற்றி வீசும் சுழி. உள்ளிறங்கும் சரஸ்வதி. குதிரை காலில் கட்டப்பட்ட ராஜசேகர். காப்பாற்றக் கதறும் சரஸ்வதி. மனதில் குதிரையாய் ஓடும் கவிதை. சிரிப்பாய் சிரிக்கும் குழந்தை.

ஆனால் இன்றேனோ குழந்தை மறைய வில்லை. கரையில் முழுசாய் நின்றிருந்தது அதன் கையைப் பிடித்தபடி யாரது?

சரஸ்வதி.

## எறும்பார் கடிக்கிறார்!

"தொடர்ச்சியான அரசியல் பழிவாங்கல் நடவடிக்கைகளால் கருணாநிதியும் ப. சிதம்பரமும் ஒரு தூங்கும் அரக்கனை உசுப்பி விட்டிருக்கிறார்கள்..."

- ஜெயலலிதாவின் செயலர் பாஸ்கரன் விடுத்துள்ள அறிக்கை.



# தேஜோமயன்!

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

பகவானுடைய சுவாஸமாகவும் நிஸ்சுவாஸமாகவும் - அதாவது உள்ளிழுக்கும் படியான காற்றாகவும் வெளியே விடும்படியான காற்றாகவும் விளங்குவது வேதம். பகவானுக்கும் சுவாஸம் உண்டு என்கிறது வேதம் இங்கே... நமது சரீரம் மூச்சுக் காற்றினாலே பெருமை அடைவது போலே பகவானுக்கும் வேதமாகிற மூச்சுக் காற்றினாலே பெருமை உண்டாகிறது. பகவானுக்கே பெருமை உண்டாக்குகிறது என்றால் அந்த வேதம் எப்பேர்ப்பட்டதாக இருக்க வேண்டும்! அதில் சொல்லப்பட்ட விஷயத்தை எல்லாரும் சுலபமாகத் தெரிந்து கொள்வதற்காகவும் புரிந்து கொள்வதற்காகவும் புராண இதிகாசமாக மாற்றிக் கொடுத்தார்கள்.

இப்படிச் சொன்னால், வேதத்தில் சொன்ன விஷயங்கள் முன்பாக நிகழ்ந்தனவா? புராண இதிஹாஸங்கள் முன்பாக நடந்தனவா என்று கேள்வி வரும்.

புராண இதிஹாஸங்களில் சொல்லப்பட்டிருக்கும் ஒவ்வொரு அவதாரத்தையும் வேதம் சொல்கிறது. அப்படியென்றால் அவதாரங்களுக்குப் பின்பாகத்தான் வேதம் உண்டானதா...?

நன்கு கவனிக்க வேண்டும். வேதத்தில் என்ன சொல்லப்பட்டிருக்கிறதோ அதைத்தான் பகவான் நடத்திக் காட்டினான். 'பகவான் வராஹ அவதாரம் பண்ணி பூமியை உய்வித்தான்' என்று வேதத்தில் வருகிறது. அதையே பகவான் நடத்திக் காட்டினான். வேதத்தைப் பூரணமாய் அனுஷ்டித்தான் பரமாத்மா. அதை அனுஷ்டானம் பண்ணுவதற்கென்றே இந்த லீலா விபூதிகள்!

வேதம் சொல்படி நடந்தான் பரமாத்மா என்பதை நாம் ஸ்பஷ்டமாக உணர வேண்டும். வேதத்தில் வரும் ஒரு வாக்கியம் - தேவதைகளெல்லாம் யக்ஞம் பண்ணினார்கள் என்கிறது.

நாம் யக்ஞம் பண்ணினால் இந்திராதி தேவர்களைப் பார்த்துப் பண்ணுகிறோம். பகவான் அவர்கள் ரூபத்தில் இருந்து நமக்கு அனுக்கிரகம் பண்ணுகிறான்.

ஆனால் தேவதைகள் யக்ஞம் பண்ணினால்...?

தேவதைகள் யக்ஞம் செய்தால் தேவலோகத்தில் பண்ண முடியாது. பூலோகத்துக்கு வந்துதான் பண்ண வேண்டும்!

'வையத்து வாழ்வீர்காள்...' என்று ஆண்டாள் அழைப்பதைப் பார்க்கிறோம். வையத்தில் வாழ்வதற்குக் கொடுத்து வைத்திருக்க வேண்டும் என்று பொருள்.

எல்லா கர்மாவும் விலகும்படியான, உயர் பலனைக் கொடுக்கும்படியான, சாஸ்திரங்களை அனுஷ்டிக்கும் உத்தமமான பூமி இது. அதிலும் பாரத தேசம் ரொம்ப விசேஷம் என்று சாஸ்திரமே கொண்டாடுகிறது.

இப்படிப்பட்ட பூமிக்கு வந்துதான் தேவர்கள் யக்ஞம் பண்ண வேண்டும். அவர்களும் வந்து நாராயணனைக் குறித்து யக்ஞம் பண்ணினார்கள்.

அந்த தேவர்களுக்குள்ளே துவஷ்டா என்கிற ஒருவன். அவனுக்குப் புரோடாசத்தின் பேரிலே ரொம்பவும் ஆசை.

புரோடாசம்...? அப்படியென்றால்...?

அப்படியென்றால் என்னவென்று வேதமே சொல்கிறது. அதைத் தயாரிக்கும் முறையை விளக்குகிறது.

யக்ஞம் பண்ணக்கூடியவருடைய தர்ம பத்தினி, ரொம்ப சுத்தமாக, மடியாக இருந்து, உலக்கையைக் கையில் எடுத்து, உரலுக்கும் உலக்கைக்கும் பூஜை பண்ணி விட்டு, மந்திரம் சொல்லிக் கொண்டே நெல்லைக் குத்த வேண்டும். அதிலே கிடைக்கிற அரிசியை மாவாக அரைத்து, அதை அடையாகத் தட்ட வேண்டும். அதற்குப் பெயர்தான் புரோடாசம். அப்படித் தட்டி அதன் மேலே நெய்யைத் தடவி வைத்தார்களானால் ரொம்ப வாசனையாக இருக்கும். அதிலே 'நமக்கொண்ணு கொடுத்தால் நன்றாயிருக்குமே' என்று எல்லாருக்குமே தோன்றும்!

ரொம்ப பக்குவமாக அதைத் தயார் பண்ணி ஹோம சமயத்திலே கொண்டு வர வேண்டும். கோவில்களில் கூட நாம் பார்க்கிறோம். பகவானுக்கு அமுது செய்விக்கிறவர் அதை நன்றாக மூடி யார் கண்ணிலும் படாமல் எடுத்து வந்து செய்விப்பார். அவரே கூட அதைப் பார்த்து, 'இவ்வளவு முந்திரிப் பருப்பா? இத்தனை நெய்யா...?' என்றெல்லாம்

# அருள்வாக்கு

வேதத்தைப் பொறுத்தமட்டில் அதை எங்கேயும் கல்வெட்டில் எழுதி வைத்திருக்க வில்லை. ஆனபடியால் லிபியைப் பார்த்துக் கால நிர்ணயம் பண்ண வேண்டிய பிரச்னை இல்லை.

பாஷை ரீதியில் உள்ள இன்னொரு வித மான அடிப்படையில்தான், வேத காலத்தை ஆராய்கிறார்கள். அது என்னவென்றால், வார்த்தைகளின் ரூபம், ஒலிகளின் வடிவம் மாறிக் கொண்டே வந்திருக்கிறது. சங்க காலத்தில் இருந்த அநேக தமிழ் வார்த் தைகள் இப்போது ரொம்பவும் உருமாறி யிருக்கின்றன. ஒவ்வொரு பாஷையிலும் இப்படியேதான். சில சப்தங்கள் தேய்ந்து போகின்றன. சப்தம் மட்டுமின்றி அர்த் தமும் மாறுகிறது. இப்போது 'வெகுளி' என்றால் 'அப்பாவி' என்று அர்த்தம் பண்ணிக் கொள்கிறோம். ஆனால் ஆதியில் 'வெகுளி' என் றால் கோபம், கோபிஷ்டன் என்று அர்த்தம் இருந் தது. இப்போதும்கூட 'வெகுண்டு எழுந்தான்' என்கிறபோது பழைய அர்த்தத்தில்தான் சொல் கிறோம். பழைய காலத்தில் 'மாண்ட' என்றால் 'செத்துப் போன' என்ற அர்த்தம் கிடையாது; 'புகழுடைய' என்பதே அதன் அர்த்தம் என்று ஒரு தமிழ்ப் புலவர் சொன்னார். இதே மாதிரி ஸம்ஸ்கிருதத்தில் உண்டு. பிற்காலக் காவியங்களைப் புரிந்து கொள்கிற மாதிரி வேதங்களைப் புரிந்து கொள்ள முடியவில்லை. எல்லா பாஷையிலுமே இப்படி உண்டு. இதில் நம் தேச பாஷைகள் ஒரு ஆயிர வருஷத்துக்கே உட்பட்ட Anglo Saxon என்கிற ஒல்ட் இங்கிலீஷில் ஒரு வரிகூட இன்றைய வெள்ளைக்காரர்களுக்குப் புரியாது. ஒரு முந்நூற்று சொச்சம் வருஷத்திலேயே அமெரிக்காவில், இங்கிலீஷ் ரொம்பவும் மாறி, 'அமெரிக்கன் இங்கிலீஷ்' என்று தனியாகப் பெயர் வைக்கிற அளவுக்கு ரூபபேதம் அடைந்திருக்கிறது.

***— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.***

நினைத்து விடக் கூடாது என்கிற முன் ஜாக்கிரதை... 'நன்றாக இருக்கும் போலிருக்கே' என்று நாம் மனசில் கூட நினைத்து விடக் கூடாது - அப்படி நினைத்தால் அபசாரமாகி விடும்.

அந்த மாதிரிதான் யக்ஞத்திலும் புரோ டாசத்தை கவனமாக எச்சரிக்கையாகத் தயாரித்துக் கொண்டு வருவார்கள்.

தேவர்கள் நடத்தும் யக்ஞத்திலே புரோடாசத்துக்குப் பங்கம் வந்தது! ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு ரூபத்திலே வந்து, துவஷ் டாவே புரோடாசத்தைக் கொண்டு போய் விட் டான்! யக்ஞமே நஷ்டமாகி விட்டது இத னாலே. முப்பத்து முக்கோடி தேவர்களும் துவஷ்டாவை அடிக்கக் கையை ஓங்கிக் கொண்டு வந்தார்கள்.

அப்போது அவன் என்ன பண்ணினான்...? அஸ்வினி தேவதைகளிடம் போய்ச் சரண டைந்தான். இந்த அஸ்வினி தேவதைகள் மற்ற தேவதைகளுக்கு வைத்தியர்கள். எப்போதும் இரு அஸ்வினி தேவதைகளும் ஒன்றாகவே இருப்பார்கள். வால்மீகி கூட ராமாயணத்திலே ராம - லக்ஷ்மணர்களைப் பற்றிச் சொல்லும் போது, "அஸ்வினி தேவதைகளைப் போல் காட்சி அளிக்கிறார்கள்" என்கிறார்.

இப்படிப்பட்ட அஸ்வினி தேவதைகளைப் போய்ச் சரணடைந்தான் துவஷ்டா. அவர்கள் பார்த்தார்கள். இவன் தப்பான காரியத்தை பண்ணியிருக்கிறான். கொல்லத் தகுந்த குற்றம். இருந்தாலும் 'சரணாகதி' என்று நம்மை வந்தடைந்துள்ளானே... அதனால் அவனைக் காப்பாற்றியே ஆக வேண்டும் என்று அத்தனை தேவதா நிக்ரஹத்துக்கும் அவனை ஆளாக் காமல் அஸ்வினி தேவதைகள் காப்பாற்றி விட் டார்கள்.

அதனால்தான், கொல்லத் தகுந்த குற்றம் பண்ணினாலும் சரணாகதி பண்ணியவர் களைக் காட்டிக் கொடுப்பதில்லை என்று சாஸ்திரம் உண்டாகியிருக்கிறது. சரணாகதி பண்ணுகிறவன் எப்பேர்ப்பட்ட குற்றங்கள் பண்ணியிருக்கட்டுமே... அவனை ரக்ஷித்தே தீர வேண்டும் என்று வேதம் வலியுறுத்துகிறது. இதை மெய்ப்பிக்கவே பகவான் ராமாவதாரம் பண்ணினான் என்று சொன்னால் அது மிகையாகுமோ...?

இப்படி வேத தர்மத்தை அனுஷ்டிக்கிற அவதாரமாக ராமாவதாரம் இருக்கிறது. துஷ் டப் என்கிற திருநாமம் பரமாத்மாவுக்கு உண்டு. பரிபூரண துஷ்டி (மனநிறைவு) அனுபவிக் கிறவன் அவன். அந்த வேத தர்மத்தை அவன் அனுஷ்டிப்பதனாலே கிடைக்கிறது பரிபூரண திருப்தி.

‘அபயப்ரதான ஸாரம்’ என்பதாக ஒன்றை சுவாமி தேசிகன் எழுதியிருக்கிறார். அதிலே சரணாகதி என்றால் என்ன என்று பூரணமாய் நாம் தெரிந்து கொள்ளலாம். அதிலே அவர் எழுதுகிறார் :

‘ராமாயணத்திலே சரணாகதி என்பது அச்சுறு ஆணியாகக் கோக்கப் பெற்றது.’

ராமாயணம் என்பது பெரிய ரதம். ரதம் நிற்க வேணுமானால் சக்கரம் அவசியம்; சக்கரத்தில் கடையாணி ரொம்பவும் முக்கியம். தவிர, ரதத்தில் பல மரச் சட்டங்கள் ஒன்றோடொன்று கோக்கப்பட்டிருக்கும். கடை ஆணியைக் கொண்டு அவை கோத்து பொருத்தப்பட்டிருக்கும். ஆணியை எடுத்து விட்டால் ரதம் கீழே விழுந்து விடும். அதைப் போல ராமாயணத்திற்குக் கடையாணியாக அதைக் கோத்து நிறுத்துவது சரணாகதி!

பூர்வகாலத்தில், ஒரு சபையிலே பல வித்வான்கள் கூடியிருந்தனர். தர்க்க வித்வான், வியாகரண வித்வான், மீமாம்ஸ சாஸ்திர வித்வான்கள் என்று இப்படிப் பல வகையினர். அவர்களிடையே புதுசாக ஒருத்தர் வந்து உட்கார்ந்தார். மற்றவர்களுக்கு அவரைத் தெரியவில்லை.

"எந்த சாஸ்திர நிபுணர் நீங்கள்...?" என்று மெள்ளக் கேட்டார்கள்.

"சரணாகதி சாஸ்திரம்தான்" என்றார் அவர்.

தர்க்க, வியாகரணம் படித்தவர்களெல்லாம் வியப்போடு பார்த்தார்கள்.... ‘இதுவரைக்கும் கேட்டதில்லையே... அது என்ன சாஸ்திரம்...? கேள்விப்பட்டதில்லையே...?’ என்றார்கள்.

"அந்த சரணாகதி சாஸ்திரம் ராமாயணத்திலே சொல்லப்பட்டிருக்கிறது" என்றார் அவர்.

இப்படிப்பட்ட ராமாயணமும் மகாபாரதமும் தெரியாத புராண ஞானம் இல்லாத ஒருத்தருக்கு மற்ற சாஸ்திரங்கள் தெரிந்திருப்பதெல்லாம் வீண்தான்! சரணாகதி சாஸ்திரத்தை உணர்த்தும் ராமாயணம்தான் முதலில் தெரிந்திருக்க வேண்டும்.

ராமாயணத்தின் பால காண்டத்தில் பார்த்தால் பகவானிடத்தில் தேவதைகள் பண்ணின சரணாகதி. அதே பால காண்டத்திலே தசரதர் பரசுராமரிடத்திலே பண்ணிய சரணாகதி. அயோத்யா காண்டத்திலோ ராமரிடத்தில் லக்ஷ்மணர் பண்ணிய சரணாகதி. பரதன் சக்ரவர்த்தித் திருமகனிடம் பண்ணிய சரணாகதி. ஆரண்ய காண்டத்தில் மகரிஷிகளெல்லாம் பகவானிடத்தில் பண்ணிய சரணாகதி. உயர்ந்த கிஷ்கிந்தா காண்டத்தில் சுக்ரீவன் பகவானிடத்திலே பண்ணின சரணாகதி. சுந்தர காண்டத்தில் திரிஜடையானவள் சீதா பிராட்டியிடம் பண்ணிய சரணாகதி. யுத்த காண்டத்திலே விபீஷணன் பகவானிடத்தில்



*"கடிதத்தை மிகவும் நீட்டி விட்டேன். காரணம் இதைவிடச் சுருக்கமாக எழுதுவதற்கு எனக்கு போதிய நேரம் இல்லாததுதான்."*

*— பிளேய்ஸி பாஸ்கல்*

*"மேதைகள் தமாஷ்" என்ற நூலிலிருந்து: சுகந்தி ராஜ்*

---

பண்ணிய சரணாகதி; பகவான் சமுத்திர ராஜனிடம் பண்ணிய சரணாகதி. உத்தர ராமாயணத்தில் எல்லா தேவதைகளும் பகவானிடத்திலே பண்ணிய சரணாகதி... இப்படி, சரணாகதியானது அச்சுறு ஆணியாக ராமாயணத்தில் கோக்கப்பட்டுள்ளது. இத்தனைக்கும் பலனிருந்தது. பகவான் பூலோகத்தில் வந்து அவதாரம் பண்ணினதாலே பலன் இருந்தது.

ஆனால், அதே சரணாகதியை தசரதன் பரசுராமனிடத்திலே பண்ணியபோது பலனிருக்கவில்லை.

இந்த பரசுராமர் இருக்கிறாரே... ஏறிட்டுப் பார்க்க முடியாத வீரியம் அவருக்கு. கோபத்துடன் இருக்கிறார். சுவாமி தேசிகன் தமது தசாவதார ஸ்தோத்திரத்திலே, எல்லா அவதாரங்களுக்கும் ஒரு விசேஷமான அடைமொழி கொடுக்கிறார் : ரோச ராம : என்கிறார் பரசுராமரை! அத்தனை ரோசம் – கோபம் உடையவர் அவர்!

பரசுராமன் வந்தவுடனேயே, ‘என் குழந்தைகள் சின்னவர்கள். இப்போதுதான் கல்யாணம் பண்ணி அழைத்துக் கொண்டு போகிறேன்... அவர்களை விட்டு விடுங்கள். என்னை எது வேண்டுமானாலும் செய்யுங்கள்...’ என்று கெஞ்சுகிறான் தசரதன். ஆனால் பரசுராமர் கோபத்துடன்தான் நிற்கிறார். இந்த சரணாகதி பலிக்கவில்லையே... ஏன் பலிக்கவில்லை? முறை தவறி பிரார்த்தித்தோமானால் பலிக்காது!

யாரிடத்திலே சரணாகதி பண்ணுகிறோமோ அவரிடத்திலே இரண்டு விஷயங்கள் இருக்க வேண்டும். ஒன்று சக்தி, இன்னொன்று காருண்யம். இவை இரண்டும் இல்லாவிட்டால் சரணாகதி பலிக்காது. சக்தி இருந்து காருண்யம் இல்லாவிட்டாலும் பயனில்லை. காருண்யம் இருந்து சக்தியில்லாவிட்டாலும் பலனில்லை.

முதலாவதுக்கான உதாரணமாக பரசுராமரைச் சொன்னேன். கருணை இருந்தும் சக்தி இல்லாததால் சரணாகதி தோற்ற கதையை அடுத்த வாரம் சொல்கிறேன்.

(தொடரும்)

"புவனாவுடன் சண்டை போட்டியா?" என்றான் மணிவண்ணன்.

"ஆமாம்."

"அதான். காலையிலிருந்து தலைகீழாகக் காரியங்கள் பண்ணிக் கொண்டிருக்கிறாய். மானேஜர் இரண்டு முறை கூப்பிட்டு அனுப்பினார் போலிருக்கிறது?"

"ம். கூட்டல் குளறுபடி."

"ஒரு டிபிகல் மிடில்கிளாஸ் ஆபீஸ் கோயரின் சாதாரண பிரச்னைகள்தான் உனக்கும் இருக்கிறது. உன் எதிர்பார்ப்புகளின் எல்லைகள் தான் உன் சந்தோஷத்தை நிர்ணயிக்கிற விஷயங்கள். இதை முதலில் புரிந்து கொள்!" என்றான் மணிவண்ணன். அலுவலகத்தில் அவன் ஒருத்தனிடம் மட்டும்தான் மனசு விட்டுப் பேச முடிகிறது.

"கவனி. வாழ்க்கையை நின்று, உற்றுப் பார்க்காதே. அது ஒரு பூதம். பல்லைக்காட்டி பயமுறுத்தும். கடந்து போய்க் கொண்டே இரு. பிரச்னை வராது."

அது தன்னால் முடியாது என்று அவனுக்குத் தோன்றியது. கொஞ்சம் மென்மை. கொஞ்சம் வருடல். இங்கே சீண்டல். அங்கே சிணுங்கல். கொஞ்சம் தென்



# ஒன் டே மேட்ச்

பா.ராகவன்

நல். கொஞ்சம் தெய்வீகம். துளி பனிப் புன்னகை. தூரத்தில் வயலின் கேட்டுக் கொண்டிருக்க வேண்டும். பிருந்தாவன ஸாரங்கா. அதில் நிஷாதத்தை அழுத்தக் கூடாது. ஒற்றி எடுக்க வேண்டும். கடற்கரை மணலில் கால் புதைப்பது போல ஒரு சுகம் இருந்து கொண்டே இருக்க வேண்டும்.

"நீ சினிமா பார்த்துக் கெட்டு விட்டாய்'' என்றான் மணிவண்ணன்.

"இருக்கலாம். ஆனால் அது தப்பில்லையே? வாழ்க்கைக்கும் சினிமாவுக்கும் மயிரிழை வித்தியாசம்தான். அந்த மயிரிழையை பூதக் கண்ணாடி வைத்துப் பார்க்கிறபோது கிடைக்கிற சுகம் இந்தக் கூட்டல், கழித்தல் வாழ்க்கையில் கிடைப்பதில்லையே?"

"பார்! உனக்கு என்ன வேண்டும் என்பதில் தெளிவாக இரு, முதலில். கனவுகளுக்கு எல்லை இல்லை. ஆனால் யதார்த்தத்துக்கு வரம்பு உண்டு. உன் பிரச்னைதான் என்ன?" என்று மணிவண்ணன் கேட்டான்.

என்ன என்று சொல்வது? காலையில் பரபரப்பாக அலுவலகம் கிளம்பும்போதே சண்டை வந்து விட்டது. இஸ்திரி போடக் கொடுத்திருந்த சட்டை இன்னும் வந்திருக்கவில்லை. குக்கரில் கூடுதல் தண்ணீர் காரணமாக, சாதம் குழைந்து விட்டது. எட்டு மணி ஆகியும் பால் வரவில்லை. வயிற்றுக்குக் காப்பி ஊற்றாததன் எதிரொலி தலையில் கேட்டது. கூடுதலாக ஊரிலிருந்து அம்மா கடிதம் எழுதியிருந்தாள். இரண்டு வரியில் நலம் விசாரித்து விட்டு, கார்டு முழுக்கக் காசு கேட்டு. அப்பாவுக்கு உடம்பு சரியில்லை. வீட்டுக்கு வெள்ளையடிக்க வேண்டும். தங்கைக்கு இந்த வரன் அமைந்து விடும்போல் இருக்கிறது.

எல்லாமே எதிர்கொள்ளக்கூடிய சின்னச் சின்ன விஷயங்கள்தாம். அத்தனையும் ஒரு சேரத் தாக்கும்போது தான் தோல்வி பயம் வந்து விடுகிறது. விளைவாக குக்கர் சாதம் குழைந்ததற்காக புவனா மீது பாய வேண்டியதாகி விட்டது. அவளும் வேலைக்குப் போகிறவள். அசடுவழிகிற மேலதிகாரியை வைத்துக் கொண்டு அல்லல்படுகிறவள். தெரியாததில்லை. ஆனாலும் எதிர்ப்பையோ, இயலாமையையோ, கோபத்தையோ, சந்தோஷத்தையோ வெளிக்காட்டிவிட அவர்கள் இருவருக்கும் வேறு வழி இல்லை. ஒருத்தருக்கு ஒருத்தர். நேருக்கு நேர். சொற்களின் துல்லியமான மோதல். உரசலில் தெறிக்கிற தீப்பொறி. அதன் தகிப்பில் குளிர்காய்கிற மனத்தின் குதூகலம். குத்திக் கிளறிப் பார்த்து சந்தோஷப்படுகிற குரூரம்.

புவனாவும் சளைக்கவில்லை. வார்த்தைக்கு, வார்த்தை. வசைக்கு வசை. ஆணாதிக்க உலகின் பிரத்யட்சப் பிரதிநிதியாக அவனை நிற்க வைத்து சொற்களால் சுட்டுத் தீர்த்து விட்டாள். எல்லாமே தவிர்த்திருக்கக் கூடியவைதான், ஆனால் தருணங்கள், உணர்வை உரசிப் பார்க்கிறபோது கனன்று எழும் தீயை அணைக்க முடிகிறதில்லை.

"அவன் வீட்டுக்குப் போய் உட்கார்ந்ததும், ஹலோ, யூ லுக் ஸோ ஸ்மார்ட் டுடே!" என்றாள் அனுபமா.

ஏதாவது பேச வேண்டும். கசங்கிய சட்டையும் ஷேவ் கூடப் பண்ணாத இன்றைய முகத்தையும் பார்த்து ஸ்மார்ட் என்று கூசாமல் சொல்வதற்கு எத்தனை பொய் பழகியிருக்க வேண்டும்?

உலகில் பிரச்னைகளே இல்லாதவர்கள் டைப்பிஸ்ட் ஜாதிக்காரர்கள்தான் என்று அவனுக்குத் தோன்றியது. வாரப் பத்திரிகைத் தொடர்களுக்கு நடுவே அவ்வப்போது வேலை பார்த்துக் கொண்டு, கனமான மேக்-அப் புடன் ஆண்களை வசிகரித்துக் கொண்டு, வாங்குகிற சம்பளத்தைப் புடைவைகளில் பாவு நூலாக்கி, நுனி நாக்கு ஒட்டை இங்கிலீஷில் உலகைப் புரட்டிப் போடுகிறவர்கள்.

"ரொம்ப நாளாகக் கேட்டுக் கொண்டிருக்கிறேன். என்னை உங்கள் வீட்டுக்குக் கூப்பிட மாட்டீர்களா? உங்கள் மனைவி உங்களைப் போலவே வெகு அழகா? அல்லது-"

இவள் எப்படி இப்படியெல்லாம் பேசுகிறாள் என்று அவனுக்கு ஆச்சர்யமாக இருந்தது. அனுபமாவுக்குத் திருமணம் ஆகிவிட்டது. புருஷன்

ஏதோ எக்ஸ்போர்ட் பிஸினஸ் செய்து கொண் டிருப்பதாகச் சொல்லியிருக்கிறாள். வீட்டில் போரடிக்கிறது என்பதற்காக வேலைக்கு வரு கிறாள்.

"தெரியுமா? இந்தச் சம்பளம் என் ஒப்பனை திரவியங்களுக்குக் கூடக் காணுவதில்லை. என்ன செய்வது? வேலையை விட்டு விட்டால் உங்களையெல்லாம் எப்படிப் பார்த்துக் கொண்டிருப்பது?"

"எதற்கு எங்களைப் பார்க்க வேண்டும்?"

"ஜஸ்ட், ஒரு ப்ளெஷருக்காக. அனுமதி யுடன் ஸைட் அடிக்கிற சௌகர்யத்துக்காக."

அவனுக்கு முகத்தில் அறைந்தாற்போல இருந்தது. இப்படி ஒரு பெண் - அதுவும் திரு மணமானவள் - என்னுடன் பணிபுரிகிறாள் என்று புவனாவிடம் சொன்னால் அவள் என்ன சொல்லுவாள்? கொழுப்பெடுத்தவள் என்று தொடங்கி நீளமாக ஒரு பிரசங்கம் நடத்துவாள்.

'உன் ஆபீஸில் ஒரு மானேஜர். என் ஆபீ ஸில் ஒரு டைப்பிஸ்ட்' என்று சீண்டலாம். மேற்கொண்டு உரையாடல் திசைமாறி, அபாயகரமான எல்லைகளுக்குப் போய்விட வாய்ப்பு இருக்கிறது. ஆண்களின் மனக் கட்டுப்பாடு பற்றி புவனா வைத்திருக்கிற மதிப் பீடு மிக மோசமானது. அவள் பார்வையில் புருஷனும் கோடானுகோடி ஸோ கால்ட் ஆண் வர்க்கத்தில் ஒரு புள்ளிதான்.

அவனுக்கு எரிச்சலாக இருந்தது. இந்த புவனா, அனுபமா எல்லாருமே ஒரே கனியின் விதைகள்தான் என்று தோன்றியது. விளைச்சல் வேறுவேறாயினும் விரும்பத்தகாத சுவை தரு வதில் ஒரே ரகம்.

"ஹலோ, இன்று ரிலீஸாகி இருக்கும் படத் துக்கு ஈவினிங் ஷோவுக்கு இரண்டு டிக் கெட்டுகள் இருக்கின்றன. வருகிறீர்களா?"

அனுபமாதான் கேட்டாள். உள்ளர்த்தம் ஏதுமில்லையாம். நட்பு ரீதியில்தான் அழைக் கிறாளாம். ஒரு ஆணும் பெண்ணும் சினிமா போவதில் என்ன தவறு?

"ஏன், உங்கள் ஹஸ்பெண்ட் இருக்கிறார், இல்லையா?"

"அவர் இருக்கிறார். நான் உங்களைத்தான் கூப்பிட்டேன்."

"ஸாரி. வருவதற்கில்லை."

"ஏன், உங்கள் மனைவி கோபித்துக் கொள்வாளோ?"

அவன் அதற்கு மேல் பேச்சை வளர்க்க விரும்பவில்லை. பிறகு ஒழுக்க விதிகள் பற்றி அவள் லெக்சர் அடிக்கத் தொடங்கி விட்டால் சகிக்காது. மனிதர்களால் ஆன உலகில் மனிதர்களால்தான் சிக்கலும் உண்டாகிறது. சிக்கலால் சினம். சினத்தால் புத்தி நாசம். ஹே, அர்ஜுனா என்று கூப்பிட்டு, எந்தப் பரமாத் மாவும் இப்போது நல்லுபதேசத்துக்கு வரப் போவதில்லை.

அவனுக்குத் தலை பிளந்து விடும்போல வலித்தது. வீட்டிலும் வெளியிலும் மனத்திலும் சொல்லிலும் செயலிலும் அமைதியற்று உலவு கிற நிலையின் அழுத்தம் தன்னை மிக அதிக மாகவே தாக்குவது போல உணர்ந்தான்.

**மா**லை வீடு திரும்பும் போது, வழியில் ஒரு விபத்தைப் பார்த்தான். லாரியில் அடி பட்ட ஸ்கூட்டர். தார்ச்சாலையில் சிதறிய கண் ணாடி மொட்டுக்கள். சாலையோரத்தில் மொத்தமாக ஒரு பொருளை வெள்ளைத் துணி போர்த்தி வைத்திருந்தார்கள். ஒரு போலீஸ் காரரும் நாலைந்து பார்வையாளர்களும் அருகே நின்று கொண்டிருக்க, அவனுக்கு இறந்தவனைப் பற்றிக் கொஞ்சம் நினைக்கத் தோன்றியது. எத்தனை பிரச்னைகள் இருந் தனவோ? கடன் இருக்கலாம். வேலை இல் லாதவனாக இருக்கலாம். தன்னைப் போல் எல் லாம் சரியாக இருந்தும் எதையோ இழந்தது போலப் பரிதவிப்பவனாக இருக்கலாம். எது வானால் என்ன? இனி அவனுக்குக் கவலை இல்லை.

- இப்படி நினைத்ததுமே அவனுக்கு இறந் தவன் மேல் கொஞ்சம் பொறாமை

உண்டானது.

**வீ**ட்டுக்குப் போனபோது இருட்டி விட்டது. தெரு முழுக்க மௌனத்தில் ஆழ்ந்திருக்க, புவனா மட்டும் தனியாக வாசலில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தான். 'இன்று வழக்கத்தை விடக் கொஞ்சம் லேட்' என்று நினைத்துக் கொண்டான்.

அதையே அவளும் கேள்வியாகக் கேட்டபோது வேலை அதிகம் என்று பதில் சொன்னான். முகம் கழுவி சாப்பிட உட்கார்ந்து, சாப்பிட்டு, எழுந்து போய் படுக்கையில் விழும் வரை அவளுடன் ஏதும் பேசவில்லை. காலை கோபத்தை வலுக்கட்டாயமாக மீண்டும் வரவழைத்துக் கொள்ள வேண்டுமா என்று நினைத்தான். அலுப்பாக இருந்தது. கோபப்படவோ, குறைந்தபட்சம் முகத்தைத் தூக்கி வைத்துக் கொள்ளவோ கூடத் தெம்பில்லாதது போல உணர்ந்தான்.

ஆனால் அவள் என்னமாதிரியான மனநிலையில் இருக்கிறாள்? வழக்கமாக இதுமாதிரி ஊடல்கள் இரண்டு நாட்களுக்கு நீடிக்கும். சகிக்க முடியாத மௌனத்தில் வீடே இருண்டு கிடக்கும். அப்புறம் கொஞ்சம் கொஞ்சமாக சரியாகிவிடும்.

அவன் படுத்தவாக்கிலேயே திரும்பிப் பார்த்தான். ஹாலில் புவனா உட்கார்ந்து ஏதோ ஃபைல் பார்த்துக் கொண்டு இருந்தாள். அவனுக்கு எழுந்து போய் ஓங்கி அறைந்து விட்டு உட்கார்ந்து ஓவென்று அழவேண்டும் போலிருந்தது. அடக்கிக் கொண்டு, திரும்பிப் படுத்தான்.

பதினொரு மணிக்கு புவனா விளக்கணைத்து விட்டு எழுந்து வந்தாள். அவன் தூங்குவது போலக் கண்ணை இறுக்கி மூடிக் கொண்டிருந்தான். அவள் ஏதாவது பேச விரும்பி, புரண்டு புரண்டு படுப்பது போலிருந்தது. அவளுக்கும் அவஸ்தைதான். படட்டும், பட்டு அவளே உடைத்துக் கொண்டு வெளி வரட்டும் என்று பேசாமல் இருந்தான்.

ஆனால் கல் மாதிரி அவன் தூங்கி விட்டால்? ஏதாவது பேசி எதையாவது இறக்கி வைத்து விட வேண்டும் போலிருந்தது அவளுக்கு. யார் ஆரம்பிப்பது?

வேண்டுமென்றே திரும்பி, அவனை இடிப்பது போலப் படுத்தாள்.

"இன்னும் தூங்கலியா?"

நல்லவேளை. உடைத்து விட்டாள்.

"உம்."

"தூக்கம் வரலியா?"

"உம்."

"இன்னும் கோபம் போலிருக்கு."

அவன், அதுவரை இறுக்கி மூடியிருந்த கண்களைத் திறந்தான். புன்னகைக்கலாம். ஆனால் அது தோல்வியைக் காட்டிக் கொடுத்ததாகி விடுமோ? நீயே செய்யேன். நீயே பேசேன். விட்டுக் கொடுப்பது சுகம்தான். நீயே அந்த சுகத்தை எடுத்துக் கொள்ளேன். உப்பு பெறாத ஈகோதான். ஆனால் ஏன் உடைய மாட்டேனென்கிறது?

அவனுக்குத் தன் மீதே வெறுப்பாக இருந்தது. உருத்தெரியாமல் குத்தி, அழித்துக் கொண்டு விடலாம்போல இருந்தது. அழுத்தம் நெஞ்சை நெரிக்க, இமைச்சிமிழோரம் சட்டென்று இரண்டு முத்தை அவள் கவனித்து விட்டாள்.

"ஐயோ, ஏன் அழறது?"

தான் நிஜமாகவே அழுகிறோமா என்ன? அவனுக்கே ஆச்சர்யமாக இருந்தது. வெட்கமாகவும் அதே சமயம் ஆறுதலாகக் கூட இருந்தது. மரத்து விட்டதாக எண்ணிக் கொண்டிருந்த உணர்வுகளில் இன்னும் ஈரம் இருப்பதே ஆச்சர்யம்தான்.

"புவனா, காலைல நான் அப்படி நடந்துண்டிருக்கக் கூடாது."

"ஐயோ, அதொண்ணும் வேண்டாம்."

வெப்பம் கொப்பளிக்க அவள் மேலே படர்ந்தபோது எதற்கோ அர்த்தம் புரிவது போலிருந்தது அவனுக்கு.

# 8

அர்த்தநாரி, அதிகாரி பூஷணத்தின் வீட்டில் ஒரு அங்கத்தினனாகவே மாறி விட்டிருந்தான். அலுவலக விவகாரங்களில், குடும்ப உறவு, மிகவும் சூட்சுமமான பலனை ஏற்படுத்தித் தரும் என்பதை அவன் அனுபவம் அவனுக்கு உணர்த்தி இருந்தது. மனிதர்கள் ஒவ்வொருவருக்கும் சில விஷயங்கள் பிடித்திருந்தன. பல விஷயங்கள் பிடிக்காமல் இருந்தன. அவர்களுக்குப் பிடிக்கிற விஷயங்களில் தன்னைப் பொருத்திக் கொள்வதும், அவர்கள் வெறுக்கிற விஷயங்களில், தனக்கும் வெறுப்புள்ளது என்று காட்டிக் கொள்வதுமான நடைமுறை, மனிதர்களை வீழ்த்தி விடுவதை அவன் நுட்பமாக உணர்ந்திருந்தான்...

அர்த்தநாரியைப் பார்த்ததும், படித்துக் கொண்டிருந்த பேப்பரை மடித்து வைத்தார் பூஷணம். உள்பக்கம் திரும்பி, "ஆரங்கே... ஒரு காப்பி கொண்டா... அர்த்து வந்திருக்கார்" என்றுவிட்டு, 'உட்கார்' என்றார். பட்டும் படாமலும் பவ்யமாக அவர் முன் அமர்ந்தான், அர்த்தநாரி.

"திருப்பதி தரிசனம் நல்லபடியா ஆச்சா, சார்?"

"ஆகா.. ஆனந்தமான தரிசனம்... இந்தக் கெழும்தான் ரொம்பப் படுத்திடுச்சு.. குளத்தில காலை வழுக்கினதுன்னு கஞக்கு விழுந்து. நான் அவளுக்கு வைத்தியம் பார்க்கும்படி ஆச்சு.. என்ன கஷ்டம்!"

"வயசான காலத்துல ராமா, கோவிந்தானு இருக்கிறதை விட்டுட்டு, என்னத்துக்கு க்ஷேத்ராடனம்னு கிளம்பறாங்க, பெரியம்மா?" என்று ஒத்திகை பாடியதும், பூஷணம் பிடித்துக் கொண்டார்.

"என்னத்துக்கா? என் பிராணனை வாங்கியாகணுமே. அதுக்காகத்தான்."

"மாமனார், இருக்காரில்லையா? அங்க அல்லவா இருக்கணும், அந்த அம்மாள். அவருக்கு உபகாரமா இருக்குமே, சார்."

"அந்தக் கிழம் கல்லாட்டம் இருக்கார். கொஞ்ச நாள் விச்ராந்தியா இருக்கலாம்னுட்டு.



அந்தக் கிழம், இந்தக் கிழத்தை இங்கே அனுப்பி வைச்சுடறது – இது இங்க வந்து என்னைப் பிறாண்டறது. இதை நான் எங்கே போய்ச் சொல்லட்டும்..."

"ஆனா சார்.. மாமிக்கு, அவங்க அம்மா வோட இருக்கணும்னு ஆசையோ, என் னவோ..."

பூஷணத்தின் இரண்டாவது மகன், அர்த்த நாரிக்குக் காப்பி கொண்டு வந்து கொடுத்து விட்டுச் சென்றான். அர்த்தநாரி காப்பியைக் குடித்தான். முதல் டிக்காஷன், நீர் இறங்காத பால். முக்கியஸ்தர்கள் 'லிஸ்டில்' இருக் கிறவர்களுக்கே கிடைக்கிற காப்பி அது. அவ னுக்குச் சந்தோஷமாக இருந்தது. காப்பியைக் கொண்டே அந்தஸ்தைத் தீர்மானிக்கிறவள், மாமி.



"ஆசையாமே ஆசை. என் ஆத்துக்காரி குழந்தை. வாயிலே விரலை வச்சா கடிக்கத் தெரியுமோ. தெரியாது. அர்த்து! எல்லாம் என் தலையெழுத்து. என்ன பண்ண? கிழத்தைத் துரத்தி அடின்னு சொல்ல முடியுமோ? முடி யாது. நம்ம பலவீனம்தான் இருக்கவே இருக்கே."

மாமியைக் காண வேண்டி, இரண்டாம் கட் டுக்குச் சென்றான், அர்த்தநாரி. ஜன்னலை ஒட்டிப் போட்டிருந்த ஒற்றைக் கட்டிலில், பிரச்னைக்குரிய மாமியார், கால்பாகம் தீர்ந்த





## கண்ணதாசன் சொன்னகதை!

"சத்ரபதி சிவாஜியின் வாள் எவ்வளவு கூர்மையாக இருக்கிறது" என்று தன் மந்திரியைப் பார்த்து அதிசயித்துக் கூறினான் அவுரங்கசீப்.

"இரும்பான உங்கள் மார்பைப் பிளப்பதற்கு அவ்வளவு கூர்மை தேவைப்படுகிறது!" என்றார் மந்திரி.

"என் நெஞ்சு அவ்வளவு கனமானதா?" என்று கேட்டான் அவுரங்கசீப்.

"சங்கீதத்தால் இளகாத நெஞ்சு ஒன்று தான் உலகிலேயே கனமான நெஞ்சு!" என்றார் மந்திரி.

– கவிஞர் கண்ணதாசன் எழுதிய 'குட்டிக் கதைகள்' நூலிலிருந்து : பா. குணா

'நியூட்ரான் ரேடியோ கிராபி' என்னும் ரியாக்டர் கல்பாக்கம் காமினி அணு உலையின் மூலம் உருவாக்கப்படுகிறது. இதனால் என்ன பயன் தெரியுமா?

ஒருவர் மர்ம மரணம் அடைந்து விட்டார் என்றால் அவர் இறந்து எத்தனை ஆண்டுகள் ஆயினும் சரி. அவரது தலை முடியின் சிறு துகள் போதும். இந்த கருவி அந்த நபர் என்ன விஷம் உண்டு மாண்டார் என கூறி விடும். தடய அறிவியலுக்கு இது ஒரு வரப்பிரசாதம். மேலும் வேளாண்மைத் துறையிலும் இதன் பணி அற்புதம். ஒரு விதையை எடுத்து இதில் சோதனையிட்டால், செடியின் வளர்ச்சி, விதை நேர்த்தி, உற்பத்தித் திறன் இவற்றைப் புட்டு புட்டு வைத்து விடும்.

– பிரதீப்

அரிசி மூட்டை மாதிரி அமர்ந்திருந்தாள். மாமி முன்வந்து, 'வாங்கோ' என்றாள். தொடர்ந்து, 'காபி சாப்பிட்டேளா' என்றும் கேட்டாள்.

"சாப்பிட்டேன், மாமி. அயன் தஞ்சாவூர் டிகிரி காப்பி. இப்போல்லாம், யார் இந்த மாதிரி காப்பி போடறா? பருத்திக் கொட்டையும் புண்ணாக்கையும் சேர்த்து அரைச்சு, காப்பின்னு தர்றா. நல்ல காப்பி வாசனை கூட மறந்து போச்சு மாமி."

மாமிக்கு எத்தனை பற்கள் என்பதை அர்த்தநாரி கண்டுபிடித்தான். சின்னப் பெண் மாதிரி, கால் மாற்றிக் கால் வைத்துக் கொண்டு, 'இன்னொரு கப் தரட்டுமா' என்றாள்.

"என்னத்துக்கு உங்களுக்கு சிரமம்?"

"நன்னா இருக்கே. காப்பி போடறது சிரமமாமே? ஆத்து மனுஷாளாயிட்ட பிறகாலே, என்ன பார்மாலிட்டி?"

மாமி குதித்துக் கொண்டு அடுப்பறைக்கு ஓடினாள். தரையும் அதிர்ந்தது. மாமி காப்பியுடன் திரும்பினாள்.

"மாமி. இந்தக் காப்பி கிடக்கட்டும். இந்த மனசு இருக்கே, அது அற்புதம் மாமி. என்ன சொல்றேன்னு புரியல்லையா? வயசான தாயை வச்சுக்கிட்டு, அவங்களை திருப்பதி தரிசனத்துக்கு அழைச்சுட்டுப் போகிற மனசு. இப்போல்லாம் யாருக்கு வரது? மாமியார், ஓரகத்தி, ஓர்ப்படி, யாருமே இல்லாத, பாலைவனக் குடும்பத்துலதானே இப்பல்லாம் பெண் எடுக்கறா, கொடுக்கிறா. நீங்க ஒரு அற்புதம்தான், அந்த வகையில..."

மாமி எலுமிச்சை. இதைக் கேட்டதும், ஆப்பிள் மாதிரி சிவந்து போனாள். தாய்மையைப் போஷிக்கிற, அதை புனருத்தாரணம் செய்கிற "அந்தக்" காலத்து மனுஷியாக அவள் தன்னை வடிவமைத்துக் கொண்டாள். அரைக் கண்ணை மூடியபடி, கீதை மாதிரி ஒரு சுலோகம் சொன்னாள். இது மாமி கீதை.

"அர்த்தநாரி. யாரொருத்தர், தன் குடும்பப் பெரியவாளை, இதம் செய்யாமல் இம்சிக்கிறாளோ, அவாளை, சின்னவாளா இருக்கிறதுகள் நாளை இம்சிக்கும்... தெரியுமோ..."

மயிர் கூச்செறிந்தது, அர்த்தநாரிக்கு. அதே சமயம், மாமி அவள் மாமியாரை, பூஷணத்தின் அம்மாவை, 'அருயைப் பிண்டமே' என்று வைததும், அந்தப் பெரியம்மாவை இன்னொரு மகனுடன் வாழத் துரத்தியதும், அசந்தர்ப்பமாக நினைவு வர, சிரமப்பட்டு அதை மறந்துவிட்டுச் சொன்னான்.

"நீங்க சொன்ன அருமையான விஷயத்தை என் வீட்டுக்காரிக்குச் சொல்றேன், மாமி... ஆஹா... ச... ச..."

"அர்த்தநாரி! அந்தச் சிவன் கான்டிராக்ட் பைல் செட்டில் ஆயிடுத்தில்லையா? அது எத்தனை லட்சம் ரூபாய் கான்டிராக்ட்?"

திடுக்கிட்டான். பகவதி கிருஷ்ணி மாதிரி பேசிய மாமி, இதென்ன, கம்சனி மாதிரி கேள்வி கேட்கிறாள்?

தொகையைச் சொன்னான், அர்த்தநாரி.

"அப்படீன்னா, ரெண்டு லட்சமாவது. 'சாருக்கு' தரலாமே? போறது. நீயும் உழைக்கிறே. எல்லாம் போக, அவர் கணக்குக்கு 'ஒரு' ரூபாயாச்சும் கொடுக்கச் சொல்லு. அந்தச் சிவத்தை. இத்தோடு முடியல்லையே, உறவு? தென்னங்காடு பள்ளிக்கூட காண்டிராக்ட்டும், அவன்தானே எடுத்திருக்கான்? மாமாவை வந்து பார்க்கச் சொல்லு."

"சரி, மாமி. அதுக்கென்ன, பேஷா வரச் சொல்றேன்" என்றபடி கசந்தபடி வெளியேறினான், அர்த்தநாரி.

சாரத்தில்லாத முகத்துடன் வீடு வந்த அவனை யோசனையோடு கவனித்தாள், வள்ளி. வாழைக்காய் பஜ்ஜியும் காப்பியும் அவன் முன் கொண்டு வந்து வைத்த வள்ளி கேட்டாள்.

"என்ன, ஏதாவது பிரச்னையா?"

"பிரச்னையாவது, கிரச்னையாவது. ஊர்ல இருக்கப்பட்ட பெண்கள் எல்லாம் என்ன சாமர்த்தியமா இருக்கிறார்கள். கிழவி கூட 'பெர்சன்டேஜ்' பேசறாள். நீயும் இருக்கையே வள்ளி. காற்றுள்ளபோதே தூற்றிக்கணும்னு சொல்வாங்க. நீயோ, தேடி வர்ற சிதேவியைக் காலாலே உதைச்சு தள்ளறே. கடவுள், ஒரு முறைதான் கதவைத் தட்டுவார். கதவைத் திறந்து, அவர் கொடுக்கிறதை வாங்கிக்கணும்... இல்லை... அவர் நம்ம வீட்டுப் பக்கம் திரும்பிக் கூடப் பார்க்க மாட்டார்..."

"சாப்பிடுங்கள்" என்றாள் வள்ளி, மென்மையாக. அவன் சாப்பிட்டு வர, அவள் டி.வியைப் போட்டுக் கொண்டு அமர்ந்தாள். அர்த்தநாரி அருகில் வந்ததும் சொன்னாள்: "கடவுள் கொடுத்தால் வாங்கிக்கிறதில் தப்பில்லை. கண்டவனும் வந்து கதவைத் தட்டி புடைவையை நீட்டினால், என்ன பண்ணுவது? நான், முகம் தெரியாதவனிடம் புடைவை வாங்கலாமா, நீங்களே சொல்லுங்கள்."

"சும்மாவா கொடுக்கிறான். அவனுக்கு நாம் பத்து செய்தோம். அவன் நமக்கு அஞ்சு செய்துதானே தீரவேணும்? அதோடு, ஆபீசுல புடைவை எடுத்துக்கிட்டு வந்து ஒரு காண்டிராக்டர், இன்ஜினியரைப் பார்க்கலாமா?"

"ஆபீசுல செய்ய முடியாததை வீட்டுக்குள்ளே செய்யும்படி நாம் அனுமதிக்கலாமா?"

டி.வியில் நாடகம் போலவோ, சினிமா போலவோ ஏதோ ஒன்று தொடங்கி நடந்து கொண்டிருந்தது. அர்த்தநாரி, சேனலை மாற்றிக் கொண்டே இருந்தது. பத்து இருபது ஆண் பெண்களின் மத்தியில், ஒரு ஜோடி காதலித்துக் கொண்டிருந்த காட்சியில் நிலைத்தான். வள்ளிக்கு, அந்தக் காட்சி அசிங்கமாக இருந்தது. அவள் எழுந்து பால்கனிக்கு வந்தாள். எதிரே இருந்த வேப்பமரத்திலும், தூங்குமூஞ்சி மரத்திலும், காக்கைகள் அடைந்து கொண்டிருந்தன.

காக்கைகள், அடுப்புக் கரித் துணிகள். உயிருள்ள, பறக்கும் கறுப்பு நிற ஷூக்கள். அலுவல் முடித்து மர வீட்டுக்குத் திரும்பும், பறவை அலுவலர்கள். காக்கைகள், கூடு திரும்பி என்ன பண்ணுமாம்? பேசுமோ? தங்கள் வானத்து



## ஒரு பெண்ணும் இரண்டு பைத்தியங்களும்

மனநோய் மருத்துவமனையைப் பார்வையிட அமைச்சர் வந்திருந்தார். ஓர் அறையில் ஒருவன் 'அமுதவல்லி அமுதவல்லி' என்று அலறிக் கொண்டிருந்தான். அமைச்சர் காரணம் கேட்டபோது "அமுதவல்லி என்ற மிகவும் அழகான பெண்ணை விரும்பினான். அவள் கிடைக்கவில்லை. அதனால் இப்படி ஆகிவிட்டான்!" என்றனர்.

நான்கு அறைகள் தள்ளி இன்னொருவனும் 'அமுதவல்லி, அமுதவல்லி' என்று சட்டையெல்லாம் கிழிந்த நிலையில் அலறிக் கொண்டிருந்தான். வியப்புடன் வினா எழுப்ப, "அவனுக்குக் கிடைக்காத அமுதவல்லியைத் திருமணம் செய்து கொண்டவன் இவன்தான்!" என்று விளக்கம் கிடைத்தது.

— ம.நாராயணன் எழுதிய 'விருந்தும் மருந்தும்' என்னும் நூலிலிருந்து
வயலூர் ஆர்.பார்த்திபன்



"உன் மாமியாரை நீ திட்டமிட்டுக் கொலை செய்தாயா அல்லது உணர்ச்சி வசப்பட்டுக் கொலை செய்தாயா?"

"அஞ்சு வருஷம் உணர்ச்சி வசப்பட்டு, ஒரு வினாடில திட்டமிட்டுக் கொலை செஞ்சேங்க...!"

— ஆர்.கே

அனுபவங்களைப் பகிர்ந்து கொள்வதாய் இருக்குமோ? அன்று உண்ட வேப்பங்கனி பற்றி? அன்று பார்த்த காக்கைச் சகோதர, சகோதரிகள் பற்றி? அன்று பார்த்த கழுகுகள் பற்றி? பூனைகள் பற்றி? மரத்தைச் சுற்றிக் கொண்டு தொங்கும் மலைப்பாம்புகள் பற்றி? காலூன்ற இடம் அற்று, 'ஆண்டெனாக்களில்' களைப்பு தீர்த்துக் கொண்டது பற்றி? வெள்ளிக்கிழமை, விசேஷ தினங்களில் மாடிகளில் வைக்கப்படும் விருந்து சோறு பற்றி? எது பற்றிப் பேசும், அந்தக் காக்கைகள்? நிச்சயம், லஞ்சம் பற்றி, பொய், களவு, சூது, விபசாரம், பற்றி மட்டும் பேசாது. விருட்டென்று ஒரு காக்கை ஜிவ்வென்று மேலே பறந்து, விண்ணுக்கு ஏகியது. அதைப் பற்றித் தொடர்ந்து பறக்க முடியாத காக்கை, தயங்கி, மரக்கிளையிலேயே தங்கிக் கொண்டது.

வள்ளி, பால்கனியில் நின்று கொண்டிருந்தவள், அளவிலாத சோர்வு அவளைத் தாக்குவதை உணர்ந்தாள். தனிமையாகிப் போனோம் என்கிற தன்னிரக்கத்தில் குமைந்தாள்.

ஆல்பர்ட்டின் வீட்டைக் கண்டு பிடிப்பதில், பிந்துவுக்குச் சிரமம் ஒன்றும் இருக்கவில்லை. நகரத்தில் முகவரி உள்ள வீட்டைக் கண்டுபிடிக்க என்ன சிரமம் இருக்க முடியும். வீட்டுக்குள் இருப்பவர்களைக் கண்டுபிடிப்பது தானே சிரமமாக இருக்க முடியும்?

தெருவில் இருந்து, நீளவாக்கில் ஒரு ஆளோடி. அதன் முடிவில், தோட்டம். தோட்டம் பார்த்தபடி வீடு. வாசலில், பிரம்பு நாற்காலியில் பாவாடையும், அரைக்கை சட்டையுமாக ஒரு நடுவயதுப் பெண், காலைத் தூக்கி டீபாயின் மேல் வைத்துக்கொண்டு, துண்டு பிளேடால் விரல் நகங்களை வெட்டிக் கொண்டிருந்தாள். பிந்துவைக் கண்டதும், காலைக் கீழே வைத்துக் கொண்டு, 'யார்' என்றாள்.

பிந்து அங்கிருந்த ஏறக்குறைய கீழ்ப்பகுதி கிழிந்த நாற்காலியில் அமர்ந்தபடி, "நான் பிந்து. ஆல்பர்ட் வேலை செய்யற கம்பெனிக்கு, ரா மெட்டீரியல்ஸ் சப்ளை பண்றோம். அந்தப் பழக்கம். இங்கே ஒரு வேலையா வந்தேன். ஆல்பர்ட் ஞாபகம் வந்தது. பார்த்துட்டுப் போகலாம்னு வந்தேன்" என்றான், வீட்டை அவதானித்துக் கொண்டே.

வாயில் சுவரில், ஓலையால் ஆன சிலுவை மாட்டப்பட்டிருந்தது. கீழ் மத்திய வகுப்புக்கு உரிய வாழ்க்கைச் சூழ்நிலை தெளிவாகத் தெரிந்தது.

"ஆல்பர்ட் என் தம்பிதான். வீட்டுல இல்லையே அவன்?"

"அவர் அக்காவா, நீங்க? அவர் இல்லைன்னா என்ன? உங்களைப் பார்த்த மாதிரி ஆச்சே. உங்க பேர்...?"

"பிலோமினா. செயின்ட் டேவிட்லே டீச்சரா இருக்கேன். காப்பி சாப்பிடறீங்களா?"

"ஐயோ.. இப்போதான் சாப்பிட்டேன்... உங்க தம்பி உங்களோடதான் இருக்காரா?"

"ஆமாங்க. எங்க அம்மா காலமான பின்னால, ஆல்பர்ட்டை வளர்த்து, படிக்க வைச்சவளே நான்தான். நானும் அவனும்தான் இருக்கோம்."

"உங்க கணவர்..."

"நான் கல்யாணமே பண்ணிக்கலை."

"நல்ல காரியம். ரொம்ப புத்திசாலித்தனமான முடிவு."

பிலோமினா சிரித்தாள். 'ஒரு நிமிஷம்' என்றபடி எழுந்து போனாள். பிந்து, எழுந்து வீட்டைச் சுற்றிப் பார்த்தான். தெருவை ஒட்டிய அறையிலிருந்து உள்அறை தெரிந்தது. நாற்காலிகள், பெஞ்சுகள் என்று பழங்காலப் பாணியில், வீட்டின் ஹாலில் அங்கொன்றும் இங்கொன்றுமாக இருந்தன.

உள்ளிருந்தபடியே, "உள்ளே வாங்க" என்று அழைத்தாள், பிலோமினா.

பிந்து, உள்ளே சென்று அமர்ந்தான். பிஸ்கட்டுகள் நிறைந்த தட்டை பிந்துவுக்கு முன் வைத்து, டீயையும் கொணர்ந்து, 'சாப்பிடுங்க' என்றாள்.

"என்னத்துக்கு சிரமம்" என்றபடி ஒரு பிஸ்கட்டை எடுத்து பிட்டுப் போட்டுக் கொண்டான், பிந்து.

"நீங்களும் கல்யாணம் பண்ணிக்கலையா?"

"நான் ஒரு டைவர்சி."

"ஓ—"

அடுத்த கேள்வியை எதிர்பார்த்தான் பிந்து. ஆனால், அவள் கேட்கவில்லை. இந்த குணம், பிந்துவுக்குப் பிடித்தது.

"ஞாயிற்றுக்கிழமையானா இந்தப் பையன் வீடு தங்கிறதில்லை. நானும் இப்போதான் கோயிலுக்குப் போய்த் திரும்பினேன். காலைப் பூஜைக்குப் போகலை. விருந்தாளிகள் வந்துட்டாங்க."

"ஓகோ..."

"நாசரத்லேதான் எங்க சொந்தக்காரங்க இருக்காங்க. எனக்கு உறவுக்கார சாரா அத்தைன்னு ஒருத்தர். ரொம்ப பெரிய குடும்பம். அங்க, ஒரு பெண் இருக்கு. நம்ம ஆல்பர்ட்டுக்குப் பேச வந்திருந்தாங்க. கர்த்தருக்கு விருப்பம்னா எனக்கும் விருப்பம்தான்."

"ஆல்பர்ட் சம்மதிச்சாரா?"

"லேசா பேசினேன். அவன் மறுப்பு ஒன்றும் சொல்லலை. சொல்ல என்ன இருக்கு? நாம், அவனுக்குத் தீங்கா பண்ணுவோம்?"

பிந்துவுக்கு என்ன பேசுவது என்று தெரியவில்லை.

(தொடரும்)

# சங்கடத்தை உண்டாக்கும் சங்கதிகள்!

**சி**ல வருடங்களுக்கு முன்னர், பிரபல ஹிந்துஸ்தானி பாடகர் ஒருவர், சென்னை காமராஜ் அரங்கத்தில் பாடினார். மறுநாள் ஒரு தமிழ் தினசரியில் "அநூப் ஜலோட்டா என்கிற அந்த அழகு மயிலின் ஆட்டம் அரங்கத்தில் இருந்த அனைவரையும் கவர்ந்தது என்பதை அடித்துச் சொல்லலாம்" என்று விமர்சனம் எழுதப்பட்டிருந்தது!

அநூப் ஜலோட்டா என்ற பெயரை வைத்து அவர் தாய்க்குலம் என்று கருதியது மட்டுமல்லாமல், பாடகரை ஆடகராகவும் மாற்றி விட்டார் விமர்சகர்! நிகழ்ச்சியைப் பார்க்காமல், விமர்சனம் செய்யத் துணிந்தது அவர் தவறென்றால் அப்படிப்பட்ட விமர்சகரை நம்பி ஊக்குவித்தது பத்திரிகையின் தவறு!

இன்னொரு சம்பவம் : ஒரு பிரபல நாளிதழில் பெண்மணி ஒருவர் நாட்டிய விமர்சனங்களை எழுதி வந்தார். ஆர். ஆர். சபாவில், நாட்டிய அரங்கேற்றம் ஒன்றிற்கான அழைப்பிதழ் கிடைக்கப்பெற்ற அவர், தவிர்க்க முடியாத காரணங்களினால் நிகழ்ச்சிக்குச் செல்ல முடியவில்லை. ஆனால் கார்டில் இருந்த நிகழ்ச்சி வரிசையை வைத்து, "கடந்த வாரம் ஆர்.ஆர். சபாவில்' என்று துவங்கி அரங்கேற்றத்தைப் பிரமாதமாக விமர்சித்து விட்டார்! ஆனால் நடந்தது என்ன தெரியுமா? ஏதோ பிரச்னை காரணமாக அந்த அரங்கேற்றம் குறிப்பிட்ட தினத்தன்று நிகழவேயில்லை!

**நா**ட்டிய அரங்கேற்றம் செய்யும் பெண் அனேகமாக பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவராகத்தான் இருப்பார். அந்தப் பெண்ணின் தந்தை 'பி.ஆர்.ஓ'வாக ஒருவரை நியமித்து, "ஸார், நம்ம பொண்ணு அரங்கேற்றம் எல்லா பத்திரிகையிலும் வந்துடணும்" என்று பேசி ஒரு தொகையைக் கொடுத்து விடுவார். பி.ஆர்.ஓக்களும் ஒவ்வொரு பத்திரிகை அலுவலகமாக ஏறி விமர்சகருக்கு அழைப்பிதழ் தருவது முதல் அரங்கேற்றத்துக்கென்றே பத்திரிகையாளர் சந்திப்பு நடத்துவது வரை பலவிதங்களில் செயல்படுவார்கள். நடனமாட இருக்கும் பெண்ணின் புகைப்பட ஆல்பத்தை எல்லோரிடமும் காட்டி, வந்திருப்பவர்களின் கையில் சக்திக்கேற்ப அன்பளிப்பும் கொடுத்து விடுவார்கள்.

சில விமர்சகர்கள், "அன்னிக்கு என்னால் வர முடியாது; ப்ரோக்ராம் கார்டு மறக்காம கொடுத்திடு. நான் பார்த்துக்கறேன்" என்று பி.ஆர்.ஓவிடம் சொல்வதும் உண்டு!

கட்டுரையின் ஆரம்பத்தில் விவரித்தது போன்ற சம்பவங்களுக்குக் காரணம் என்ன






என்று இப்போது புரிந்திருக்குமே!

**வே**று சில பந்தாவான விமர்சகர்கள் இருக்கிறார்கள். ஸ்டார் ஹோட்டலில் தங்கியிருப்பார்கள். நடனமணிகள் அங்கே போய் நடனநிகழ்ச்சிக்கு அழைப்பதுடன், காலில் விழுந்து நமஸ்கரித்து, "மாமா என்னை ஆசீர்வாதம் பண்ணுங்கோ" என்று சொன்னதுமே விமர்சனம் அவர்கள் மனத்தில் ஊற்றெடுக்க ஆரம்பித்துவிடும்.

வேறு சிலர் வீட்டில் வந்து மரியாதை



**"யோவ் கஸ்மாலம்! இப்படி லாரி குறுக்கே வந்து விழறியே... அப்படி அவ சரமா எங்கே போற?"**

**"இன்ஸ்யூரன்ஸ் ப்ரீமியம் கட்டறதுக் குத்தான்!"**

**– கொங்கணாபுரம் வே. செந்தில்**

செய்ய வேண்டும் என்று எதிர்பார்க்கும் ரகம். நடனக் கலைஞர் கல்யாணத்துக்கு அழைப்பது போல், தாம்பூலத் தட்டும் பட்டாடையும் சமர்ப்பித்து மரியாதை பண்ணினால் விமர்சக ரின் பேனாவுக்கும் குஷி வந்து விடும்.

சமீபத்தில் நடந்த ஒரு சம்பவம் : அந்த வயலின் வித்வானுக்கு இனிமேலும் பத்திரிகை யில் எழுதி புகழ் வர வேண்டும் என்கிற தேவையேயில்லை. ஒரு சங்கீதப் பத்திரிகைக் காக அவரைப் பேட்டி கண்ட பத்திரிகையாள ருக்கு கவரில் வைத்து ஐந்நூறு ரூபாய் கொடுத் திருக்கிறார்! அரண்டு விட்டார் அந்த நேர்மை யான பத்திரிகையாளர். "கடவுள் என்னை வசதி யாகத்தான் வைத்திருக்கிறார்" என்று நாசூக்காகச் சொல்லி விடைபெற்றுக் கொண் டார்.

மிகவும் பிரபலமாக இருப்பவர்களே இப் படி, பத்திரிகையாளர்களைக் கவர நினைக்கும் போது, புதிதாகப் பாட, ஆட வரும் கலைஞர் கள் பத்திரிகை விமர்சனத்துக்கு ஆசைப்படு வது மிகவும் நியாயம்தான்.

ஆனால் கவர் கொடுத்தால்தான் விமர் சனம் கிடைக்கும்; அதுவும் நல்ல விமர்சனம் கிடைக்கும் என்கிற நிலை கிட்டத்தட்ட நடை முறையாகவே மாறிவிட்டது எத்தனை பெரிய அவலம்!

"ஒருமுறை எனக்குத் தெரிந்த நண்பரின் மகளின் அரங்கேற்றம் நடந்தது. இடையில் பி.ஆர்.ஓவாக இருந்தவருக்கு எங்கள் நட்பு பற்றித் தெரியாது" என்று ஆரம்பித்தார் ஒரு தமிழ் நாளிதழின் விமர்சகர். "மனிதர் என்ன செய்தார் தெரியுமா? எனக்குக் கொடுக்க வேண்டும் என்று நண்பரிடம் ரூபாய் வாங்கி யிருக்கிறார். நண்பர் என்னிடமே கேட்டு விடவே, குட்டு வெளிப்பட்டு விட்டது. இது போன்ற சங்கதிகள் எங்களைப் போன்று நியாயமாக விமர்சனம் செய்ய விரும்புவோரை மிகவும் சங்கடப்படுத்துகின்றன. அரங்கேற்ற நிகழ்ச்சிகளைப் பற்றி விமர்சிக்கும்போது, கூடியவரையில் குறைகளை சுட்டிக்காட்டா மல் எழுதுவது என் வழக்கம். அப்போதுதான் ஆடும் பெண்ணுக்கு உற்சாகம் கூடும். இப் போது சினிமா, மற்றும் அரசியல் உலகில் உள்ள 'கவர்' கலாசாரம் இசை மற்றும் நாட் டிய உலகிலும் வந்துவிட்டபடியால், விமர் சனங்கள் எழுதுவதையே நான் குறைத்துக் கொண்டு விட்டேன்..." என்றார்.

"நீங்கள் சொல்லும் விஷயங்கள் தமிழ்ப் பத்திரிகைகளைப் பொறுத்தமட்டில் சரியாக இருக்கலாம். ஆங்கிலப் பத்திரிகைகளில் விமர் சனம் எழுதும் எங்களைப் போன்றோர் கலை ஞர்களிடம் எந்த பிரதிபலனையும் எதிர்பாரா மல் நிகழ்ச்சிகளின் நிறைகுறைகளை எழுதி வருகிறோம். ஆனால் நீங்கள் சொல்வது போல் சில விமர்சகர்கள், கலைஞர்கள் தங்கள் காலில் விழுந்து ஆசீர்வாதம் வாங்க வேண்டுமென்று நினைப்பது உண்மைதான்" என்று நம்மிடம் சொன்னார் மூத்த விமர்சகர் ஒருவர்.

இந்த விஷயத்தில் தமிழ்ப் பத்திரிகை யாளர்களை மட்டும் குறைசொல்வது சரி யல்ல; ஏனென்றால் ஆங்கில ஏடுகளில் நல்ல விமர்சனமாக வரவேண்டுமென்றுதான் கலை ஞர்கள் விரும்புகிறார்கள். ஆகவே அதற்கான "ஏற்பாடுகளை" அவர்கள் செய்கிறார்கள் என்று சொன்னார் தமிழிதழ் விமர்சகர் ஒருவர்.

ஆங்கிலப் பத்திரிகைகளில் நல்ல விமர் சனங்களாக வரும் பட்சத்தில் அவற்றை ஜெராக்ஸ் எடுத்து வெளியூர், மற்றும் உள்ளூர் சபா செயலர்களிடம் கொடுத்து சான்ஸ் கேட்க கூடுதல் வாய்ப்பு இருக்கிறதாம். ஆகவே, இந்த விஷயத்தில் "கொஞ்சம் செல வானாலும்" பரவாயில்லை என்கிற ரீதியில் செயல்படுகிறார்கள்.

ஆங்கில இதழ் விமர்சகர்களும் விருப்பு வெறுப்புக்கு அப்பாற்பட்டவர்களல்ல என்று சற்று கூர்ந்து ஆராய்ந்து பார்த்தால் தெளி வாகும். சமீபத்தில் நடந்த ஒரு நடன நிகழ்ச் சியை சென்னையின் இரு முன்னணி ஆங்கில நாளிதழ்கள் விமர்சித்தன. ஒரு விமர்சனம் ஓஹோஹோவென்று புகழ, மற்றொன்று அந்நிகழ்ச்சி மிகவும் சுமார்தான் என்று உறுதி யாகச் சொன்னது! விமர்சகர்களின் ரசனை யில் வேண்டுமானால் மாறுபாடு இருக்கலாம். ஆனால் குறைந்தபட்சம் தர நிர்ணயத்துக்கு ஒரு பொதுவான அளவுகோல் இருக்க வேண் டுமே... அப்படி இல்லாத நிலையில் விமர்சகர் கள் பேரில் நம்பிக்கை போய் விடுகிறது.

**- ப்ரியன்**

# பார்வைக்கு வந்தவை

● **நீங்களும் திரைப்பட இயக்குநர் ஆகலாம்/ எம். விஜயகுமார்/இலக்குமி நிலையம், 53. கௌடியாமடம் சாலை, சென்னை - 14/ ரூ. 42.00**

சினிமாவின் பல்வேறு தொழில்நுட்பப் பிரிவுகள் பற்றி விளக்குகிற நூல். மேலோட்டமாக மட்டும் எழுதப்பட்டுள்ளது.

● **சைலன்ட் ஜோக்ஸ்/ஜீவி/ பிரியா நிலையம், 45. முத்து முதலித் தெரு, சென்னை - 14/ ரூ. 15.00.**

கார்ட்டூன்களுடன் ஜோக்குகள். சில சிரிக்க வைக்கின்றன.

● **ஸ்ரீ ஜெயேந்திரர் பதிலளிக்கிறார்/ வானதி பதிப்பகம், சென்னை - 17/ ரூ. 20.00**

ஆன்மீகக் கேள்வி-பதில்கள்.

● **அர்த்தமுள்ள இந்து மத சம்பிரதாயங்கள்/ அசோக்குமார்/பிரியா நிலையம், சென்னை - 14/ ரூ.14.00**

நடைமுறையிலுள்ள சிறு சிறு பழக்கங்களுக்கு அறிவு பூர்வமான விளக்கம் தேடுகிற முயற்சி.

உதாரணமாக: 'விளக்கு வைத்ததும் ஏன் பெருக்கக் கூடாது?'

அக்காலப் பெண்கள் திருகு வைத்த நகைகளையே அதிகம் அணிந்தனர். பெருக்கும்போது அவை கழன்று

**பா**ட்டுக்கொரு புலவன் பாரதி - இதைப் பற்றிச் சந்தேகமில்லை. ஆனால், பாரதியை பற்றிப் பரவலான அபிப்பிராயம் இந்த அளவில் நின்று விடுகிறது. ஆழமான, அகலமான பல்துறை அறிவுடன், சமுதாய நோக்கில் தத்துவ விசாரணை செய்த பாரதியை அறிந்திருப்பவர்கள் மிகக் குறைவு. பாரதியின் கவிதைகள் ஏராளமான பதிப்புக்கள் வெளிவந்திருக்கின்றன.




# காலம் வென்ற கட்டுரையாளர்!

ஆனால் கட்டுரைகள் வரவில்லை. எந்தக் கலைஞனையும் ஒற்றைப் பரிமாணச் சிறையில் அடைத்து, அதுவே மகிழ்ச்சியின் எல்லை என்ற திருப்தி அடைந்துவிடும் தமிழரின் இயல்பான சுபாவமே இதற்குக் காரணம்.

இச்சூழ்நிலையில், பாரதியைப் பற்றிய தமிழரின் பார்வையை விசாலமாக்க வேண்டுமென்ற நோக்கத்துடன், 'பாரதி அறுபது' என்ற நூலை, நல்லி குப்புசாமி செட்டியார் வெளியிட்டிருக்கிறார்.

வழிபாடு, சமயம், சமூகம், தத்துவம், மாதர், நற்கலைகள், பல்சுவை என்ற பல்வேறு தலைப்புக்களில் அறுபது கட்டுரைகளைக் கொண்டது இந்நூல். தம்மிடமிருந்த இதுவரை வெளிவராத கருணை, நம்பிக்கை, மகாமகம் ஆகிய மூன்று கட்டுரைகளை இந்நூல் பதிப்பாசிரியருக்குத் தந்துதவியிருக்கிறார் சீனி. விசுவநாதன். அவரை இதற்காக எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

அனுபவ முதிர்ச்சியுடன் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள அருமையான கட்டுரைகள். ஒரு நல்ல சிந்தனையாளருக்கு அடையாளம், அவர் எக்காலத்தவருக்கும் சமகாலத்தவராக இருப்பதுதான். இக்கட்டுரைகளைப் படிக்கும்போது, இவ்வுண்மை நமக்குத் தெளிவாக விளங்குகிறது.

'தர்மங்கள் எல்லாருக்கும் ஒரே விதமானவையல்ல. ஒரு மனிதனுக்கே எல்லாக் காலங்களிலும் தர்மங்கள் ஒருவிதமானவையல்ல. காலத்துக்கும் இடத்திற்கும் மனிதனுக்கும் அவசரத்துக்கும் ஏற்றபடி தர்மங்கள் வித்தியாசப்படுகின்றன.'

**படித்ததில் பிடித்தது:**

விழுந்து விட்டால் இருட்டில் குப்பையோடு போய்விடுமே என்பதால் அப்படியொரு வழக்கம் கொண்டு வந்தார்களாம்!

● **அருட்பாவில் குறட்பாக்கள்/ஊ.வ. தட்சிணாமூர்த்தி/அருள் பதிப்பகம், 66. பெரியார் தெரு, எம்ஜி.ஆர். நகர்,சென்னை - 78/ ரூ.25.00.**

திருவருட்பாவில் ஆங்காங்கே சிதறிக்கிடக்கிற திருக்குறள் சிந்தனைகளின் தொகுப்பு.

● **யந்திரங்கள்/அகிலன் கண்ணன்/தாகம், 11. சிவப் பிரகாசம் தெரு, தி.நகர், சென்னை - 17/ ரூ.26.00.**

சிறுகதைகளின் வடிவில் அற்புதமான வாழ்க்கைச் சித்திரங்கள். ஒரு கதையும் சோடை போகவில்லை.

● **ஸ்மைல் பிளீஸ்/துக்ளக் சத்யா/ அல்லயன்ஸ் கம்பெனி, சென்னை - 4/ ரூ.30.00.**

ஆசிரியர் கேட்டிருக்கவே வேண்டாம். தானாகவே சிரிப்பு பொங்கிக் கொண்டு வரச் செய்கிற நகைச்சுவைக் கட்டுரைகள்.

'There cannot be any absolutism about our Value System; it is relative depending upon the social climate of a given period' என்று மேற்கத்திய நவீனச் சிந்தனையாளர்கள் கூறும் கருத்தை எவ்வளவு சுலபமாக பாரதியால் இந் நூற்றாண்டுத் தொடக்கத்திலேயே கூற முடிந்திருக்கிறது!

சாக்ரடீஸ், ப்ளாட்டோ, கன்ஃப்யுஷியஸ், திருவள்ளுவர் போல் பாரதியும் எக்காலத்துக்கும் உரியவர் என்பதை இது நிலைநிறுத்தும்.

ஹிந்துத்வம் என்பது ஒரு வாழ்க்கை முறை என்பதைப் பற்றி பாரதிக்கு சந்தேகமேயில்லை. ஒரு சமூகத்தில் இருக்கக்கூடிய பல வகைப்பட்ட மக்களுக்கென்று அவரவர்களுக்கு சாத்தியமான நெறிகள் வரையறுத்துக் கூறப்பட்டிருப்பதே இதற்குச் சான்று. ஹிந்து வாழ்க்கை முறையில் பல கடவுள்களும், கடவுள் கோட்பாடென்பது ஒன்றுதான் என்ற ஒன்றுக்கொன்று மாறுபட்டதுபோல் காணும் கருத்துக்கள் இருப்பதற்குக் காரணத்தை மதம் பற்றிய கட்டுரைகளில் மிக ஆழமாக ஆராய்கிறார் பாரதி.

முடிவுரையாகக் கூறும்போது சொல்கிறார்: 'எல்லா மதங்களும் உண்மைதான்; ஒரு மதமும் முழு உண்மையன்று. ஆதலால் மதப் பிரிவுக் கருதி மனிதர் பிரிந்து விடக் கூடாது. எல்லா மதங்களும் ஒரு தெய்வத்தைத்தான் வணங்குகிறார்கள். லௌகீக விஷயங்கள் போலவே மத விஷயங்களிலும் ஒப்பு, உடன்பிறப்பு, விடுதலை மூன்றும் பாராட்ட வேண்டும்!'

மதத்தின் பேரால் மக்களைப் பிரிக்க முயலும் அரசியல்வாதிகள் அனைவரும் உணர வேண்டிய கருத்து!

இந்நூல் இக்காலத்திய சமுதாய அரசியல் சூழ்நிலையில் அனைவரும் படித்தறிய வேண்டியதொன்றாகும். பிற மொழியினரும் பாரதியின் பரிமாணங்களைப் புரிந்து கொள்ள இந்நூல் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட வேண்டும்.

**— இந்திரா பார்த்தசாரதி**

**பாரதி அறுபது/டாக்டர் நல்லிகுப்புசாமி செட்டியார்/ ஸ்ரீபுவனேஸ்வரி பதிப்பகம், 2, மாடல் ஹவுஸ் லேன், சி.ஐ.டி. நகர், சென்னை - 35/ரூ. 60.00**



● நேற்றிலிருந்து அதீத பாசம்
சுழித்தோடிய நதி மீது
நீச்சல் கற்றுக் கொண்டதால்!

● மழை வந்து கலைத்ததில்
சோகம் கொண்டது மனசு
குழந்தை போட்ட தெருக் கோலம்.

● டிவி.யில் புதுப்படம்
எண்ணம் ஒருமிக்கவில்லை.
வாசலில் அணில் கூட்டம்.

● உயிரை மாய்த்துக் கொள்ள
பலமான போட்டி
தூண்டிலைச் சுற்றி மீன்கள்.

***— திருவாரூர் ஜெயகிருஷ்ணன்***

# உங்கள் வளமான எதிர்காலத்திற்கு எங்கள் விசேஷ சேமிப்புத் திட்டம்

## சில்வர் டெபாசிட் திட்டம்



இன்றே எங்களிடம் ஒரு டெபாஸிட்டைத் துவக்கி,
வளமான மகிழ்ச்சியான வருங்காலத்தை எதிர்நோக்குவீர்

**EXPRESS**
**FINANCIAL EXCHANGE LIMITED**

பாங்க் ஆப் அமெரிக்காவின் சார்பு நிறுவனம்

- வாகனங்களுக்கான கடன்கள்
- பங்குகள் மீதான கடன்கள்

அங்கீகரிக்கப்பட்ட டீலர் அமெரிக்கன் எக்ஸ்பிரஸ் டிராவலர்ஸ் செக்குகள்

பதிவு அலுவலகம்: நெ. 9, அட்லேப் டவர், தெற்கு போக் சாலை, சென்னை-600 017.
போன்: 4340325, 4340329, 4341403, ஃபாக்ஸ்: 4341518.

• சென்னை • ஹைதராபாத் • விஜயவாடா • விசாகப்பட்டினம் • பெங்களூர் • திருச்சி
• கும்பகோணம் • கோயம்புத்தூர் • பாண்டிச்சேரி

1996 மார்ச் 4-ந் தேதி எகனாமிக் டைம்ஸில் வெளியான எமது சட்ட பூர்வ விளம்பரத்தைத் தொடர்ந்து இந்த விளம்பரம் வெளியாகிறது.

Helios & Matthieson

# காதல் ஜ்கிழிவ்

ஐந்தரை மணிக்கே வந்து டோக்கன் வாங்கியாகி விட்டது. டாக்டர் வருவதற்கு ஆறரை மணி ஆகுமாம்.

பசி வயிற்றைக் கிள்ளியது. மெயின் ரோடில் 'ரெடி ஃபுட்ஸ்'. தீர்மானிப்பதற்குள் கால்கள் பத்தடி நடந்து விட்டன.

"சப்பாத்தி இருக்கு..."

முதல் விள்ளல் வாயில் கரைவதற்குள் 'ஹாய்' என்ற அழைப்பு.

நிமிர்ந்தான்.

வினுதா.

"நீயா?"

போன ஞாயிறு ஒரு கல்யாண மண்டபத்தில் அறிமுகம். 'வீடியோ'வின் ஆக்கிரமிப்பு மீறி, குறுக்கே மறைப்பவர்களின் தொல்லை தவிர்த்து, மணமக்களை ஃப்ரேமிற்குள் கொண்டு வர சிரமப்பட்டுக் கொண்டிருந்த போது ஒரு மென்கரம் நீண்டது. சூடான காப்பி.

"யாருக்கு" என்றான்.

"உங்களுக்குத்தான்."

"தேங்க்ஸ்..."

காலி தம்ளரை வாங்கிக் கொண்டு போனாள்.

அத்தோடு மறந்து போயிருக்க வேண்டிய சமாசாரம். இல்லை. முகூர்த்தம் முடிந்து, ஒவ்வொருவராய்த் தேடிப் பிடித்து குரூப் போட்டோ எடுத்து... 'மாலை நலங்கிற்கு மறக்காமல் வா' என்று அவளை விசிறி விட்டபோது மீண்டும் அதே மென்கரம். குறுக்கே கைநீட்டித் தடுத்தவளைப் பார்த்தான்.

"வினுதா... என் பேர்."

"ஓ..."

"நீங்க சாப்பிடவே இல்லை. இன்னும்..."

பசித்து அடங்கிப் போன வயிறு. நிறைய ஃபங்ஷனுக்கு ஃபோட்டோ எடுத்துப் பழகிப் போன அனுபவம்.

"பரவாயில்லே... இன்னொரு இடம் போகணும்.."

பொய். நேராக ஏதேனும் ஒரு ஹோட்டல். ஆறிப் போன – மிச்சம் இருக்கிற கறி, கூட்டுடன் சாப்பாடு. லேசாய் ஓய்வு. மீண்டும் இங்கே வர வேண்டும். இப்போதே மணி இரண்டு. நான்கு மணிக்கு நலங்கு.

"பரவாயில்லே... வாங்க..." என்றாள்.

ஏறக்குறைய வலுக்கட்டாயம். போனான். பக்கத்து இலையில் அவள்.

"நீ... நீங்களும் சாப்பிடலியா?"

"ம்... உங்களுக்குக் கம்பெனி தர!"

வார்த்தைகள் அதன் அளவில் சுருக்.

ஆனால் செவிகளைத் தீண்டிய மறுவினாடி உள்ளுக்குள் கிளர்ந்து எழும் வண்ணங்கள்.

பாயசம் இரண்டாம் முறை கப்பில் தரச் சொன்னாள். மோர் சாதம் மறுத்தவனுக்கு தம்ளரில் மோர். மண்டப வாசலில் தேங்காய்ப் பையுடன் டாட்டா.

நான்கு மணிக்கு சந்தன நிற சுரிதார்.

"நைஸ்..." என்றான் அவளையும் மீறி.

மாப்பிள்ளை அவளுடைய பெரியப்பா பையனாம். ஓவராய்க் கேலி

செய்தான். நலங்கில் விட்டுக் கொடுத்தபோது 'இப்பவே சரண்டரா' என்றாள்.

இத்தனை நாட்களில் – கேமிராவைத் தொழிலுக்காகக் கையில் பிடித்த முதல் நிமிடம் முதல், பிறர் விருப்பத்திற்காகப் படம்பிடித்தவன் முதன் முறையாகத் தனக்காக எடுத்தான்.



நாலடி தூரத்தில் நின்றிருந்தவன் நகர்ந்து பின்வாங்கினான். லேசாய்ப் படபடப்பு.

யாரும் அவனைக் கவனிக்கவில்லை.

''தேங்காயை விடாதே... கெட்டியாப் பிடிச்சுக்க...''

"ஏய்... பிரபு.. ஒரு கைதான் யூஸ் பண்ணணும்."

பத்தடி தொலைவில் நின்றவன் 'Zoom' செய்து விநுதாவை மட்டும் 'கிளிக்'கினான்.

**"கி**ளிக்..." என்றாள் கையைத் தட்டி.

"எ...ன்ன?"

'என்ன யோசனை.' எனக்கும் டிபன் வாங்கித் தரணுமேன்னா..."

"என்ன வேணும்?"

''ப்ச்... டிபன் வேணாம்... ஐஸ்கிரீம்...''

உதடுகளின் ஊடே மறைந்த ஐஸ்கிரீம் மீது பொறாமை வந்தது. எப்படித் தற்செயலாய் அடுத்த சந்திப்பு நிகழ்கிறது?

''காதுல என்ன பஞ்சு?'' என்றாள்.

"ஆங்..."

''போச்சு... கேட்காதா?''

புரிந்தவனாய்ப் பதில் சொன்னான்.

''ரெண்டு நாளா வலி... ஏன்னு புரியலே. 'ஈஎன்ட்டி'கிட்ட வந்தேன். ஆறரைக்குத்தான வருவாராம்.''

**வெ**ளியில் வந்ததும் சொன்னாள்.

''ஆல்பம் பார்த்தேன்... ரொம்ப நல்லா இருந்தது.''

ரிஷபன்

மனதை மாற்றிக் கொள்ளக் கூடாது என்பதில் பிடிவாதமாக இருப்பவன் பலவீனமான மனிதன்.

– சாமர்செட் மாம்

தகவல்: வயலூர் ஆர். பார்த்திபன்

"தேங்க்ஸ்."

"வேற பர்சனலா நீங்க ஆல்பம்... ஐ மீன்... கலெக்‌ஷன் வச்சிருக்கீங்களா..."

முதுகுத் தண்டில் சில்லிட்டது. கண்டு பிடித்து விட்டாளா...

"இல்லே... உங்க டேஸ்ட்டுக்கு ஃபோட்டோஸ் எடுக்கிறது உண்டா..."

"ம்! வச்சிருக்கேன்... பார்க்கணுமா?"

ரிஸ்ட் வாட்ச்சைப் பார்த்தாள்.

"இப்ப நான் ஃப்ரீதான். நீங்க டாக்டரைப் பார்க்கணுமே..."

"நாளைக்குப் பார்த்துக்கிறேன்."

"வேணாம்... ஐ வில் வெயிட்... டாக்டர் ஃபர்ஸ்ட்..." என்றாள்.

பயப்படத் தேவையில்லை என்றார் டாக்டர். பிரிஸ்கிரிப்‌ஷனில் மருந்து வரிசை.

"என்னவாம்..."

"நத்திங் டு வொர்ரி..."

"உங்க வீட்டுக்குப் போகலாமா..."

மொபட் பாக்கியம் செய்தது. தன் வழக்கமான சண்டித்தனங்களைக் கூட விட்டு விட்டு ரிஸர்விலேயே எத்தனை கி.மீ. வேண்டுமானாலும் ஓடுகிறேன் என்று காதலாய் முனகியது.

"ச்சீ... பேசாமல் இரு" என்றான்.

"என்ன..." என்றாள் இரைந்து.

'உன்னிடம் இல்லை. என் மொபெட்டிற்கு சொன்னேன்' என்றா சொல்ல முடியும்.

தலையசைத்தான்.

எதையுமே தேட வேண்டிய பாச்சிலர் அறை.

"ஆல்பம்னு வைக்கலே.. இதோ.. இங்கேதான். ஒரு கவர்ல வச்சிருந்தேன்..."

போட்டோக்களைத் தேடுவதை விட அறையை ஒழுங்கு செய்ய சிரமப்பட்டான்.

"ஹை... என் ஃபோட்டோ..." என்றாள்.

திடுக்கிட்டுத் திரும்பினான். வினுதாவின் கையில் அவளை Zoom செய்து எடுத்த ஃபோட்டோ. துளி பிசகாமல் நேர்த்தியாய் வண்ணக் கலவையில் சிறைப்பட்ட அழகு.

"யெஸ்... உங்க ஃபோட்டோ... வந்து... கல்யாணத்துல எடுத்தது. சர்ப்ரைசா... உங்ககிட்டே தரணும்னு..." தடுமாறினான்.

"நல்லா இருக்கு... நான் இவ்ளோ அழகா?"

நீயா... என் மனதைக் கேள். அது சொல்லும். பெண்ணே... காதல் கேமிராவில் அடைபட்டுப் போயிருக்கிறேன்.

"இதோட நெகடிவ்..." என்றாள்.

"எதுக்கு?"

"வேணுமே."

சட்டென்று முகம் கன்றிப் போனது.

ஓ... ஏன் அவள் வலுக்கட்டாயமாய்த் தன்னுடன் வந்திருக்கிறாள் என்று புரிந்தது.

யூகித்து விட்டாள். தன்னை மட்டும் தனியே ஃபோட்டோ எடுத்ததை. ஆல்பத்திலேயே இருந்திருந்தால் இத்தனை தூரம் வந்திருக்க மாட்டாள். கல்யாணச் சூழலில் எடுத்ததைத் தனியே ஏன் எடுத்து வைத்திருக்கிறான்... அவன் நோக்கம் மீதே சந்தேகம்.

நெகடிவ்வும் கேட்டது அதனால்தான்.

எத்தனை சாதுர்யமாய் பிரச்னையைத் தீர்த்துக் கொள்கிறாள். கூச்சல் இல்லை. குற்றச்சாட்டு இல்லை.

பெருமூச்சு விட்டான். என் முதல் ஆசை. எனக்கும் பிடித்துப் போன பெண். இனி மன ஆல்பத்தில் மட்டுமே புரட்டிப் பார்க்க வேண்டும்.

"ப்ளீஸ்.... தேடித் தரேன்."

அவளிடம் துளிக்கூட பதற்றம் இல்லை.

தர முடியாது, போ என்றால் கூட அடுத்த தாய் என்ன செய்ய வேண்டும் என்று தீர்மானித்தவள் மாதிரி தோற்றம்.

தேடியதில் கலர் லேப் கவர் கிடைத்தது.

வெளிச்சத்தில் பார்த்ததில் 'அவள்' இருந்தது புலனானது. காதல் நெகடிவ்!

"இதுதான்..."

விரல்கள் நடுங்க நீட்டினான். தனக்காக பிரத்தியேகமாய்... பொக்கிஷமாய்... வைத்திருக்கத் தீர்மானித்த ஃபோட்டோ. இனி 'அன்எக்ஸ்போஸ்' ஆகிப் போன frame நினைவின் வருடல்கள் தரப் போகிற சுகம் மட்டும்.

வாங்கிக் கொண்டாள்.

வேறு பக்கம் திரும்பியிருந்தான்.

கண்களில், இதயத்தில் ரணக்.

"ஹலோ... உங்களைத்தான்..."

இப்போதும் அதே மென்குரல்.

"எ...ன்ன?"

"இந்த நெகடிவ் வச்சு எவ்வளவு பெரிசா பிரிண்ட் எடுக்கலாம்..."

"ஆஸ்..யூ.. ப்ளீஸ்... லைஃப் சைசுக்கு பிரிண்ட் போடலாம். ஒரிஜினல் வேணும்னா 15 பை 12 வரை எடுக்கலாம்..."

குரல் அனிச்சையாய் முனகியது.

"எனக்கு 'லைஃப்'தான் வேணும்.."

அவள் குரலில் ஏதோ சீண்டல் புரிய, நிமிர்ந்தான். அவள் கண்களிலும் காதல் காமிரா தெரிந்தது. காதல் 'பாசிட்டிவ்'தான் என்று சொல்லாமல் சொன்னது.

## தில்லி நியூஸ் :

தேவேகௌடா ஜனதா தள கட்சித் தலைவராகவும் தேர்ந்தெடுக்கப்படக்கூடிய சூழ்நிலை உருவாகி வருகிறது. பீகார் முதல்வர் லாலுபிரசாத் யாதவ், ஜனதா தளத் தலைமையை விடாப்பிடியாக இறுக்கிப் பிடித்துக் கொண்டிருந்தாலும், 'கௌடா தலைவர் ஆவதை நான் ஆதரிக்கிறேன். நான் பதவி ஏற்றதுகூட, வேறு யாரும் இல்லையே என்று தான் என 'சீச்சி இந்தப் பழம் புளிக்கும்' பாணி அறிக்கை விட்டிருக்கிறார். கட்சித் தலைமையும், ஆட்சித் தலைமையும் ஒருவரிடமே இருக்க வேண்டும் என்று பிரதமர் விரும்புகிறாராம், ராவைப் போலவே.



• தேவேகௌடா

• சுக்ராம்

● தில்லி மாநில முதல்வர் சாகிப் சிங் வர்மாவின் செல்லுலர் போன் காணாமல் போய்விட்டது. பேட்டரியை ரீசார்ஜ் பண்ண போனை வைத்திருந்தபோது, யாரோ லவட்டிக் கொண்டு போய் விட்டார்கள். வேடிக்கை என்னவென்றால், போன் தொலைந்து போனதை போலீசிடம்கூட முறையிடவில்லை முதல்வர்.

● தமிழ்நாட்டு ஐஏஎஸ் அதிகாரிகள் மட்டும்தான் தப்புத்தண்டாவில் அதிகம் இடம் பிடிக்கிறார்கள் என்று வருத்தப்பட வேண்டாம். தரம் சந்த் சங்க்லா என்ற ஐஏஎஸ் அதிகாரியை (தில்லி காதி கிராமக் கைத்தொழில் வாரியத்தின் மானேஜிங் டைரக்டர்) தில்லி போலீசார் ஏப்ரல் மாதம் முதல் தேடி வருகிறார்கள். இவர் ஒரு கொலை கேசில் சம்பந்தப்பட்டிருக்கிறார்!

● 'ஓர் அமைச்சர் உற்சாகத்தோடு ஏராளமாக வேலை செய்யும்போது சில தவறுகள் நடக்கலாம். ஆனால் அந்தத் தவறுகள் நியாயமான தவறுகளா, வேண்டுமென்றே செய்யப்பட்ட தவறுகளா என்று பிரித்துப் பார்க்க வேண்டும்' என்று ஒரு டீவி நிகழ்ச்சியில் சொன்னவர் சுக்ராம். தவறுக்குப் புதிய வியாக்யானம் சொன்ன சுக்ராம், நாலு கோடி ரூபாய் யாருடையது என்பதை மட்டும் இன்னும் சொல்லவில்லை!

● பீகார் கால்நடை இலாகா ஊழலை அக்குவேறு ஆணிவேராக அலசி ரிப்போர்ட் தயாரித்த சிபிஐ உயர் அதிகாரி டாக்டர் உபேன் பிஸ்வாஸ், தம் மனைவியுடன் சேர்ந்து மாநில அரசு உயர் அதிகாரிகளுக்குப் பயிற்சி அளிக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறார். "தியானம் மிகச் சிறந்த பயிற்சி. கடவுள், மதம் பற்றி எல்லாம் நான் எதுவும் சொல்லுவதில்லை" என்கிறார்.

● தமிழ் மாநில காங்கிரசின் வெற்றியைப் பார்த்து, பிற மாநில காங்கிரஸ் தலைவர்களும், நாமும் மூப்பனார் மாதிரி தனி அதிகாரம் கொண்ட மாநிலக் கட்சிகளாகப் பிரிந்தால் என்ன என்று யோசித்து வருகிறார்கள். எல்லா காங்கிரஸ்காரர்களையும் இணைக்க கேசரி முயன்று வருகையில், இப்படி ஒரு பூதம் கிளம்புவது அவரை திடுக்கிடச் செய்திருக்கிறது.

● பிரதமர் தேவேகௌடாவைப் பற்றி, அவரது அடுத்த வீட்டுக்காரராக இருந்த பேராசிரியர் வெங்கடகிரி கௌடா 'ஊழல் மன்னர் தேவே கௌடா' என்ற புத்தகத்தை எழுதியிருக்கிறார். இதை ஜார்ஜ் ஃபெர்னாண்டஸ் நூறு பிரதிகளும், ஹெக்டே நூறு பிரதிகளும் வாங்கியிருக்கிறார்களாம். புத்தகம் பரபரப்பாக விற்பனை ஆகிறது. பிரதமரை 'சூப்பர் சுக்ராம்' என்று குறிப்பிட்டிருக்கிறார் வெங்கடகிரி கௌடா!

— நியூஸ்வாலா

●● கோயமுத்தூர் சிவபிரசாத், பறவைகளின் குரல்களைப் பதிவு செய்து ஆடியோ கேசட் வெளியிட்டுள்ளார் என்ற விவரம் அடங்கிய 1995 ஏப்ரல் 9 ஹிந்து நாளிதழ் தேவை.

*ஆர்.வி. விவேகானந்தன்,*
*C 50, ஹவுசிங் யூனிட்,*
*பட்டுக்கோட்டை-614 602.*

●● இந்தியாவின் அனைத்து மத்திய அமைச்சர்கள், தமிழக அமைச்சர்கள் ஆகியோரது பெயர்கள், துறைகள், விலாசங்கள் தேவை. இராமநாதபுரம் மாவட்டம் அனைத்து மத்திய, மாநில அரசுத் துறைகள், மேலதிகாரிகளின் பெயர்கள், விலாசங்களும் தேவை.

*S. Raisul Islam,*
*P.O.Box. 3967, Dammam 31432,*
*Saudi Arabia.*

●● பஞ்சதந்திரம் சமஸ்கிருத மொழியில் ஆங்கில அரும்பத உரையுடன் மூன்று பிரதிகளே உள்ளன. கடிதத் தொடர்பு சமஸ்கிருத மொழியில் இருந்தால் மட்டுமே ஒருவருக்கு ஒரு பிரதி வீதம் தர முடியும்.

*எஸ். நரசிம்மன்,*
*111A. வ.உ.சி. தெரு,*
*திருநெல்வேலி-627 006.*

●● என்னுடன் திருச்சி ஈ.ஆர்.ஹைஸ்கூலில் 1953-55ல் படித்த நங்கவரம் வேங்கடராமனுடன் தொடர்பு கொள்ள விரும்புகிறேன்.

*டி. பார்த்தசாரதி,*
*23, ராகவையா சாலை,*
*சென்னை-600 017.*

●● I.I.T யின் J.E.E தேர்வுக்குரிய பாடங்கள் பாதி விலைக்குத் தரத் தயார்.

*ஆர். சுப்பிரமணியன்,*
*A 7, புதிய வீட்டுவசதி குடியிருப்பு,*
*தஞ்சாவூர்-613 005.*

●● Spastic Paraplegia என்ற உடல் உபாதை ஏற்பட்டு அலோபதி சிகிச்சையில் ஓரளவு குணமாகிறது. நோயின் விளைவாக கால்களில் உண்டான Spasticity வேறு எந்த வைத்திய முறையிலாவது குறையப் பெற்றவர்




கள் விவரங்கள் தெரிவிக்கக் கோருகிறேன்.

*டி. ராஜலட்சுமி,*
*25, ராக்கியப்ப தெரு,*
*சென்னை-600004.*

●● பதினைந்து வருட 'ரீடர்ஸ் டைஜெஸ்ட்' தொகுப்பு உள்ளது. விரும்பி வைத்துக் கொள்ள நினைப்பவர்கள் தொடர்பு கொள்ளவும்.

*கோமளா ராமன்,*
***B7. 92/1, Safdarjung Enclave,***
***New Delhi - 29.***

●● காலண்டர்களில் வரும் கடவுள் உருவப் படங்களை சம்கி, முத்து, மணிகளால் அழகுபடுத்தி, நியாய விலைக்குப் பூஜை அறையை அலங்கரிக்கத் தருகிறேன்.

*லக்ஷ்மி,*
*8, கணேஷ் ராம் காலனி,*
*ஸ்ரீநிவாசா அவென்யூ,*
*சென்னை-600 028.*

●● உடலியக்க மருத்துவம் படிக்கிறேன். Human Physiology - Guyton; Human Physiology - Chakrabarthi ஆகிய புத்தகங்கள் தேவை. விலை, விலாசம் தெரிவித்தால் நேரில் வந்து பெற்றுக் கொள்கிறேன்.

*க. பெருஞ்சித்திரன்,*
*13, கலைஞர் நெடுஞ்சாலை,*
*சீனிவாச நகர், சென்னை-63.*

●● மாம்பலம் வட்டாரத்தில் எனது கைப்பை அறுக்கப்பட்டு டயரி களவாடப்பட்டது. என் வெளிநாட்டுப் பயண அனுபவங்களைக் கொண்டது. கண்டெடுத்தோர் தகவல் தந்தால் சன்மானம் கொடுத்து பெற்றுக் கொள்வேன்.

*எஸ்.வி. ராஜலக்ஷ்மி,*
*147, லேக் வியூ சாலை,*
*சென்னை - 600 033.*

●● எம்.ஃபில் ஆய்வுக்கு ஆனைவாரி ஆனந்தனின் "ஒரு கவிஞன் முனிவனாகிறான்" எனும் நாவலும், ஆசிரியர் முகவரியும் தேவைப்படுகிறது.

*எஸ். இரவிச்சந்திரன்,*
*2/124, புளியம்பாடி,*
*இன்னம்பூர் (அ) 612 303, தஞ்சை மாவட்டம்.*

இந்தியாவிலேயே தனி ஒருவரின் பாடல்களை இப்படி தொகுத்து ஆல் இந்தியா ரேடியோ வழங்குவது இதுவே முதல் முறை'' என்றார் சென்னை வானொலி நிலையத்தின் உதவி இயக்குனரான விஜயகுமார். அவர் குறிப்பிடுவது "திவ்ய நாம சங்கீர்த்தனம்" என்ற பெயரில் ஒலிப்பதிவு செய்யப்பட்ட தியாகராஜரின் 109 பாடல்களை. ('ரபீந்திர சங்கீத்' என்ற பெயரில் தாகூரின் கவிதைகளை இப்படி ஒலிப்பதிவு செய்யும் முயற்சி தொடங்கிவிட்டது என்றாலும் அது முடிவுறவில்லை).

# ரேடியோவில் தியாகராஜர்!

"பட்ஜெட் பனிரெண்டு லட்சத்தைத் தாண்டிவிட்டது. இந்த முயற்சியில் இரண்டு சிறப்புக்கள். மிக நவீன தொழில்நுட்பம் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. வழக்கமாக ஒருமுறை ஒலிப்பதிவு செய்ததை, மாற்றல் செய்து பாதுகாப்பதுதான் வழக்கம். இந்த முயற்சியைப் பொருத்தவரை நேரிடையாகவே பாதுகாக்கும் வகையில், ஸ்டூரியோவில் ஒலிப்பதிவு நடந்தது. தவிர இன்றைய கர்நாடக இசையின் who's who பட்டியலில் இடம்பெறக் கூடிய அத்தனை பேருமே இதில் பாடியிருக்கிறார்கள் என்று சொல்லலாம்'' என்று மேலும் தகவல்கள் அளித்தார்.

ஒவ்வொன்றும் அரைமணி நேரம் அடங்கிய முப்பது எபிஸோடுகள் தயாரிக்கப்பட்டுள்ளன. இவற்றைத் தயாரிக்கும் பொறுப்பு விஜயலட்சுமி சுப்ரமண்யத்திடம் விடப்பட்டது. வானொலி நிலையத்தின் நிகழ்ச்சி அதிகாரியாகப் பணிபுரியும் இவர் ஒரு 'ஏ'கிரேடு பெற்ற பாடகியும் கூட. தனிப்பட்ட முறையில் கேஸட்டுகள் வெளியிட்டிருக்கிறார்.

"இது ஒரு பெரும் பொறுப்பு. கச்சேரிகளிலெல்லாம் தியாகய்யர் கீர்த்தனைகளைப் பாடும்போது இரண்டு சரணங்களைப் பாடி விட்டு நிறுத்திவிடுவது வழக்கம். ஆனால் ஒரு விதத்தில் தியாகய்யரின் கிருதிகளைப் பாதுகாக்கும் எண்ணத்துடனும் இந்த முயற்சி எடுக்கப்பட்டதால் அத்தனை சரணங்களையும் இடம் பெறச் செய்தோம். மங்கள கைசிகி ராகத்தில் அமைந்த "ஜெய ஜெய ஸ்ரீ ரகுராமா'' பாடலை எக்கச்சக்கமான சரணங்கள் கொண்ட பாடலுக்கு உதாரணமாகச் சொல்லலாம்'' என்றார் விஜயலட்சுமி.

இறைவனை எழுப்புவது, உபசாரம்,



• விஜயலட்சுமி

நலுங்கு, லாலி போன்று தினசரி பூஜையில் இடம் பெறத் தகுந்த பாடல்களை "உற்சவ சம்பிரதாயம்" என்றும், மற்றபடி இறைவனின் நாமாவளியைப் போற்றிப் பாடுவதை "திவ்ய நாம சங்கீர்த்தனம்" என்றும் சொல்வார்கள். இந்த முயற்சியில் இரண்டு பிரிவில் அடங்கும் பாடல்களும் (நிகழ்ச்சியின் பெயர் திவ்ய நாம சங்கீர்த்தனம் என்று மட்டுமே இருந்தாலும்) இடம் பெறுகின்றன.

"பொதுவாக கர்நாடக சங்கீதம் "கமக"த்தை அடிப்படையாகக் கொண்டது. இதனால் பலர் சேர்ந்து ஒரு பாடலைப் பாடுவது கஷ்டம். (நிறைய ஸ்வர சாகித்யம் வருவதால் பஞ்சரத்ன கீர்த்தனைகளைக் குழுவாகப் பாட முடிவது வேறு விஷயம்). ஒரே ஸ்ருதியைக் கொண்டவர்களாக இணைத்துப் பாட வைப்பது சவாலாக இருந்தது. நிகழ்ச்சியில் இடம் பெற்றுள்ள பலரும் இந்தக் கடும் முயற்சியில் வெற்றி பெற்றிருக்கிறார்கள். என்றாலும் சுசுந்தா கானமேகம், சங்கீதா சிவகுமார், வி.சி. கிருஷ்ணன், சாய் சங்கர் இவர்களின் குரல் இணைப்பு குறிப்பிடத்தக்கதாக எனக்குப் படுகிறது" என்றார்.

அதே சமயம் பாலமுரளி கிருஷ்ணா, எம்.எஸ். கிருஷ்ணன், திருச்சூர் ராமச்சந்திரன், சுதா ரகுநாதன், உன்னி கிருஷ்ணன் போன்ற பல பிரபலங்கள் தனித்தனியாகத்தான் பாடியிருக்கிறார்கள். ரொம்பவும் பிஸி என்பதால் குழுவாக ஒத்திகை பார்ப்பது கஷ்டமாம்.

இந்த நிகழ்ச்சியின் ஆலோசகர் டி.எஸ். பார்த்தசாரதி, வழிகாட்டி பாலமுரளி கிருஷ்ணா. ஒவ்வொரு பாடலுக்கு முன்பும் அதைப் பற்றிய சிறு விளக்கம் ஒன்று அளிக்கப்படுகிறது. இந்த விளக்கம் தமிழ், இந்தி, தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய ஐந்து மொழிகளில் தனித்தனியாக ஒலிப்பதிவு செய்யப்பட்டது. ஒவ்வொரு செவ்வாய் கிழமையும் இரவு ஒன்பதரையிலிருந்து பத்து வரை ஒலிபரப்பாகிக் கொண்டிருக்கும் இந்த நிகழ்ச்சிக்குத் தமிழகத்தில் தமிழ் விளக்கம், ஆந்திரத்தில் தெலுங்கு விளக்கம்... இப்படி அளிக்கப்படுகிறது.

**— ஜி.எஸ்.எஸ்.**

---

# ராஜாஜி செலுத்திய வருமானவரி

**வ**ருமான வரி செலுத்துவோர் எல்லோருமே தங்களது ஆண்டு வருமானத்தை முன்கூட்டியே மதிப்பிட்டு, அதற்கு ஏற்ப வரியை முன்பணமாகவே செலுத்த வேண்டும். இதனை 'அட்வான்ஸ் டாக்ஸ்' என்பார்கள். ராஜாஜிக்கும் இவ்வாறு வரி கட்டச் சொல்லி நோட்டீஸ் வந்தது. "எனக்கோ ரொம்ப வயதாகி விட்டது. நிதி ஆண்டு முடிவதற்குள் நான் உயிரோடு இருப்பேனா, சம்பாதிப்பேனா ஒன்றும் தெரியாது. இந்த நிலையில் நான் அட்வான்ஸ் டாக்ஸ் கட்டுவது எப்படி சாத்தியம்?" என்று வருமான வரித் துறைக்கு பதிலெழுதினார் ராஜாஜி!

அவருடைய 'ஆடிட்டர்' என்ற முறையில் நான் சட்டத்தை அவருக்கு விளக்கினேன் : "அதிகாரிகளை நொந்து கொண்டு பயனில்லை. சட்டப்படி நீங்கள் வரியை அட்வான்ஸாகக் கட்ட வேண்டும்; அல்லது உங்களுடைய வருமானம், வரிசெலுத்த வேண்டிய அளவுக்கு இல்லை என்று கணக்குக் காண்பித்தாக வேண்டும்.




• காந்திஜியின் வாழ்க்கைச் சம்பவங்களைப் புகைப்படங்களிலே பார்த்து மகிழ்கிறார் ராஜாஜி. காந்தி தமது கைப்பட எழுதியுள்ள தமிழ்க் கடிதத்தில், "பாரதி ஞாபகார்த்த பிரயத்தனங்களுக்கு ஆசீர்வாதம்" என்று எழுதியிருக்கிறார்.
- அமரர்கல்கி, எட்டயபுரத்தில் எழுப்பிய பாரதி மணிமண்டபம் தொடர்பாக எழுதப்பட்ட கடிதம்.

இந்தியாவின் முன்னாள் கவர்னர் ஜெனரலும் சென்னை ராஜதானியின் முந்நாள் முதல் மந்திரியுமான நீங்கள், சட்டத்துக்குப் புறம்பாக நடந்து கொள்வதை நான் விரும்ப மாட்டேன்'' என்றேன்.

ராஜாஜி கோபப்படவில்லை. அன்று முதல் சாகும் வரை ஒவ்வொரு ஆண்டும் அட்வான்ஸ் டாக்ஸை ஒரே தவணையில் கட்டினார். "மூன்று தவணைகளில் கட்ட சட்டம் அனுமதிக்கிறது" என்று நான் எடுத்துக் காட்டிய போது, "ஒரே தவணையில் இந்தத் தொல்லையிலிருந்து நான் விடுபடவே விரும்புகிறேன்'' என்றார்!

1972 டிசம்பரில் உடல்நலம் குன்றி அவர் ஜெனரல் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்ட போது, அருகிலிருந்தவர்களிடம் அவர் வேடிக்கையாக இப்படி சொல்லியிருக்கிறார் :

"ஜி. நாராயணசாமி (ஆடிட்டராகிய நான்) என்னை டிசம்பர் 15-ம் தேதிக்கு முன் சாக அனுமதிக்க மாட்டார்! 'அட்வான்ஸ் டாக்ஸ் கட்டாமல் எப்படி சாவது' என்று கேட்பார்'' என்று ஜோக் அடித்திருக்கிறார்! டிசம்பர் 25 கிறிஸ்துமஸ் தினத்தன்று அவர் காலமானார்.

உடல்நலம் குன்றிய நிலையிலும் அவரது நகைச்சுவை உணர்வு ஒருபுறமிருக்க, சட்டத்துக்கு உட்பட்டு நடப்பதிலும் வரி செலுத்துவதிலும் அவர் காண்பித்த அக்கறையை எண்ணிப் பாருங்கள். இன்றைக்கு வருமானவரி பாக்கிக்காக முதலமைச்சராக இருந்தவரின் சொத்துக்களை, இலாகா ஜப்தி பண்ண வேண்டிய நிலையில் அல்லவா தேசம் இருக்கிறது!

அவர் இறப்பதற்கு ஏழெட்டு மாதங்களுக்கு முன்னர் என்னை அழைத்து, தமக்கிருந்த சொத்துக்களை மகனுக்கும் மகளுக்கும் பிரித்துக் கொடுத்துவிடச் சொன்னார். "இப்படி செய்தால் ரூ. 15,000 வரை நீங்கள் வரி கட்ட வேண்டியிருக்கும்'' என்று கூறி, மாற்று யோசனை சொன்னேன். அது சட்டத்துக்கு உட்பட்ட யோசனைதான். அதன்படி ராஜாஜியின் நோக்கம் நிறைவேறிவிடும்; வரி கட்டவும் நேராது. ஆனால் ராஜாஜி என் யோசனையை ஏற்கவில்லை. "உன் சாமர்த்தியத்தை நான் மெச்சுகிறேன். ஆனால் நீ சொல்வது போல் ஒரு தொழிலதிபரோ, வியாபாரியோ நடந்து கொள்ளலாம், நான் அப்படி நடந்து கொள்ளக் கூடாது'' என்றார். எவ்வளவு வரி என்று கணக்குக் கேட்டு 'செக்' எழுதிக் கொடுத்தார்.

அவர் கருத்துப்படி, பொது வாழ்வில் ஈடுபட்டிருக்கும் ஒருவனது தார்மிகக் கோட்பாடுகள் சட்டங்களைவிடவும் மேம்பட்டதாக இருக்க வேண்டும். அதனால் ஏற்படக்கூடிய கூடுதல் சுமைக்கும் அவன் தயாராக வேண்டும்.

இவ்வாறு சட்டத்துக்கு உட்பட்டும் அதற்கு மேம்பட்டும் கூட நடந்து கொண்ட ராஜாஜி, அதர்மமான சட்டங்களை எதிர்க்கவும் தயங்கவில்லை. இந்த எதிர்ப்பு, சுதந்தர இந்தியாவில் வீதிகளிலே நடக்கக்கூடாது என்றும், அரசியல் சாசனத்துக்கு உட்பட்ட முறைகளில் வாதாடி வெற்றி பெற வேண்டும் என்றும் அவர் கருதினார்.

உதாரணமாக, தமிழக அரசு, பென்ஷன் பெறுவதை ஒரு தொழிலாகக் கருதி, தொழில் வரி விதித்து வந்தது. 'பென்ஷன் பெறுகிற ஒருவன் தொழில் நடத்துவதாகக் கருத முடியாது' என்று ராஜாஜி நீதிமன்றத்தில் வழக்குப் போட்டார். சென்னை உயர்நீதி மன்றம் இவர் வழக்கைத் தள்ளுபடி செய்து விட்டது. மனம் தளராமல் உச்சநீதிமன்றத்துக்கு வழக்கை எடுத்துப் போய் வாதாடச் செய்தார். பென்ஷனர்களுக்கு சாதகமாக உச்சநீதி மன்றம் தீர்ப்பு வழங்கியது. பென்ஷன் பெற்று வந்த ராஜாஜி, நூறு ரூபாய்தான் தொழில் வரி செலுத்த வேண்டிய நிலையில் இருந்தார். இது அவருக்குப் பெரிய தொகை அல்ல. ஆனால் அவர் வாதாடியது தமக்காக அல்ல; ஒரு அதர்மத்தை எதிர்த்து. பல்லாயிரக்கணக்கான பென்ஷன்தாரர்கள் இதனால் இன்றைக்கும் பயனடைந்து வருகிறார்கள்.

உலகிலே இரண்டுவிதமான பெரிய மனிதர்கள் இருக்கிறார்கள். வெற்றிகளைக் குவித்தவர்கள் ஒரு சாரார். தார்மிக நெறிகளின்படி நின்றவர்கள் ஒரு சாரார். ஆனால் ராஜாஜியோ தார்மிக நெறிகளிலிருந்து இம்மியும் பிறழாமல் வெற்றிகளையும் குவித்தார் என்பதால் எல்லோரையும் விட உயர்ந்து நிற்கிறார்.

- ஜி. நாராயணசுவாமி



''அந்த குமார் உனக்கு லவ் லெட்டர் எழுதினதுக்கு ஏண்டி நீ பதிலே போடலை?''

''அன்பே, உன் மேல் உயிரையே வைத்துள்ளேன். நீ என்னை விரும்புகின்றாயா. இல்லையென்றால் இந்த லெட்டரை கீதாவுக்கு போஸ்ட் செய்னு எழுதியிருக்கான்''

- வெ. ராஜாராம்

கந்தகோட்டம் ஸ்ரீ முத்துக்குமரன் துணை

# மாமனிதருக்கு மணிவிழா ஆண்டு ஆரம்பம்



திருப்பணிச் செம்மல் **Dr.** திரு **P.** பாலசுப்பிரமணியம்
சீனியர் அறங்காவலர் கந்தகோட்டம் சென்னை - 3

**சேர்மன்**

## ஸ்ரீ கந்தசுவாமி பர்மனென்ட் பண்டு லிமிடெட்

(மத்திய அரசு அங்கீகரித்த நிதி நிறுவனம்)

Regd. & H.O: 60, சாமிபண்டாரம் தெரு சிந்தாதிரிப்பேட்டை
சென்னை -2. போன்: 8548917
கிளை: 36, ஜீனிஸ் ரோடு சைதாப்பேட்டை,
சென்னை - 600 015. போன் 459569

## வாழ்வாங்கு வாழ வாழ்த்துகிறோம்!

**Dr. R.விவேகாநந்தன், B.Com,M.B.A.**
**A.சுப்பிரமணியன்**
**V. சண்முகவடிவு, B.A.,**
**V. விஜயகோபால், B.Com, D.C.P.**
**M. ராஜேந்திரன்**
**P. ஏகாம்பரம்**

# நஜை மழையில் சென்னை!

அட, வெட்கப்படா தீங்க! இத்தனை நாளும் பாத்ரூம்ல நாம குளிச்சோம்! இன்னிக்கி பாத்ரூமே குளிக் குது! அவ்ளோ தான்!

ஹையா, இனி ஒரு வருஷத்துக்குக் குளிக்க வேணாம்!

# பத்மா ரவிசங்கர்

இந்தக் காலத்து இளைஞர்கள்...! இருங்கள். முதலில் என்னைப் பற்றி :

எனக்கு வயது 60. திடுதிப்பென்று என் இதயம் கொஞ்சம் கோபித்துக் கொண்டதில் பி.பி. ஏகத்திற்கு எகிறிவிட, மருத்துவர் கட்டாயக் காற்றிற்கும், நடைக்கும் உத்தரவிட்டு விட்டார்.

தினம் என் திருவல்லிக்கேணி புறாக் கூண்டு வீட்டிலிருந்து விடுதலையாகி மாலை மஞ்சளில் சில கி. மீட்டர்கள் நடந்துவிட்டு மெரீனாவில் அண்ணா சமாதி சமீபம் வெகு நேரம் உட்கார்ந்திருப்பேன்.

சில நாட்கள்தான். அந்த இடம் பிடிக்காமல் போய்விட்டது. அங்கிருந்த இரைச்சலும், வியாபார அவசரமும், குதிரைக் குளம்படிச் சந்தடியும் சித்தம் சிதறடித்தது.

நேற்று சீரணி அரங்கிற்கு இந்தப் பக்கம் ஒரு இடம் பார்த்து வைத்திருந்தேன்.

சொற்பமாக அங்கொருவரும், இங்கொருவருமாக, இந்த இடம் தேவலை. சிலுசிலு காற்றும் அமைதியும் – ஏகாந்தமாக இருந்தது. அப்புறம் –

நர்வஸாக நகம் கடித்து உலாத்தும் அந்தப் பெண்ணைப் பார்த்தேன். இருபது வயதுதான் இருக்கும். மிகத் துறுதுறு. உலகையே விழுங்கி விடும் அகன்ற விழிகள்.

ஆனால், அவளின் டைட் ஜீன்ஸ் பேண்ட், காக்ரே பீக்ரே டிசைன் சட்டை, அலட்சியமாக சூயிங்கம் மெல்லும் சாயம் பூசின வாய், எண்ணெய் அதிகம் காணாத படபடக்கும் தலை முடி பார்க்க எனக்குள் எரிச்சல் மூண்டது.

இவர்களின் நாகரிகமும், வாழ்க்கையும் எங்கே செல்கிறது...?

சட்டென்று அவள் முகம் மலர்ந்து பார்வை பற்றிக் கொண்டதைக் கவனித்தேன். வருவது அவள் பாய் ஃப்ரெண்டாக இருக்க வேண்டும்.

"ஹாய்!" பின்புறம் எதிரொலித்தது. கழுத்தைத் திருப்பி, தொலைவில் உற்சாகமாக வருபவனைப் பார்த்தேன்.

அந்த இளைஞன் மகா ஒடிசலாக இருந்தான். இருபதின் துவக்கத்தில்தான் இவனும். துக்கம் அனுஷ்டிப்பவன் போலத் தாடி. பொருந்தாமல் லூஸான ஆடைகள். அசைந்து அசைந்து நடக்கையில் காற்றில் ஏகத் தொள தொள பாண்ட் ஒரு சைடு ஒதுங்குவது வேடிக்கையாக இருந்தது. ஒற்றைக் காதில் சிறு கடுக்கன். அவளின் சிவந்த நிறத்திற்கும் எதிர் மாறாக, மாநிறத்திற்கும் கீழே. இவனிடம் அப்படி என்ன கண்டுவிட்டு அவளிடம் அப்படியொரு துள்ளல்...

இன்னும் சில நொடிகளுக்கும், சில தப்படிகளுக்கும் கூடப் பொறுமை அற்றவளாகப் பாய்ந்து வந்து அவனைக் கட்டிக் கொண்டாள்.

எவ்வளவு அவசரம்! கேட்டால், தெய்வீகக் காதல் என்று கொச்சைப்படுத்துவார்கள். வெறும் இளமை ஈர்ப்பு. இது... இது எவ்வளவு நாள் தாங்கும்?

விலகியதும், செல்லமாக முதுகில் ஓர் அறை வாங்கினான்.

வெளிச்சம் வேகமாக மங்கி வந்தது.

சூழ்நிலை மறந்து, உலகமே அவர்களுக்குப் பொருட்டில்லை போல, கொஞ்சலும் சீண்டலுமாகத் துவங்க – அந்த விடலைகளின் விளையாட்டைக் கண்டு முகம் சுளித்தேன். வேறு





புறம் திரும்பிக் கொண்டேன். உற்சாகச் சத்தம் காதில் விழத்தான் செய்தது.

"ஏண்டா ராஸ்கல் லேட்?"

"பைக் டயர் வெடிச்சுடுச்சு ஸ்வேதா!"

"பொய்!"

"சேச்சே. வார் மெமோரியல்கிட்ட வரும்போது பின்பக்க டயர்ல"

"ஐ வார்ன் யூ! பொய் சொன்ன வாய்க்கு முத்தம் கிடைக்காதுன்னு பெரியவங்க சொல்லுவாங்க!"

சில்லறை கவிழ்த்தாற்போலச் சிரிப்பொலி.

எல்லாமே ஏமாற்று. இக்கால இளைஞர்களுக்கு 'காதல்' என்ற பெயரில் பிறிதொரு பொழுதுபோக்கு. எவ்வளவு விரைவில் 'காதல்' வயப்பட்டு, பழகி...

மூன்று வருடங்கள் முன்பு என் அலுவலக நண்பர் மகள் 'காதல்' என்று 'ஏமாந்து வந்த கசந்த அனுபவம் நினைவு வந்தது. பெண்ணின் வாழ்க்கை! வாய்விட்டு அழக்கூட இயலாமல் ரெகார்டு ரூமில் ரகசியமாக என் தோளில் சாய்ந்து கொண்டு அவள் விசும்பலுடன் விட்ட கண்ணீர்....

அடுத்த நாள் மாலையும், அதே இடம். திரும்பவும் அந்தத் தாடி இளைஞன்! எப்போ திருந்து தவமிருக்கிறேனோ, தெரியவில்லை.

ஐஸ் தடவின காற்று சுகமாக இருந்தது. தொலைவில் திரும்பும் கட்டு மரங்கள்; காத்திருந்த கப்பல்கள்.

தாடி வலிய வந்து ஸ்நேகமாகப் புன்னகைத்தான்.

பதிலுக்குச் சிரிக்கச் சிரமமாக இருந்தது.

"நேரம் என்ன சார்?"

சொன்னேன். வாட்ச் கட்டுவது அவ்வளவு நாகரிகம் இல்லை போலும்!

"உன் பேர் என்னப்பா?"

"கேஷவ்!" என்றான்.

இது என்ன பெயர்? கேசவன் என்பதை வக்கிரமாகச் சுருக்கி, காராசேவ் என்பது மாதிரி?

அன்றாடம் மாலை பீச்சிற்கு வருவது தவிர வேறு வேலை ஏதாவது செய்கிறானா...

"கேசவா!" என்று வேண்டுமென்று அட்சர சுத்தமாக உச்சரித்து அழைத்தேன்.

"என்ன சார்?"

"படிக்கிறியா?"

"பி.டெக். முடிச்சுட்டு மாருதி கெமிக்கல்ஸ்ல வேலை."

"உன் ஃப்ரெண்டு?"

"யாரு ஸ்வேதாவா?"

ஆமென்று தலையசைத்தேன்.

அவன் பதில் சொல்லவில்லை. கேசவ்வின் பார்வை தொலைவுக்குத் தாவி, நிலைத்திருந்தது. ஸ்விட்ச் போட்டாற்போல் திடுமென்று அவன் முகம் மகா ப்ரகாசமாகியது.



● மும்பை என்ற பெயர் எப்படி வந்தது தெரியுமா? பம்பாயின் பழங்குடி மக்களின் குல தெய்வமான மஹாஅம்பாஆயியின் (ஆயி=தாய்) ஆலயம் இப்போது விக்டோரியா டெர்மினஸ் இருக்கும் இடத்தில் இருந்ததாம். அதுவே மஹாம்பாயி, மம்பாய், மும்பை எனத் திரிந்ததாம்.

— அ. ஷண்முகசுந்தரம்

புரிந்து கொண்டேன். அந்த ஸ்வேதா வருகிறாள். இனி இவனுக்கு ஏனைய அனைத்தும் மறந்து போகும்.

"பை அங்கிள்!" என்று பரபரப்பாக ஓடினான்.

அங்கிள்! எவ்வளவு சடுதியில் இயல்பாக உறவு வைத்து நெருங்குகிறான்! இப்படித்தான் அந்த ஸ்வேதாவையும் செல்லமாக ஏதும் விளித்து வலித்திருப்பான்...

ஸ்வேதா பகட்டாக உடுத்தியிருந்தாள். கவலை அறியாத மேட்டுக்குடி போல.

இருவரும் உச்ச உற்சாகத்தில் துள்ளியபடி; மகிழ்ச்சியுடன் சளசளத்தபடி; கைகோத்து அலைகளில் கால் நனைத்தபடி.

வெள்ளை நாரை அலை ஒன்று பறந்து செல்வதைக் கவனித்தேன்.

பெற்றோர் பார்த்துத்தான் எனக்குத் திருமணம். என்ன கெட்டுப் போய் விட்டது. பரஸ்பரம் நானும் நலன் நாடும், வற்றா அன்பும் மரியாதையும் செய்து.... முப்பது வருட இன்ப வாழ்வு.

ம்கூம். எங்கள் தாம்பத்திய வாழ்வும், காதலும், அதன் ஆழமும் இவர்களுக்குப் புரியாது.

தாமதமாகப் பிறந்த என் ஒரே வாரிசு இப்போதுதான் பள்ளி இறுதியில். அவன் எதிர்காலம் பற்றி சிந்தனை எழ, எழுந்து கொண்டேன்.

அடுத்து வந்த மூன்று நாட்களும் மெரீனாவில் மேற்படி இளசுகளின் தரிசனம் தவறாமல் கிட்டியது. ஆனால் நான்காம் நாள் –

ஸ்வேதாவை ஏனோ காணவில்லை. கேசவ் பையன் தொலைவை வெறித்தவாறு அசைவின்றி உட்கார்ந்திருந்தான்.

வெகு நேரமாயிற்று. தாடி போரடித்துப் போய்க் கைகழுவி விட்டான் போலும்.

இருள் மெல்ல கவியத் தொடங்கியது. ஸ்வேதா ஏன் இன்னும் வரவில்லை? ஆவல் கூட, எழுந்து கொண்டேன்.

"வாங்க அங்கிள்!"

அவன் பக்கத்தில் போய் உட்கார்ந்தேன்.

"என்னப்பா நேத்துப் பொழுதுகளோட மலரும் நினைவுகளா?" என்று சிரித்தேன்.

என் நக்கல் புரியாமல் பெருமூச்சுடன் தீவிரமாக ஆமென்று தலையசைத்தான்.

"என்ன உன் ஸ்வேதாவைக் காணோமே?"

"இன்னிக்கு அவ வர மாட்டா. இன்னிக்கு அவளுக்கு ருட்டீன் மெடிகல் செக்கப். ரொம்பவும் களைச்சிருப்பா பாவம்."

"வழக்கமான மெடிகல் செக்கப்பா?"

"ஆமா. ப்ச்! என்ன பிரயோசனம்? டாக்டர்ஸ் அவளுக்குக் கெடு குறிச்சுட்டாங்க அங்கிள்."

"என்னப்பா சொல்றே? அவளுக்கு என்ன?" என்றேன் கலவரமுடன்.

"அவளுக்கு முற்றின புற்றுநோய். ஸ்வேதா வாழ்க்கை இன்னும் சில மாசங்கள்ல முடிஞ்சுரும்!"

"மைகாட்!" என்றேன் திடுக்கிட்டு.

சதா உற்சாகத்தில் துள்ளிய அச்சிறுமிசாவின் அருகிலா... அதிர்ச்சியில் உறைந்து விட்டேன். இவ்வளவு இள வயதிலா... என்ன ஒரு குரூர விதி...

சிறிது நேரம் மௌனமாக இருந்தோம். கரையுடன் போராடும் அலையோசை பெருத்துக் கேட்டது. என் மனம் சோகத்தில் கனத்திருந்தது.

பின், நிமிர்ந்து அந்த இளைஞனைக் கனிவுடன் பார்த்தேன்.

"ஹாட்ஸ் ஆஃப் கேசவ்! தினம் தவறாம இங்கே வந்து அந்தப் பெண்ணைச் சந்தோஷமா வெச்சுக்கற உன் செயல் மனிதாபிமானம் மிக்கது" என்றேன் நெகிழ்ந்த குரலில்.

விளங்காதவன் போல் என்னைப் பார்த்தான்.

"உன்கிட்ட ஒரு ரிக்வெஸ்ட்..."

"என்ன அங்கிள்?" என்றான் என்னை உற்றுப் பார்த்து.

"பாழும் விதி; ஸ்வேதா வாழ்வு இன்னும் கொஞ்ச காலம்தான். இறுதிமூச்சு வரை அவ மகிழ்ச்சியா இருக்கணும் கேசவ். அது உன் கையிலதான் இருக்கு."

'சரிதான்' என்பதாகத் தலையசைத்தான்.

"அதனால" என்றேன் தயக்கமுடன்.

"அதனால?"

"இதே போல தினம் தவறாம நீ ஸ்வேதாவைச் சந்திக்கணும்; விடாமக் காதல் செய்யணும்; தொடர்ந்து அந்தக் குழந்தை மகிழ்ச்சியில் இருக்கணும்; என்ன சில மாசங்கள் தானேப்பா..." என்றேன் தழுதழுப்போடு.

சரேலென்று கேசவ் மிகவும் விநோதமாக வேற்று கிரஹவாசியைப் போல என்னைப் பார்த்தான். அந்தப் பார்வை, என் உயிர் உள்ள வரை மறக்காது. பின் சர்வசாதாரணமான குரலில் சொன்னான் :

"அடுத்த வாரம், நான் ஸ்வேதாவைத் திருமணம் செய்துக்கப் போறேன் சார்."

## தனாகர்ஷண எந்திரங்கள்/சக்கரங்கள்

சர்வசக்தி வாய்ந்த முறைப்படி தயாரிக்கப்பட்ட இந்த எந்திரங்கள் தங்கள் இஷ்ட சித்தியை உடன் பூர்த்தி செய்கின்றன. ஜோதிட ஆகம சாஸ்திர முறையில் தயாரிக்கப்படும் இந்த எந்திரங்கள்/சக்கரங்களுக்கு உலகளவில் பெரும் ஆதரவு ஏற்பட்டுள்ளது. உங்கள் தேவைக்கு உடன் எழுதி பயன் பெறுங்கள்.

| | | ரக்ஷை ரூ. | எந்திரம் ரூ. |
|---|---|---|---|
| 1. | குபேர தனாகர்ஷணம் | 1000/- | 1500/- |
| 2. | ஜனாகர்ஷணம் | 1000- | 1500/- |
| 3. | ஸ்வயம்வரா | 750/-. | 1250/- |
| 4. | சந்தான கோபாலம் | 750/- | 1250/- |
| 5. | வாகீஸ்வரி | 750/- | 1500/- |
| 6. | மகாசூலினி | 750/- | 1500/- |
| 7. | தோஷ நிவர்த்தி தன்வந்திரி | 750/- | 1500/- |
| 8. | ப்ரத்யங்கிரா | 1000/- | 1500/- |
| 9. | மகா சுதர்சனம் | 750/- | 1500/- |
| 10. | மஹாலக்ஷ்மி ஸ்ரீ சக்ரா டாலர் | 200/- | 1500/- |

தங்கள் பெயர்,நக்ஷத்திரம் தெளிவான விலாசத்துடன் MO/DD SWAYAMVARALAYA (ஸ்வயம்வராலயா) பெயரில் சென்னையில் கிடைக்கக் கூடியதாக அனுப்புதல் வேண்டும் வெளிநாட்டு அன்பர்கள் 300% கூடுதல் தொகை அனுப்பி பெற்றுக் கொள்ளவும் அதிகச் சக்தி வாய்ந்த (SUPER POTENCY) ரக்ஷை/எந்திரங்கள் விலை தனியாகத் தெரிந்து கொள்ளவும்.

### ஸ்வயம்வராலயா

18, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம்,
சென்னை - 33, போன் : 425822, 4846427

TO SOLVE ALL YOUR PROBLEMS
CONSULT DIVINE ASTROLOGER, OCCULTIST
THETIYUR V MAHADEVAN WITH PRIOR APPOINTMENT.

# பொங்கல் விற்பனை

## 10% தள்ளுபடி

சர்ட்டிங்ஸ், சூட்டிங்ஸ், சேலைகள் மற்றும் ரெடிமேட் ஆடைகள் மொத்தம் மற்றும் சில்லறை விற்பனை
கிரடிட் கார்டுகள் ஏற்றுக் கொள்ளப்படும்



## ஸ்ரீ கிருஷ்ணா

கட்பீஸ் கலெக்ஷன் பிரைவேட் லிமிடெட்
39, கிடங்கு தெரு,
(பூக்கடை கார் நிறுத்தம் எதிரில்),
சென்னை - 1. 589596

பொங்கல் வரை எல்லா ஞாயிறும் விற்பனை உண்டு




ESTD : 1955

ஸ்ரீ

Ph : 24823
PH : 704312

# நேபாள் காசி யாத்திரை

29.3.97-ம் தேதி பங்குனி 16-ம் தேதி சென்னையிலிருந்து ஆரம்பமாகிறது. 23 நாட்கள் நித்திரை வசதி கொண்ட 3 Tier Sleeper கேரேஜ் புறப்படுகின்றது.

யாத்திரை மார்க்கம் - பண்டரீபுரம் – பம்பாய் ஆக்ரா மதுரா – ஜெய்பூர், டில்லி, அரித்வார் – ரிஷிகேஷ், அலகாபாத், அயோத்யா – காசி நேபாள் – கயா – கல்கத்தா வழியாக சென்னை சேர்கிறது.

2-ம் வகுப்பு ரயில் டிக்கெட் முழு பர்த் வசதி, காலை டிபன், மாலை 2 வேளை போஜனம், ரயில் கேரேஜிலேயே தங்கும் வசதி கட்டணம் உள்பட நபருக்கு ரூ. 6975/- நேபாள் யாத்திரைக்கு பஸ் சார்ஜ் ரூ. 1775/- தனி நபருக்கு ரூ. 2000 வீதம் அட்வான்ஸ் தொகையை செலுத்தி ரிசர்வ் செய்து கொள்ள வேண்டும். முழு விவரத்திற்கு நேரிலும் வரலாம். இந்த யாத்திரையில் திருச்சி, தஞ்சை, புதுவையிருந்தும் டிக்கெட் புக் செய்துள்ளனர்.

## 15 நாட்கள் கொண்ட பஞ்சதுவாரகை யாத்திரை

17.2.97 தேதி சென்னையிலிருந்து ஆரம்பமாகிறது. கட்டணம் ரூ. 3975 சென்னை, அகமதாபாத், கோமதி, துவாரகை, பேட்டி துவாரகை, நாகேஷ்வர், மூலதுவாரகை, போர்பந்தர், விர்பூர், அம்பாஜி, சோமநாத், டாக்கூர், துவாரகை, நாத்துவாரகை, காங்ரோலி துவாரகை, அஜ்மீர், ஜெய்ப்பூர், புஷ்கரம், உதயபூர், மவுண்ட் அபு மற்றும் பல க்ஷேத்திரங்கள்.

திருச்சி பாரத ஸ்டேட் வங்கி, திரு. P. ஞானசுந்தரம் – ராஜீ தம்பதியர், விழுப்புரம் திருமதி ராதா ஸ்ரீனிவாசன், குரோம்பேட்டை திரு. சி. ராமன் சரோஜா தம்பதியர், திருப்பத்தூர் திரு. சரவணன் தாயார், திருச்சி, மலைக்கோட்டை திரு. P. கருமுத்து தம்பதியர், சென்னை திரு. A. ஜெகந்நாதன், கோவை, திரு. K. விவேகானந்தன் பார்ட்டியாரும், அருப்புக்கோட்டை திரு A.T. ராசன், தமிழரசி, திரு N. பொன்னம்பலம், இந்திரா – திரு N. மணியர் – மல்லிகா தம்பதியரும், திருச்சி திரு மாணிக்கம், சிவகாமி – சுரேஷ். முதலானோர்கள் பதிவுசெய்துள் ளார்கள். இன்னும் 10 டிக்கெட்டுகளுக்கே இடம் உள்ளன. ரூ. 1000 வீதம் அட்வான்ஸ் அனுப்பி பதிவுகொள்ள வேண்டுகிறோம்.

விவரத்திற்கு ரூ. 2 ஸ்டாம்ப் அனுப்பி, முழு விவரங்கள் பெறலாம்.

### ஸ்ரீநாமகிரி டிராவெல் சர்வீஸ்,

34-A/2 அக்ரஹாரம், மேலசிந்தாமணி, திருச்சி - 2.

K.E. NAMPILLAI N.K. SEKAR



**குடிப்பழக்கத்துக்கு எதிரான ஒரு விழிப்புணர்வை— குறிப்பாக தங்கள் ஆண்களின் குடிப்பழக்கத்தால் நாள் தோறும் பாதிப்புக்குள்ளாகும் பெண்களிடம்— உருவாக்குவதற்காக 'சக்தி எக்ஸ்னோரா' என்கிற அமைப்பு புறப்பட்டிருக்கிறது. இதன் தலைவி ரேவதி! முழுமூச்சாக சமூக சேவையில் இறங்கியிருக்கும் ரேவதியுடன் ஒரு பேட்டி:**

**"பொதுவாழ்வில் உங்களது ஈடுபாட்டுக்கு மிஞ்சிப் போனால் இரண்டு வயது இருக்கலாம். சென்ற தேர்தலுக்குப் பின்பு தான் நீங்கள் பொதுமக்களோடு நேரடித் தொடர்பு கொள்ள ஆரம்பித்தீர்கள். இதற்குள்ளாக இப்படி ஒரு முக்கிய பிரச்னையை மேற்கொண்டு குடிக்கு எதிரான விழிப்புணர்வை— ஏற்படுத்தும் தகுதி உங்களுக்கு வந்து விட்டதாக நினைக்கிறீர்களா?"**

"சமூக சேவை செய்வதற்கு மற்ற எல்லாத் தகுதிகளையும் விட 'செய்ய வேண்டும்' என்ற 'சின்சியாரிட்டி' அவசியம். அந்தத் தகுதி எனக்கு இருப்பதாகவே நினைக்கிறேன். எங்கள் குடும்பத்தில் அநேகமாக அனைவருக்குமே சேவை மனப்பான்மை உண்டு. சின்ன வயதில், பார்வையற்றவர்களுக்கு பாடம் படித்துக்காட்டுவது, அவர்கள் தேர்வு எழுத உதவுவது போன்றவற்றில் நான் மகிழ்ச்சியாக ஈடுபட்டிருக்கிறேன்.. மனப்பூர்வமான ஈடுபாடு இருப்பதால் என்னால் இந்தப் புதிய பொறுப்பையும் செய்ய முடியும் என்றே கருதுகிறேன்."

**"நல்ல குணசித்திர நடிகையாக அனைவரின் அபிமானத்தையும் பெற்று வளர்ந்து கொண்டு வரும் உங்களுக்குச் சட்டென்று இந்த சமூக சேவை அக்கறை எப்படித் தோன்றியது?"**

"நடிகை என்ற ரீதியில் எனக்கு மக்களிடையே கிடைத்திருக்கும் ஆதரவை நல்ல முறையில் பயன்படுத்த வேண்டும் என்று மனத்தில் வளர்ந்த ஆர்வம்தான் காரணம். இந்த ஆர்வம் வரக்காரணம் இரண்டு பேர். ரஜினிகாந்த், மனோரமா. போலியோ சொட்டு மருந்துக்கு இவர்கள் இரண்டு பேரும் விளம்பரத்தில் பேசிய போது மக்களிடையே அது ஏற்படுத்திய விளைவுகளைக் கண்டு நான் வியந்து போனேன். மருத்துவமனைகளில் 'ஆச்சி மருந்து ஊத்துங்க' என்று தாய்மார்கள் கேட்டதை அறிந்தபோது சினிமா மீடியத்துக்கு இப்படி ஒரு 'ரீச்'சா... அடேயப்பா' என்று மூக்கில் விரல் வைத்தேன். அது போட்ட விதைதான் என்னுள் விசுவரூபமாய் வளர்ந்து விட்டது."

**மதுவிலக்கு என்பது அநேகமாக எல்லோருமே முயன்று, தோற்றுப் போன ஒரு துறை. கள்ளச்சாராயம் தலைமை தாங்கும் ஒரு சிக்கலான விவகாரம். அரசியல்வாதிகளும் பெரிய மனிதர்களும் மறைமுகமாக ஆசீர்வதிக்கும் விஷயம் இது. இவர்களை எல்லாம் ஊடுருவிப் போய் வெற்றி கொள்ள உங்களால் முடியுமா?"**

"எங்களது குறி, கள்ளச்சாராயம் அல்ல. நீங்கள் சொன்னபடி அது சிக்கலான

# "ரேவதி

விவகாரம்தான். நாங்கள் அங்கே மோதப் போவதில்லை. பெண்கள் இப்போது ஆண்களைச் சார்ந்துள்ள நிலையை மாற்றி, பொருளாதாரத் தன்னிறைவுக்கு வழிசெய்தால் ஆண்களை அதட்டிக் கேட்க— குடிகாரக் கணவன் குட்டக் குட்டக் குனியாமல் இருக்க— வழி பிறக்கும் என்பதுதான் எங்கள் அணுகுமுறை.



'வொகேஷனல் டிரெயினிங்' எங்கள் குறிக்கோள். தையல், சோப் தயாரிப்பு, ஊதுவத்தி செய்வது போன்ற சின்னச் சின்ன வாய்ப்புகள். சின்சியராகவும் சீரியஸாகவும் முயற்சிக்கப் போகிறோம்."

"'ஆல்கஹாலிக் அனானிமஸ்' என்ற அமைப்பை நீங்கள் அறிந்திருப்பீர்கள். முன்னாள் 'குடி' மக்கள் தாங்கள் அந்த சாக்கடையிலிருந்து மீண்டு வந்ததை ஒருவருக்கொருவர் சந்தித்து, பரிமாறிக் கொள்ளும் அமைப்பு. இவர்களை சக்தி எக்ஸ்னோரா பயன்படுத்திக் கொள்ளுமா?"

# மாறிவிட்டாள்!"

## – ரேவதி பேட்டி

" 'AA' பற்றி நான் அறிந்திருக்கிறேன். இவர்களை பயன்படுத்திக் கொள்ளும் திட்டம் இருக் கிறது."

"நீங்கள் சார்ந்திருக்கும் சினிமா உலகில் 'குடி' என்பது சர்வ சாதாரணம். அங்கிருந்து வந்திருக்கும் நீங்கள் 'மதுவுக்கு எதிரான ஒரு உணர்வை ஏற்படுத்தப் போகிறேன்' என்று சொல்வதை சிலர் கேலிக்கூத்தாகக் கருதலாம் இல்லையா?"

"திரையுலகின் ஒரு பலவீனம்தான் இது. ஆனால் எனக்கோ என்னைச் சேர்ந்த என் குடும்பத்தினருக்கோ இப்பழக்கம் இல்லை என்று இதய சுத்தியுடன் நான் இப்பணியை மேற்கொண்டிருக்கிறேன். நிச்சயமாக சிலர் 'உங்க ஃபீல்டுல இல்லாததா?' என்று கேலி பேசக்கூடும். அப்போது எனக்கு வக்காலத்து வாங்க முடியாதுதான். இது பற்றி நானும் யோசித்ததுண்டு. அப்படிப்பட்ட கேலிகளைப் பொருட்படுத்தாமல் நம் பணியைச் செய்ய வேண்டியதுதான்."

"சரி, படங்களில் உங்கள் கொள்கைக்கு எதிரான பாத்திரங்களை – அது சினிமா தானே என்று ஏற்று நடிப்பீர்களா?"

"சினிமா வேறு. எனது சமூக ஈடுபாடு வேறு. நான் இரண்டையும் போட்டு குழப்பிக் கொள்ள மாட்டேன்."

"நான் கேட்டது, சினிமாவில் ஒரு குடிகாரி வேடம் தரப்பட்டால் அதை ஏற்று நடிப்பீர்களா? என்பதுதான்."

"நடிப்பேன். நடிப்பது என் தொழில். ஒரு விஷயம் தெரியுமா? தமிழ் சினிமா வரலாற்றிலேயே எந்த ஒரு படத்திலாவது குடிகாரன் கடைசியில் வெற்றி பெற்றதாகக் காட்டியிருக்கிறார்களா, சொல்லுங்கள். இல்லை. எனவே ஒரு குடிகாரியாக நடித்து கடைசியில் தோற்பதாகக் காட்டினால் அதுவும் என் பிரசாரத்தின் ஒரு அம்சம்தானே?"

"நடிகையாக ஆரம்பித்த அன்றைய ரேவதிக்கும், நடிகை ப்ளஸ் சமூக சேவகி என்ற இன்றைய ரேவதிக்கும் சிந்தனை வளர்ச்சியில் ஏதேனும் வித்தியாசம் உண்டா?"

"நிச்சயமாய். என் சிந்தனை எப்படியெல்லாமோ வளர்ந்திருக்கிறது. எனக்குள் இப்போது நானே உணரும் வித்தியாசம் ஒன்று உண்டு. எந்தப் பொருளையும் வீணாக்குவது இப்போதெல்லாம் எனக்குப் பிடிப்பது இல்லை. உணவு, மின்சாரம், தண்ணீர் எதையுமே. பிறர் வீணாக்குவதைப் பார்க்க நேர்ந்தாலும் நான் பொங்கிப் போகிறேன். கல்யாண வீடுகளில் இலையில் சாப்பாட்டை வீணாக்கினால் என்னையுமறியாமல் அவர்களிடம் போய் சண்டை போடுகிறேன். அன்றைய ரேவதிக்கும் இன்றைய ரேவதிக்குமிடையே இது மிகப் பெரிய மாற்றம்."

"தமிழ்நாட்டு அரசியலில் சுயேச்சையாக நின்று வெற்றிபெற முடியாது. அப்படியே வென்றாலும் தனியாக ஏதும் குப்பை கொட்டி விட முடியாது. ஏதாவது ஒரு கட்சியின் முத்திரையைக் குத்திக் கொண்டால் தான் இங்கே அரசியல் வெற்றி சாத்தியம்



● ஒரு பெண், காரைக் கடை எதிரில் நிறுத்தக் கூடாத (நோபார்க்கிங்) பகுதியில் நிறுத்தி உள்ளே சென்றாள். திரும்பி வந்த போது ஒரு போலீஸ்காரர் காத்திருப்பதைப் பார்த்தாள். சந்திப்பு செய்யாமல் ஆட்டோ பிடித்து வீட்டுக்குப் போய், தன் கார் காணாமல் போனதாகப் புகார் செய்தாள். அரைமணியில் அப்போலீஸ்காரர் காரை கொண்டு வந்து நிறுத்தி, "நகரப் போலீஸின் திறமையைப் பார்த்தீங்களா?" என்று பெருமையடித்தபடி விடை பெற்றுச் சென்றார்.

நன்றி- "க்வோட்"
அ. ஷண்முகசுந்தரம்.

---

"கல்யாணத்துக்குப் போயிட்டு வாடா'ன்னு உன் பிள்ளையையும் என்னோட அனுப்பி வச்சியே... அங்கே என் மானத்தை வாங்கிட்டான்."

"எப்படி?"

"கல்யாணம் முடிஞ்சு செருப்பை மாட்டிக்கிட்டு கிளம் பறப்ப, 'அப்பா நீ வெறுங்கா லோடத்தான் வந்தே. உன்னோட செருப்பு வீட்டுல இருக் குப்பா!'ன்னு கத்தறான்!"

– ஆலத்தம்பாடிராஜகோபால்



என்ற சிந்தனையும் உங்களுக்கு வளர்ந் திருக்கிறதா?"

"இருபதே நாள் பிரசாரத்தில் நாற்பத்து மூவாயிரம் பேர் என் மீது நம்பிக்கை வைத்து எனக்கு வாக்களித்தார்கள் என்றால், வருடம் முழுவதும் உழைத்து என்னை நான் பக்குவப் படுத்திக் கொண்டால் சுயேச்சையாக வெற்றி பெற முடியாதா என்ன? அதே சமயம் நீங்கள் சொல்வதும் ஒருவகையில் சரி. கட்சி முத்திரை தேவைப்படத்தான் செய்கிறது."

**"பனிச்சென்று தீர்மானமாகச் சொல் லுங்கள். அடுத்த முறை தேர்தலில் நிற்கும் போது ஏதாவது ஒரு கட்சியைத் தேர்ந் தெடுத்து அதன் வேட்பாளர் ஆவீர்களா? அல்லது மீண்டும் சுயேச்சைதானா?"**

"அந்த நாள் வருவதற்குள், ஒரு சுயேச்சையாக வெற்றி பெறும் அளவுக்கு என்னை நான் பக்குவப்படுத்திக் கொண்டு விட்டேன் என நான் மனப்பூர்வமாகக் கருதி னால் சுயேச்சை தான். இல்லையெனில் ஒரு கட்சி முத் திரையை நாடுவேன்."

**" 'ரோல் மாடல்' என்று உங்களுக்கு யாராவது உண்டா?"**

"நிறையப் பேர். முதலில் மகாத்மா காந்தி. அவரது வாழ்க்கை என்னை வெகுவாகப் பாதித்து இருக்கிறது. அவரைப் பற்றி படிக்கும் போதெல்லாம் என்னுள் அவர் உயர்ந்து கொண்டே போகிறார். பெண்களில், ஆனந்தம் பாலாஜி. பட அதிபர் பாலாஜியின் மனைவி. இப்போது இல்லை. விருந்தோம்பல், நற்பண்புகள் இவற்றுக்கு அவரை விட வேறொரு உதாரணம் காட்டுவது கடினம். இப்படி நிறையப் பேர் எனக்கு ரோல் மாடல்கள்."

**"சக்தி எக்ஸ்னோராவில் உங்கள் பதவி, ஏற்கெனவே இருக்கும் உங்களது பான்யன், ஸ்வபிமான் அமைப்பு களின் மீதான ஈடுபாட்டை பாதிக்குமா?"**

"பாதிக்காது. ஏனெனில் மனவளர்ச்சி குன்றிய குழந்தை களின் மீது அக்கறை செலுத்துவது பான்யன். குடிசைப் பகுதிகளுக்குப் போகும்போது நான் அதையும் செய்கிறேன். ஸ்வபிமான் ஒரு வித்தியாசமான அமைப்பு. அது ஒரு ட்ரஸ்ட் போல. நடிகர் நாசரின் மனைவி கமீலா, ரோகிணி, ரஞ்சிதா, நான் சேர்ந்து ஆரம்பித்திருக்கிறோம். நல்ல விஷயங்களுக்குப் பொருளுதவி செய்ய நிறைய நல்ல உள்ளங்கள் தயாராக இருக்கின்றன. ஆனால் எது நல்ல விஷயம், யார் அதை உண்மையாகச் செய்கிறார்கள் என் பதை அவர்களால் தீர்மானிக்க முடிவதில்லை. நாங்கள் அவற்றை அடையாளம் கண்டு சொல்லி, உதவி தருபவர் – பெறுபவர் இருவருக்குமிடையே பாலமாகச் செயல் படுகிறோம். எனவே சக்தி எக்ஸ்னோராவால் எனது மற்ற ஈடுபாடுகள் குறைய வாய்ப்பே இல்லை."

**"இதைச் சாதித்து விட்டுத்தான் சாக வேண்டும்' என்பது மாதிரி ஏதேனும் உறுதியான குறிக்கோள் வைத்திருக்கிறீர்களா?"**

"இல்லவே இல்லை. வாழ்க்கை அலை எப்படி எல்லாம் என்னை இழுத்துக் கொண்டு போகிறதோ அப்படியெல் லாம் போய்க் கொண்டிருக்கிறேன். ஆனால் போகிற பாதையில் என்னால் முடிகிற இடங்களில் எல்லாம் முத்திரை பதிக்க ஆசை. மற்றவர்களுக்குப் பயனுள்ளதான ஒரு வாழ்க்கையை வாழ வேண்டும் என்பதுதான் இப்போதைய எனது குறிக்கோள்."

சந்திப்பு : **ராணிமைந்தன்**

படங்கள் : **யோகா**

# TV மர்சனம்



திரைப்படம் பற்றி. படத்திலிருந்து ஓரிரு காட்சிகளைத் திரையிட்டு, முன்ன தாகப் புண்ணியம் கட்டிக் கொண்டு விட்டது ராஜ் டீவி. ஒரு படம் உலக அளவில் பேசப்பட்டு, சில விருதுகளும் வாங்க வேண்டுமென்றால் அந்தப் படத்துக்கு என் னென்ன தகுதிகள் வேண்டும் என்பதை ஓரளவுக்குப் புரிந்து கொள்ள முடிந்தது. FIRE காட்சிகள் பார்த்ததிலிருந்து. மகா போல்டாக கெட்டவார்த்தைப் பிரயோகங்கள், படு ஸ்லோவாகக் காட்சி அமைப்புகள், ஓரினச் சேர்க்கை சமாசாரம் என்று படம் நெருப்புச் சுவையுடன் இருக்கும் போலிருக்கிறது. இங்கே ரிலீஸாவதற்கு நிறைய வெட்டுப் பட வேண்டும்.

●● டி.என்.சேஷனை சன் டீவியில் பேட்டி கண்ட பிரகாஷ் எம்.சுவாமி (வீரபாண்டியன் என்ன ஆனார்?) எழுதி வைத்துக் கொண்டு, இலக்கண சுத்தமாகக் கேள்வி கேட்டது என்னவோ மாதிரி இருந்தது. பரப்ரும்மம் மாதிரி, வேறு பக்கம் திருப்பின பார்வையை விலக்காமல் பேசிக் கொண்டிருந்தார் சேஷன். சேஷனிடம் கேட்க மலைமாதிரி விஷயங்கள் இருக்க, 'நீங்கள் ஞானியா? விளம்பர விரும்பியா? கர்மயோகியா?' எட்ஸட்ரா, எட்ஸட்ரா என்று பிரகாஷ் ஜல்வடிக்க, நமக்கு மட்டுமல்ல; சேஷனுக்கும் போரடித்திருக்கும்.

●● ஈ.எஸ்.பி.என்னில் இந்த வாரமெல்லாம் அஸாருதீன் திருவிழா தான். பிட்ச் ராசியோ, பிஜ்லானி ராசியோ-மனுஷன் வெளுத்து வாங்கியதை, மேட்சைவிட, ஹை-லைட் நிகழ்ச்சிகளில் அதிகம் ரசிக்க முடிந்தது. (இடைவெளி இல்லாததால்.) அதைவிடவும் அதிகம் கவர்ந்தது, பரிசளிப்பு விழாவில் அஸார் பற்றி டெண்டுல்கர் சொன்ன சில வார்த்தைகள். உதட்டிலிருந்தல்ல; உள்ளத்திலிருந்து உதிர்ந்த அந்தப் பாராட்டுச் சொற்கள், டெண்டுல்கர் சின்னப் பையன் அல்ல என்பதை நிரூபித்தது.

●● "தாத்தா வேஷம், மாமி வேஷம் என்று நடித்துவிட்ட நீங்கள் அடுத்த படத்தில் எப்படி நடிக்க ஆசைப்படுகிறீர்கள்?"

"டினோசார்களுடன் நடிக்க ஆசை!"

"நீங்கள் எதற்காகவாவது வருத்தப் படுகிறீர்களா?"

"பின்னால் செய்ய வேண்டியதை யெல்லாம் முன்னாலேயே செய்கிறேனே, அதற்காக!"

– கமலஹாசனுடன் எல் (EL) டீவி நடத்திய பேட்டி மிகவும் இயல்பாக இருந்தது. கேட்பவர்களுக்குப் புரியாத மாதிரி கமல் பேசுவதெல்லாம் தமிழில்தானே தவிர ஆங்கிலத்தில் அல்ல!

●● பரபரப்பாக ரொம்ப நாளாகப் பேசிக் கொண்டே இருந்தார்கள், ஷபானா ஆஸ்மி நடித்த FIRE

●● ஈ.எஸ்.பி.என்னில் இன்னொரு விஷயம். அதன் சொந்த விளம்பரத்தில் ஒரு ஆசாமி ரேஸ் காரில் வந்து நின்று 'லாலலா-லாலலா' என்று எதற்குச் சொல்கிறார் என்று தெரியவில்லை. நொடிக்கொருதரம் வரும் இந்த விளம்பரத்துக்கு யாராவது அர்த்தம் சொன்னால் கோடி புண்ணியம்!

●● பொன்னியின் செல்வனையோ, சிவகாமியின் சபதத்தையோ டீவி தொடராக எடுக்கப் போகிறேன் என்று பயமுறுத்துபவர்கள், ஸ்டார்மூவீஸில் வரும் பிரைட் அண்ட் பிரஜுடிஸ் தொடரைப் பார்ப்பது அத்தியாவசியம். விக்டோரியா காலத்து இங்கிலாந்தைப் படம்பிடிப்பதுடன் ஜேன் ஆஸ்டனின் அந்த ஒப்பற்ற படைப்பின் இலக்கிய, மொழி நயங்கள் சிதையாமல் உருவாக்கப்பட்டுள்ள ஆங்கிலத் தொடர்.

●● டிஸ்கவரியில் காட்டிய லேட்டஸ்ட் டிஸ்கவரி : காரைக் கழுவும்போதே அழுக்கு நீர் பூமியில் விழாமல் உறிஞ்சிக் கொள்ளும் வாக்குவம் க்ளீனர் பாணி கருவி. அழுக்குத் தண்ணீர் சாலையில் ஓடிப் போய், நல்ல நீர் அடங்கிய நீர் நிலைகளில் கலந்து தூய்மைக் கேடு உண்டாக்குகிறதாம்! இதைத் தவிர்க்கவே இந்தக் கண்டுபிடிப்பு. இதுவல்லவா சமுதாயப் பிரக்ஞை!

- டிவீ



# நேதாஜி

**ம**க்கள் நலனில் அக்கறையுள்ள ஒரு பத்திரிகையாளர். ஊருக்குக் கெடுதல் என்று, எங்கிருந்தோ வந்து சென்னையில் இறக்குமதி ஆகிற கெமிக்கல் தொழிற்சாலையை மூட வேண்டி, முதல்வருடன் நடுரோடில் சண்டையெல்லாம் போடுகிறார்.

திடீரென்று ஒரு கவர்னர் மீட்டிங்கில் குண்டு வெடிக்கிறது. ஆகவே தொழிற்சாலை விஷயத்தை விட்டு விட்டு, அதற்குப் போய் விடுகிறார்.

ஒரு தீவிரவாதக் குழு சென்னையை பஸ்பமாக்க விரும்பி, அந்த கெமிக்கல் ஃபாக்டரியைக் குறிவைக்கிறது.

ஏன் என்று கேட்கக் கூடாது. தொடர்ந்து பல கடும் சண்டைக் காட்சிகளுக்கு வாய்ப்பு வேண்டும் இல்லையா?

அடர்ந்த காடு ஒன்றில் சமஸ்தானம் மாதிரி கட்டிக் கொண்டு வாழ்கிறான் வில்லன். சென்னைக்குப் பக்கத்தில் இத்தனை பசுமையும் அடர்த்தியும் எங்கே இருக்கிறது என்று தெரியாமல் சிண்டைப் பிய்த்துக் கொள்ளலாம். சலூன் செலவு மிச்சம்.

இதற்கு நடுவே நம் ஹீரோவுக்கு ஒரு காதல் வந்து விடுகிறது. விசாரே. திடீரென்று எதிர்பாராதவிதமாகக் காதலிக்கத் தொடங்கி விடுவது போலவே எதிர்பாராவிதமாக டூ விட்டுக் கொள்கிறார்கள். மறுபடியும் எதிர் பாராவிதமாகப் பழம். மறுபடியும் டூ.

ஹீரோ எத்தனை டென்ஷனாகி விடக் கூடும்? வில்லன்கள் எதற்கு இருக்கிறார்கள்? போட்டு துவம்சம் செய்து விடுகிறார்.

முன்னதாக அவர் மேல் சில கிரிமினல் பொய்ச் சந்தேகங்கள் வேறு போகிற போக்கில் போடப்பட்டு விடுவதால் பழியைத் துடைக்கிற வேலை வேறு இருக்கிறது.

ஜெயிலிலிருந்து தப்பிக்கிறார். மாறு வேஷமெல்லாம் போடுகிறார். நடுநடுவே பாட்டு. டான்ஸ் வேறு. மறந்து விட்டேன். ஒரு விஞ்ஞானியை வேறு கடத்துகிறார். பிறகு காப்பாற்றவும் செய்கிறார்.

– மேற்சொன்ன விஷயங்களை ஒருவாறு படித்து, புரிந்து கொள்ள முயலவும். அநேகமாக இதுதான் கதை. திரைக்கதையும் இப்படித்தான் கண்டம் விட்டு கண்டம் தாவுகிறது.

படத்தில் வருகிற வில்லனுக்கு ஒரு வார்த்தை.

மக்களை அழிக்க, எதற்கு மெனக்கெட்டு குண்டு வைத்து, மாட்டிக் கொண்டு, உதை பட்டு, வதைபட்டீர்கள்?

உங்கள் செலவில் ஒரு நேதாஜி டிக்கெட் – போதாது?

**– ஆர்.பி.ஆர்.**

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : வி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - விமானத் தபால் : ரூ. 525/-.

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka